உ
சிவமயம்

# பிரமதருக்கஸ்தவம்

வடமொழியில்
விவரணத்தோடு

**ஸ்ரீமத் அப்பதீக்ஷிதர்**

அருளிச்செய்தது.

இது

வீணாகாநபுரஸ்த நல்லூராக்கியநகரநிவாச திராவிடபாஷாதுரீண
சுத்தாத்துவிதசித்தாந்த சைவவியவஸ்தாபக

**ஸ்ரீமந்நாவலர் பெருமான் பாததூளி**
சிரமேற்கொண்ட
யாழ்ப்பாணத்து
வட்டுக்கோட்டை

**ஆ. அம்பலவாண நாவலரால்**
ஷெ விவரணத்திற்கியைந்த பொழிப்புரையோடு
தமிழில்
மொழிபெயர்த்துச்செய்து

காரைக்குடி
**ராம. கு. ராம. சொக்கலிங்கச்செட்டியாரால்**

திருவெல்வேலி
*ஆரியப்பிரகாசிநி யந்திரசாலையில் அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.*


கலியப்தம் ௫௲௯.
மந்மத ஷு கார்த்திகை மீ.

# பிரமதருக்கஸ்தவம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### தேவாரம்.

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்பும்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார்.

## முகவுரை.

சர்வஜகத்காரணமாகிய பரப்பிரமம் சுத்தசாட்குண்ணியய பரிபூரணரும் பசுபதியுமாகிய சிவபிரானே என்பது சுருதி சிவாகமம் உபப்பிருங்கணம் பிரமசூத்திரமுதலிய சகலசாஸ்திரங்களினது முடிபு. இவ்வுண்மை முன்னைப்பல் பிறப்புக்களிற் செய்த பெருந்தவமுடையார்க்கே இனிது விளங்கும். ஏனையோர்க்கு விளங்காது. இஃது இங்ஙனமாக:

இக்கலிகாலத்தில் சிலர் காலகதியினாலும், தமது தவக்குறைவினாலும் சிவபிரானுக்குச் சமானமாகவும் அதிகமாகவும் ஏனைத்தெய்வங்களை மதித்து அவர்க்கே பிரமபாவம் கற்பித்து அதுபற்றியெழுந்த அவ்வம்மதத்திற் குப்புற்றுக் "கொடிறும் பேதையுங் கொண்டது விடா" வென்னுமிலக்கணத்தராய் அதனையே இறுகப்பற்றி அம்மட்டின் மாத்திரமாவது அடங்கி ஒழுகுதல் தமது பரிபாகவளவின் வைத்து நோக்க ஒருவாறு முறையேயாகவும் அங்ஙனமுமாகாது அம்மத துரபிமாநம் தம்மைப் பிடர்பிடித்துந்தச் சுருதிகளுக்கு விபரீதப் பொருளைக் கற்பித்து அவற்றின் வரம்பைக் கடந்து நித்தியமங்கள நிர்த்தோஷகந்த நிரதிசயசுக சுத்தசேதபதியாய்ச் சுருதிநாயகனாகிய சிவபிரான்மேல் தோஷங்களை ஆரோபித்துச் சிவதூஷகர்களாய்ச் சிவாபராதிகளாய்த் தாம் வழிபடுவதெனக்கொண்ட தெய்வத்தினது தீராமுனிவுக்குமிலக்காய் எரிவாய் நரகத்திற்கிரையாவாராயினர்.

இதனை இத்திராவிடதேசத்தில் கிருபாவசத்தால் சிவாமிசபூதராய் வந்தவ தரித்து வடநூற்கடன்முழுதும் நிலைகண்டுணர்ந்து சதுரதிகசதப் பிரபந்த கர்த்தாவெனப் பிரசித்தி பெற்றுச் சிவோபாசநாவிசிட்டராய் அற்புத மூர்த்தியாய் விளங்கிய ஸ்ரீகண்டவித்தியாகுரு ஸ்ரீமத் அப்பதீக்ஷிதர் கண்டு அச்சிவாபராதிகளுள் நல்லூழ்வந்துகைகூடப் பெறுவார் எவரேனும் உளரேல் அவர் ஒருகால் உண்மையுணர்ந்து உய்கினும் உய்கவென்றுதான், சிவோபாசகர்களாயுள்ளோர் தமக்குக் கிடைத்த உண்மை நிலையினருமை பெருமைகளை இனிதுணர்ந்து அதின் வழுவாதுறைத்து நின்று எளிதினுய்கவென்று தான் திருவுளமிரங்கிப் பரபக்ஷநிராகரணசுவபக்ஷஸ்தாபாரூபசைவ சித்தாந்தகிரந்தங்கள் பலவற்றையும் வடமொழியில் செய்தருளினர். அவற்றுள் இப் "பிரமதருக்கஸ்தவம்" ஒன்று. இது

மற்றையவற்றினும் எளிதில் விளங்கத்தக்கது.. இது சுருதி உபப்பிருங்கணம் பிரமசூத்திரம் என்னுமிவற்றால் பரப்பிரம்பாவம் சிவபிரானுக்கே பிரதிபாதிக்கப் படுமென்று தருக்கித்து நிச்சயித்த ஸ்தவ (ஸ்துதி) ரூபமாயமைந்தது. சிவாகமங்களிலோ சிவபரப்பிரம்பாவம் நிர்விவாதம். ஆதலால் அம்முத்திறப் பிரமாணங்கொண்டு சிவபரப்பிரமபாவம் தருக்கித்து நிச்சயிக்கவேண்டியதுதான் அத்தியாவசியகமாதலின் அம்மூன்றுமே. இந்நூலிற் பிரமாணங்களாக வேண்டப்பட்டனவாம். இவ்வுண்மையுணராது அறிவிலோர் சிலர் சிவாகமம் அத்தனை பிரமாணவலியுடையதன்றென்பதுபற்றி ஒதுக்கப்பட்டதென்று குரைப்பர்கள். அவரியல்பு இங்கே விரிப்பிற் பெருகும், அமைக. இப் “பிரமதருக்கஸ்தவம்" முந்தியபாகம் சாதகோபந்தியாசமும் பிந்தியபாகம் பாதகோத்தாரமுமென இரண்டு விபாகமுடையது. சாதகோபந்நியாசம் சுவபக்ஷஸ்தாபநரூபம். பாதகோத்தாரம் பரபக்ஷநிராகரணிரூபம்.

இது வடமொழிவல்லார்க்கன்றி ஏனையோர்க்கு உபயோகமாகாமையினால் தமிழில்வல்ல நம்மவர்களுக்கெல்லாம் எளிதில் உபயோகமாகும் பொருட்டு முன் திருவாவடுதுறைச்சைவசித்தாந்தஞாநபாநுவாகிய ஸ்ரீமத் சிவஞாநசுவாமிகள் ஷைதீக்ஷிதகிருத்த சிவதத்துவவிவேகத்தைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்த வழியே வழியாக ஸ்ரீமத் குருமூர்த்திகள் கிருபையே துணையாகக் கொண்டு அகப்பட்ட பல பிரதி ரூபங்களை வைத்துப் பரிசோதித்து ஷைதீக்ஷிதர் செய்த விவரணத்திற்கியைந்த பொழிப்புரையோடு சிற்றறிவினனாகிய நான் இது பெரியோர்க்கெல்லாம் அங்கீகாரமாய்ச் சிவப்பிரீ திகரமாமென்றெண்ணி இதனைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்தேன்.

இப் “பிரமதருக்கஸ்தவம்" அவ்வியபிசார சிவபக்தியை வளர்த்தற்குச் சிறந்த கருவியாயிருத்தலால் இதனைத் திராவிடர்களாகிய நம்மவர்களெல்லாம் சித்தசமாதாநத்தோடு குருமுன்னிலையில் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து சிவபாரம்யபுத்தியும் சிவபத்தியும் மிக்குடையராய்ச் சிவோபாசநை செய்து சிவப்பிரசாதம் பெற்றின் புற்று வாழக்கடவர்கள்.

# பிரமதருக்கஸ்தவம்

உ
சிவமயம்.

சைவசமயிகளுக்கு விக்கியாபநம்.

நம்மவர்களே,

நமக்கெல்லாம் அநுகூலமாக ஸ்ரீமத் அப்பதீக்ஷிதர் முதலியோர் வடமொழியில் செய்த சைவஸ்தாபா நூல்களுள் இதுவரை மொழி பெயர்க்கப் படாதவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்துவெளியிடுதல் வேண்டுமென்பது எனது விருப்பம். சைவசமியாபிமாகமும் சிவபத்தியுமுடைய தநபதிகள் இதற்கு வேண்டிய திரவியசகாயம் செய்வார்களாயின் அவ்விருப்பம் எளிதில் முற்றுப்பெறும். அப்படிச் செய்வது சமயவுணர்ச்சி குறைந்து இக்காலகதியை நோக்கும் போது, அத்தியாவசியககர்த்தவ்விய உத்தமகௌரவசிவபுண்ணியமாம்.

சிவபிரானது ஸ்வரூபமும் அவரை வழிபடும் நமது ஸ்வரூபமும் நமக்கு வாய்த்த உண்மை நிலையாகிய சைவசமயத்தினது ஸ்வரூபமும் உள்ளபடி அறிந்து அவ்வறிவோடு கூடி நின்று அச்சிவபிரானை வழிபடும் வழிபாடுதான் சேதநமாகிய உண்மை வழிபாடாம். அவ்வறிவோடு கூடாது செய்யும் வழிபாடு அசேதநமாகிய உபசார வழிபாடாம். அவ்வுண்மை வழிபாட்டிற்குப் பலம் அதிகம். இவ்வுபசார வழிபாட்டிற்குப் பலம் அற்பம். அவ்வுண்மை வழிபாட்டை விரும்புவோர் அவ்வறிவை உடையராதல் வேண்டும். அவ்வறிவென்பது கேவலம் சொன்மாத்திரத்தால் மேலிட்டு நோக்காது உள்ளிட்டு நோக்கின் இம்மாநுட ஜநநம் எடுத்த முக்கியப் பிரயோசநம் அதுவேயாம். இது சுருதி யுத்தி அநுபவம் மூன்றற்கும் ஒத்த துணிவு. ஆதலால் அவ்வறிவை உதிப்பிப்பனவும் வளர்ப்பனவும் நுகர்விப்பனவுமாய்ச் சுருதிசிவாகமசாரங்களாகப் பெரியோர்கள் முன்செய்து வைத்த சைவஸ்தாபா நூல்களை வெளியிடுவதும் திரவியசகாயம் செய்வதும் உத்தமகௌரவசிவபுண்ணியமென்பது சித்தமேயாம்.

இப்படிச் செய்வதனால் அந்நூல்களை ஓதும் அவ்வவரறிவில் முன்னிருந்த கல்மஷம் நீங்க அவ்வறிவு பிரசநநமாம். பிரசநநம் = தெளிவு. பிரசந்நமாகவே அங்கே அறிவுக்கறிவாய்த் தோன்றாத் துணையாயிருந்த சிவம் அவ்வறிவும் தானும் பேதமின்றி ஒன்றாகவே பிரகாசித்து நிலைபெறுவதாம். ஸ்வரூபசுகாகாரமாகிய சிவம் அப்படிப் பிரகாசித்து நிலைபெறுவதாகவே அச்சிவமே மூர்த்திமானாகவும் அச்சிவம் பேதமின்றிப் பிரகாசித்து நிலை பெறும் சுத்த உயிரறிவே சிவலிங்கமாகிய மூர்த்தியாகவும் அதற்கிடமாகிய உடலே சிவாலயமாகவும் உடலென்னும் ஆலயத்தில் உயிரென்னும் மூர்த்தியில் சிவமென்னும் மூர்த்திமானைப் பிரதிட்டை செய்த மகாபுண்ணியம் வந்து கைகூடுகின்றது. அது கை கூடவே சைவஸ்தாபந நூல்களை வெளியிட்டவதனால் காலந்தோறும் எத்தனை கோடி பேர் அவற்றை ஓதுவார்களோ அத்தனை கோடி சிவலிங்கப்பிரதிட்டை செய்த மகாபுண்ணியம் வந்து சேருமென்று நிராக்ஷேபமாகக் கணக்காகின்றது. இது சத்தியம். இதனை யார்தாம் மறுக்கவல்லவர்?

# பிரமதருக்கஸ்தவம்

அம்மட்டோ, தருமங்களுக்குச் சுகபலம் சொல்லி அவற்றை விதிப்பனவும் அதருமங்களுக்குத் துக்கபலம் சொல்லி அவற்றை விலக்குவனவும் அதனால் நம்மைத் தருமத்தில் முயல்விப்பனவும் அதருமத்தில் உயல்விப்பனவும் நூல்களே யாதலால் நாம் செய்யும் தேவாலயமடாலய முதலிய சிவதருமங்களுக்கெல்லாம் காரணதருமமாய் முந்திநிற்பது சைவஸ்தாபக நூல்களை வெளியிடுதலாகிய இஃதொன்றேயாம். இதனை யார்தாம் மறுக்கவல்லவர்?

இவ்வுண்மையினாலன்றே இப்பிரபஞ்சசமுகம் முழுதும் தமது ஸ்வமாகத் தமது ஆன்மநாயகராகிய சிவபிரானே தமக்கு வேண்டியன வேண்டியன வேண்டுழி வேண்டுழி எதிர்நின்றுபகரிப் பவராகப்பெற்ற சர்வஸ்வாமிகளும் பிரபுக்களுமாகிய எம்பெருமக்கள் சமயாசாரியர்கள் அநாதிசித்தசுருதிசாரமாகிய திராவிட சூக்திகளை வெளிசெய்து சைவஸ்தாபநம் பண்ணினார்கள். அவர்கள் அவற்றை வெளிசெய்து சைவஸ்தாபநம் பண்ணாவிடின் சைவசமயம் எங்கே? சிவாலயம் எங்கே? சிவதருமங்கள் எங்கே? விபூதிருத்திராக்ஷம் எங்கே? நமது சைவபரம்பரை எங்கே? முன்னும் பின்னும் அப்போதப்போது பெரியோர்கள் பலரும் ஆசாரியர்களாய் வந்து அந்தந்தக்காலோசிதமாகிய நூல்களை வடமொழி தென்மொழி இரண்டினும் செய்து வெளியிட்டபுண்ணியந்தான் நம்மனோரெல்லாம் இப்போது சைவசமயிகளாய் விபூதிருத்திராக்ஷதாரணம்பண்ணிச் சிவோபாசகர்களாய் இகபரமிரண்டிற்கும் தகுந்த ஊதியம் பெற்றோமென்றெண்ணி இறுமாந்துவாழும் வாழ்க்கை, நாம் செய்யும் ஸ்நாநம் சந்தியாவந்தநம் செபம் பூசை தியாகம் சமாதி முதலிய ஆன்மார்த்த புண்ணியங்களும் ஆலயம் மடம் சத்திரம் நந்தவநம் தண்ணீர்ப்பந்தல் அறச்சாலை முதலிய பரார்த்த புண்ணியங்களுமாகிய இவையெல்லாம் நமது பூர்வாசாரியர்கள் செய்து வெளியிட்ட சைவஸ்தாபந நூல்களை வைத்து வந்த காரிய புண்ணியங்களே வேறில்லை. ஆதலால் சமஸ்தசிவதருமங்களுக்கும் காரணதருமமாய் முந்திநிற்பது சைவஸ்தாபந நூல்களை வெளியிடுதலாகிய இஃதொன்றேயென்பது சித்தமேயாம்.

சிவாராதநசிவத்தியாநபரராய்ச் சற்கருமாநுட்டாநசீலராய் ஒதுங்கியிருந்த நமது தீக்ஷிதர் பெருமான் அந்நியசமயிகளது தூர்ப் போதநையினாலும் துர்ப்பிரயத்திநங்களாலும் நமக்குப் பற்றுக்கோடாகிய சைவசித்தாந்தத்திற்கு இடையூறுவிளைந்து சமயநிலை தடுமாறிய நிலைமைகண்டு அந்தோவென்றிரங்கித் தமக்கு நேரும் சரீரசிரமத்தை நோக்காமலும் பகைவர்களால் தமது பிராணஹாநிக் கேதுவாய் அடிக்கடி விளைந்த விக்கிநபாகுள்ளியத்துக்கு அஞ்சாமலும் சிவாராதந பலத்தை முன்னிட்டு அதனை ஜயித்துத் தமது. அரியகாலத்தையெல்லாம். இதற்கென்றே பெரிதும் விநியோகித்து மூலைமூலைகளில் தெரியாது மறைந்து போன அரும்பொருள்களையெல்லாம் வெளியாக்கி ஒருமுகமாகச் சேர்த்து வடமொழியில் அபூர்வமாகிய அநேக நூல்களை இயற்றி நமது சைவத்திற்கு இடையில் முறிவு நேராது அதனைப் பிரதிட்டை செய்து நாம் சிவேரபாசநாசீலர்களென்னும் கௌரவத்தை நமக்களித்து நம்மை மேன்மக்களாக்கி வைத்த பெருங்கருணைக்கு நாம் என்ன கைம்மாறு செய்வோம்?, நமது தீக்ஷிதர்பெருமானுக்குப் பகைவர்களால் பிராணஹாநிஹேதுவாய் விக்கிநபாகுள்ளியம் விளைந்தும் அவர் அதற்கு அஞ்சாதுநின்று அதனை ஜயித்த பெருமையை அவர் செய்த "நிக்கிரகாஷ்டகம்" என்னும் பிரபந்தமே வாய்திறந்து

சொல்லும் அவர் செய்த நூல்களுள் பல காணப்படாதன சிலமாத்திரம் காணப்படுவனவாகின்றன.

காணப்பட்டனவாய்த் திராவிடர்களாகிய சைவசமயிகளுக்கு இன்றியமையாத அவ்வுபகார நூல்களுள் முன் வெளிவந்தன போக ஏனையவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துச் செய்துவெளியிடுதலும் பௌஷ்காம் மிருகேந்திரம் சித்தாந்த சாராவலி முதலிய சிவாகமஞாநபாத நூல்களை வடமொழியிலிருந்தபடியேனும் தமிழில் மொழி பெயர்த்துச் செய்தேனும் வெளியிடுதலும் அவசியமென்பது எனது கருத்தும் விருப்பமும் முயற்சியும். இதனை முயன்று முடிப்பதும் முடிப்பிப்பதும் சைவசமயப் பிரதிட்டையென்னும் மகாகௌரவ சிவபுண்ணியமாம்.

இதனை நமது சைவசமயிகளாகிய தநபதிகள் சற்றே சிந்சிக்கக்கடவர்கள்.

உலகர்களைப் பிரீதி செய்து உடலோம்பற்றே பொய்த் தொண்டு பேசும் தமியேனது இம்முயற்சி தம்மைப் பிரீதி செய்து உயிரோம்பச் செய்யும் மெய்த்தொண்டாய்ப் பரிணமித்து நிர்விக்கிநபரிசமாப்தி அடையும் பொருட்டும் இதற்குச் சகாயம் செய்யும் நம்மவர்கள் சர்வாபீஷ்டசித்தி எய்தி இன்புற்று வாழும் பொருட்டும் திருவருள் சுரக்கும்படி கிருபாசமுத்திரமாகிய ஸ்ரீகாந்திமதியம்பா சமேதசாவிவாடீசுவரர் உபயசரணாரவிந்தங்களையும் பணிந்து பிரார்த்திக்கின்றேன்.

மந்மத - ஹூ
கார்த்திகை - மீ
திருநெல்வேலி,



அ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரமதருக்கஸ்தவம்.

## தற்சிறப்புப்பாயிரம்

### விநாயக வணக்கம்.

வர்மலிவடசொல்லதனின்மாமறையோனப்பதிக்கிதன்முனம் வகுத்த
பிரமமெய்த்தருக்கத்தவத்தை மெய்யுணர்ந்தோர்பேணுமின்றமிழினாலுனாப்பச்
சிரமிசைமதியுங்கங்கையுமிலைந்தசிவனுமையொடுதழீஇச்சிறந்த
திரமலிநால்வாய்முக்கண்வாரணத்தின்சேவடிசென்னிசேர்த்திடுவாம்.

### ஸ்ரீ ஞானசம்பந்தகுரு வணக்கம்.

அன்னையாயெனையீன்றமுதளித்துறுதியத்தனாயறிவுறுத்தருளி
நன்னயம்புணர்க்குந்துணைவனாயின்பநல்குநற்றோழனுமாகிப்
பின்னுநாவல்லபெருந்தகையாகிப்பிறங்கருட்குருசிகாமணியாய்த்
துன்னிநின்றெனையாண்டருள்புரிகாழித்துரைப்பதந்தொழுதுவாழ்த்திடுவாம்.

### நூல்.

**வேதத்தின்முடிபாமுபநிடத்துரைகள்விதந்தபஃறிறத்தவற்றாலு**
**மோதுமெய்ச்சுருதிகணங்களின்விளக்காமுபப்பிருங்கணங்கடம்மாலு**
**மியாதொத்தவன்பிற்புலனெறிச்செலாதோர்க்கிறைஞ்சிடுபொருளெனப்படுமெந்**
**நாதசங்கரபூரணவந்தப்பிரமநீயென்நாட்டுதுமன்றே.** 1

என்பது வேதசிரசுகளென்னும் உபநிடதவசநங்களாகிய விதப்பு வாக்கியங்கள் பலதிறத்தனவற்றாலும் சுருதிகணங்களாகிய அவற்றை விளக்கும் உபப்பிருங்கணங்களினாலும் பிரமசூத்திரத்தினாலும் முமுட்சுக்களாலு பாசிக்கப்படுவதென்று ஆதரித்துப் பிரதிபாதிக்கப்படும் பிரமம் சிவபிரானே யென்பது இந்நூலின்கண் நாட்டப்படுமென்பதாம்.

அரசற்கு வெண்கொற்றக்குடை போலப் பிரமத்துக்கு அசாதாரண விலக்கணமென்னும் சிறப்பியல்பு சர்வகாரணத்துவமென்னும் முழுமுதன்மை. ழுமுதன்மையாகிய சிறப்பியல்புபற்றிப் பிரமப்பொருளை விளக்கு முபநிடதவசநங்களாகிய காரணவாக்கியங்கள் இங்கே விதப்புவாக்கியங்க ளெனப்பட்டன. (விதந்த) அஃறிணைப்பலவின்பாற் படர்க்கை வினையாலணையும்

# பிரமதருக்கஸ்தவம்

பெயர். பிரமவிடயத்துவத்தில் விவாதத்துக்கு இடனாகாமையால் பிரமபரவாக்கியங்களுள்ளே பிரகிருட்டங்களாகிய அவ்விதப்புவாக்கியங்கடாம், "சௌமிய, இது சத்தே முதற்கணிருந்தது" என்பது முதலியனவாய் அதன்பால் சகலபிரபஞ்சசிருட்டிருத்துவத்தைப் பிரதிபாதிப்பன சில, "இவன் பூதபதி இவன் பூதபாலன்" என்பது முதலியனவாய் அதன்பால் அதனது பாலகத்துவத்தைப் பிரதிபாதிப்பன சில, "எவனுக்குப் பிரமமும் க்ஷத்திரமும் இரண்டும் ஓதனமாம் எவனுக்கு மிருத்தியு உபசேசநம் அவன்யாண்டு இங்ஙனம் எவன் அறிகின்றான்" என்பது முதலியனவாய் அதன்பால் அதனது பிரவிலாபகத்துவத்தைப் பிரதிபாதிப்பன. சில, (ஓதனத்துவநிரூபணத்தினாலே பிரவிலயமென்பது சூசிக்கப்பட்டதன்றே) "எவனை இந்த உலகங்களினின்றும் உயர்த்த இச்சிக்கும் அவனை இவன்றானே சாத கருமத்தைச் செய்விக்கும், எவனைக் கீழே நழுவுவிக்க இச்சிக்கும் இவன்றானே சாதுகருமத்தைச் செய்விக்கும்" என்பது முதலியனவாய்ப் பிராணிகடோறும் முறைப்பட்டமைந்த வேற்றுவேற்றியல்பிற் சுகதுக்கபோசயி திருத்துவத்தைப் பிரதிபாதிப்பன சில, "இந்த அக்கரனது ஆணையிற்றானே,. கார்க்கி, சூரிய சந்திரர்கள் மறவாது நிலைபெறும். இவன்பாற் பயத்தினால் வாயு சுழலும். பயத்தினால் சூரியனுதிக்கும். இவன்பாற் பயத்தினால் அக்கினியும் இந்திரனும். மிருத்தியு ஓடும் பஞ்சமம்" என்பது முதலியனவாய்ச் சந்திரன் சூரியன் அநலன் வாயு முதலிய சகல சேதநாசேதநங்களிலும் முறைப்பட்டமைந்த சோதிச்சக்கரப் பிரமணம் ஊர்த்துவச்சுவலநம் திரியக்கமநம் முதலிய இயற்கைய விசேடவியவஸ்தாபகத்துவத்தைப் பிரதிபாதிப்பன சில, "இவன் எவனை வரிக்கின்றான் அவனாற்றானே யடையப்படும். இந்த ஆன்மா அவனுக்குத் தன்னதாகிய தநுவை விரிக்கின்றான்" என்பது முதலியனவாய் மோசகஞான சம்பாதநமுகத்தால் முத்திப்பிரதத்துவத்தைப் பிரதிபாதிப்பன சிலவாய்ச் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகமென்னும் இத்திறத்துக் காரணத்துவவகைகள் பலவற்றையும் தனித்தனி விளக்கிப் பலதிறப்பட்டு வருதலின் அது தோன்ற ஈண்டுப் "பஃறிறத்த" வெனப்பட்டன. அப்பலதிறத்துக் காரண வாக்கியங்களுக்கெல்லாம் சிவபரியவசானத்தைப் பிரதிபாதிக்குமியல்பால் அவற்றை வெளிசெய்தெடுத்து விவகரித்து விளக்குவனவாகிய புராணவிதிகாசங்கள் அவற்றிற்கு உபப்பிருங் கணங்களெனப்படும். எண்ணின்கண்வந்த எச்சவும்மையால் பிரமசூத்திரமும் ஈண்டுக் கொள்ளப்படும். இவற்றால் யாது ஒத்தவன்பிற் புலனெறிச்செலாதோர்க்கிறைஞ்சி பொருளெனப்படும், அந்தப் பிரமம் நீயே யென நாட்டுதுமென முடிக்க. நியாயங்களால் நிச்சயிக்குது மென்றபடி. ஈண்டு நீயே பிரமமெனச் சாமானாதிகரணியத்தால் சிவபிரானுக்கே பரப்பிரமபாவம் உண்டெனபது தோத்திரப்பிரதிபாத்தியமாகிய முக்கியார்த்தமாதல் குறிப்பிக்கப்பட்டது. அதுதான் ஆண்டுச் சாதகோபந்நியாசம் பாதகோத்தாரணமென்னு மிருதிறத்தானும் பிரதிபாதிக்கப்படும். அவ்விருதிறத்துள் சகல காரணவாக்கியங்களுக்கும் சிவபிரான்பாற் பரியவசானம் செய்யும் ஔபநிடதவசநங்கள் சாதகங்களாமாறு முதலடியாலும், அவற்றிற்குப் பிறர்பாற் பரத்துவமுட் கொண்டு சங்கிப்பார் கூற்றை மறுத்தலால் சுவாபிமதார்த்தத்தில் பிராமாண்ணியப்பிரதிட்டாபனம் உபப்பிருங்கணமுகத்தால் செய்யப்படுமாறு இரண்டாமடியாலும் குறிப்பிக்கப்பட்டன. நீயே பரதத்துவமென்னுமித்தொடக்கத்து வேறுதிறத்தாற் கூறாது நீயே

# பிரமதருக்கஸ்தவம்

பிரமமென்னுமித்திறத்தாற் கிளந்தது, யாண்டுச் சிவபிரான் சொல்லற்பாலனென அறியப்படும், ஆண்டு அடையடுக்காத தனிமொழியாகிய பிரமபதப்பிரயோகமும், எந்த வாக்கியம் பிரமவிடயத்துவத்தால் நிர்ணயிக்கற்பாலது ஆண்டு நிர்ணாயக முறையால் சிவாபிதாநச்சுருதியுபந்நியாசமும் செய்யும் துவைபாயநர் கொள்கை சிவபிரானுக்குப் பரப்பிரம்பாவம் பிரதிபாதிக்கும் சுருதிகட்கு அநுக்கிராக்கமுறை மையுடைத்தெனத் தெரிவிக்கப்படுமென்னும் இப்பொருள் குறிப்பித்தற்கென்க. முதனூலாசிரியர் நிச்சயிக்குது மென்னாது (தர்க்கயாம) "தருக்கிக்குது" மென்று கிளந்தது பாதகோத்தாரண முழுதும் நியாயங்களாற் பெரிதும் செய்யப்படுமாறு குறிப்பித்தற்கென்றமையின் அதுதோன்ற ஈண்டு நாட்டுதுமென்றாமென்க. சாதகோபந்நியாசம் பாதகோத்தாரணமென்னுமிவ்வுபய வித்தருக்கத்தினாலும் பிரமப் பொருளென்று நிச்சயிக்கப்பட்ட முதல்வனருள் நாடிநின்று அத்தருக்க முழுதையும் அவன்றிருவடிக்கட் சமர்ப்பித்த ஸ்தவரூபமாயியற்றப்பட்டது இந்நூலாதலின் இது பிரமதருக்கஸ்தவமென்று பெயர்த்தாயிற்று, ஸ்தவம், ஸ்தோத்திரம், ஸ்துதி. துதி என்பன ஒருபொருட்சொற்கள். இச்செய்யுளால் இந்நூல் நுதலிய பொருள் இனைத்தென்பது தொகுத்துணர்த்தப்பட்டது. (1)

**யாதுமெய்ப்பிரமவிலக்கணமாதல்சுருதிசூத்திரசித்தஞான**
**போதவம்முதன்மைசிகைமுதலவற்றாற்புரிந்திடப்படுவதாமுறுவர்க்**
**கோதியசுவேதாச்சுவதாமதனாலுய்த்திடப்படுவனவாகித்**
**தாதையெம்மானேகாரணவுரைகணின்னிடைச்சமர்ப்பிக்குந்தானே.** **2**

(எ-து). சுருதியினாலும், பிரமசூத்திரத்தினாலும் பிரமவிலக்கணமென்று நிச்சயிக்கப்பட்ட முழுமுதன்மையை அதர்வசிகைமுதலியவற்றால் அநுமோதிக்கப் படும் சுவேதாச்சுவதரவுபநிடதத்தில் பிரேரிக்கப்படுவனவாகிய காரண வாக்கியங்கள் சிவபிரானிடத்திற்றானே சமர்ப்பிக்குமென்பதாம்.

பிரம சூத்திரம் வியாசர் அருளிச்செய்தது. இது பிரமமீமாஞ்சையென்றும் வேதாந்தசூத்திரமென்றும் பெயர்பெறும். "எதனிற்றான்" என்பது முதலிய சுருதியினாலும் பிராமசூத்திரத்தினாலும் பிரமத்திற்குச் சிறப்பியல்பு என்று முடிந்தது எது அது சகத்தினது தோற்றம் நிலை முதலியவற்றிற்குக் காரணனாதலென்னுமவ் வியல்பன்றே! அதனைக் காரணவாக்கியங்களெல்லாம் சிவபிரான்பாற்றானே சமர்ப்பிக்குமென்பது ஈண்டு மேற்கோள். அதன்கண் எதுவை உட்கொண்டெழுந்த விசேடணமாக 'உறுவர்க்கோதிய சுவேதாச்சுவதரமதனாலுய்த்திடப்படுவனவாகி' என்றுரைக்கப்பட்டது. சுவேதாச்சுவதரங்களுக்கு மந்திரோபநிஷத்து அத்தியாச்சிர மோபநிஷத்து என்றும் பேர் சொல்லப்படும். அத்தியாச்சிரமிகள் பொருட்டுப் "பரமம், பவித்திரம், இருடி குழாங்களால் இனிது சேவிக்கப்படுவதனைச் சொன்னான்" என்று ஆண்டே சுவேதாச்சுவதரமகாவிருடியினால் அத்தியாச்சிரமிகள் பொருட்டு உரைக்கப்பட்டமை கேட்கப்படுத்தலானென்க. இவ்வியல்பு தோன்ற 'உறுவர்க்கோதிய சுவேதாச்சுவதர' மென்றுரைத்தாமென்பது, 'உறுவர்' ஈண்டு அத்தியாச்சிரமிக ளென்னும் பொருட்டு, அவ்வுபநிஷத்திற்றானே பிரமவாதிகள் சொல்லுமாறு "காரணமாகிய பிரமம் எது? எதனிற் பிறத்தலையுடையேம்? எதனாற் சீவித்தலையுடையேம்? எதன்பால் சம்பிரதிட்டை? எதனால் அதிட்டிக்கப்பட்டுச்

சுகேதரங்களில் வர்த்திக்கின்றேம்? பிரமவிதோ வியவஸ்தை?" என்று சகற்காரணம் பிரமம் என்னுமித்துணையே உணர்ந்து அதனை விசேடித்துணரப்பெறாத பிரமவாதிகளாகிய இருடிகள் சிலர் அதன் நிர்ணயத்தின் பொருட்டுச் செய்த விசாரப்பிரவிர்த்தி சொல்லப்பட்டது. ஆண்டுக் "காரணமாகிய பிரமம் எது" என்று பொதுவகையாற் காரணமாகிய பிரமத்தில் சந்தேகம் உணர்த்தப்பட்டது. "எதனிற் பிறத்தலையுடையேம்" என்பது முதலிய ஐந்து வாக்கியங்களினால் அக்காரண விடய சந்தேகமே காரியபூதஜநநஜீவநம் முதலிய பிரதியோகிபேதத்தால் ஐந்து பிரகாரமாக விரிக்கப்பட்டது. ஆண்டுப் 'பிரமவிதோ வியவஸ்வதை' என்னும் ஐந்தாவது வாக்கியத்தில் 'எதனால்' என்று கூட்டிக்கொள்க. அதனால் வியவஸ்தை என்பதற்குச் சந்திரசூரியாதி வஸ்துவியவஸ்தையென்றேனும் விசிட்டாவஸ்தா ரூபமாகிய முத்தியென்றேனும் இரண்டு பொருள் கோடற்கிடனுண்டு. வியவஸ்தை எதனாற் செய்யப்படும் என்றபடி. முதலாவது பொருட்கோளில் பிரமவித்துக்காள் எனப் பலர் ஒருங்குகூடிய குழாத்தில் ஒருவரையொருவர் விளித்து விசாரித்த விளி வேற்றுமையாகும். இரண்டாவது பொருட்கோளில் பிரமவித்துக்களது வியவஸ்தை என ஆறாம் வேற்றுமையாகும். அற்றேல், இங்ஙனம் விசேஷவிசாரம் நிராலம்பமாம் பிரமம் காரணமென்னுமதுவே பெறப்படாமையானும் காரியங்களை நோக்கி அந்நியகாரணத்துவத்திற்குத்தான் அகாரணத்துவத்திற்குத்தான் உபபத்திவருதலானு மென நிகழும் ஆசங்கையை நிராகரிக்கும் பொருட்டுக் "காலம் சுபாவம் நியதி யதிரிச்சை பூதங்கள் யோனி புருடன் எனச்சிந்திக்கத்தக்கது. இவற்றின் கூட்டமன்று ஆன்ம பாவத்தால், ஆன்மாவும் சுகதுக்கவேதுவாதலின் அநீசன்" எனவரும் அவர் தமது சந்தேகதருமிசித்திப்பிரதரிசனார்த்தமாகிய அநந்தரமந்திர மெழுந்ததென்பது. நியதி யதிரிச்சையென்பது அகார்ணகத்துவபக்ஷம். இப்படி ஐயுற்றுத் தாமே நிர்ணயிக்க வலியின்றிப் பிரமவித்தியாதி தேவதையாகிய கௌரியினது பிரசாதத்தால் அதனை நிர்ணயிக்கவிரும்பி அவள் பிரசாதத்தின் பொருட்டு அன்னோர் அவளைத் தியானித்ததையும் அவள் பிரசாதத்தால் அவருட்கோளாகிய பிரமம் சிவபிரானேயென அன்னோர்க்கு நிர்ணயமுளதாயிற்றென்னும் பொருளையும் பிரதரிசனஞ் செய்வது "அன்னோர் தியாநயோகா நுகதர்களாய்த் தனது குணங்களால் நிகூடையாகிய தேவான்ம சத்தியைக் கண்டார்கள். காலான்மாக்களோடியைந்தனவாகிய அந்தக் காரணங்களெல்லாவற்றையும் எவன் ஏகனாய் அதிட்டிக்கும்" என்பது முதலிய உத்தரசந்தர்ப்பமென்பது. ஆண்டுத்தானே அக்கிரிமமந்திரங்களாய் 'க்ஷரம் பிரதாநம் அமிர்தாக்ஷரம் அரன், அதனால் சர்வகதன், சிவன், விச்சுவாதிகன், உருத்திரன், மகாவிருடி, மாயையுடையானை மகேசுவரனை' என்றற்றொடக்கத்தனவாய்வருவனவற்றுட் சொல்லப்படும் அரன், சிவன், உருத்திரன், மகேசுவரன் என்னும் நாமங்களால் சிவபிரானே சகற்காரணபரப்பிரம ரூபமுடையனாக ஆண்டு நிர்ணயிக்கப்பட்டானென்பது வெளிப்படை. இம்முறையே சகற்காரணபரப்பிரம ரூபத்தைச் சிவபிரானுக்கே நிர்ணயித்துரைக்குமுகத்தால் சகல காரணவாக்கியங்களையும் சிவபரத்தனவாக இயைவிக்கும் சுவேதாச்சுவதரோப நிஷத்திற்குச் சாக்ஷிபூதங்களாகக் காணப்படும் "இது முழுதும் பிரமன் விண்டு உருத்திரன் இந்திரன் அன்னோர் இந்திரியங்களெல்லாம் பூதங்களோடு கூடப் பிறக்கின்றனர். காரணமன்று. காரணங்களுக்குத் தாதா, தியாதா, காரணந்தான், தியேயன் சர்வைசுவரியசம்பந்தன், சர்வேசுவரன், சம்பு ஆகாசமத்தியில்" என்றற்

றொடக்கத்தனவாகிய அதர்வசிகைவசநங்களுமென்பது. இங்ஙனம் அதர்வசிகை முதலியவற்றால் அநுமோதிக்கப்படும் சுவேதாச்சுவதரோபநிடத் மந்திரங்களால் பிரேரிக்கப்படுவனவாய்ச் சத்து ஆத்மா பிரமம் முதலிய சாமாந்நியசத் தங்களோடியைந்தனவாய் வரும் சகல காரணவாக்கியங்களும் சிவபிரானே சகத்காரணமாகிய பரப்பிரமமெனப் பிரதிபாதிக்குமென்பது ஈண்டு முடிபாயிற்று. இதனால் நுதலிய பொருட்குச் சாதகங்களாகிய உபநிடத வசநங்கள் உபந்நியசிக்கப்பட்டன. 'புரிதல்' ஈண்டு ஒத்தகருத்தினவாய் ஒக்கன் முறை பூண்டு மகிழ்தல். (அநுமோதிதயா) என்றுரைத்த முதனூலாசிரியர் கருத்துப்பற்றி ஈண்டுப் 'புரித்' லென்றது. யாது அம்முதன்மையெனவும், அம்முதன்மையைக் காரணவுரைகள் நின்னிடைத்தானே சமர்ப்பிக்குமெனவும், புரிந்திடப்படுவதாம் சுவேதாச்சுவதரமெனவும் முடிக்க. (2)

**காமனைமுனிந்தகருணையங்கடலே கருதுபல்புராணவாக்கியங்க**
**ணாமலிசத்தார்த்தங்களினடைந்தநனி துலங்கொற்றுமைவடிவாற்**
**றோமிலோய்மூலச்சுருதிகடமையுந்தம்வயமாத்தொடர்வித்தே**
**யாமெனும்பிரமபிேறாலான்றறுதியிட்டறைவனவன்றே** 3

(எ-து). புராணவாக்கியங்கள் பலவும் சொல் பொருள் என்னுமிருதிறத்தானும் மூலச்சுருதிகட்கு வேறுபடாது அவைதாமேயென்னும் நனிது லங்கொற்றுமையுடை யனவாய் அவற்றிற்குப் பிறர் பிறவாறுரைக்கும் மலைவுபடுபொருட் கிடனுள தாகாதபடி அவற்றினுள்ளுறு பொருளை வெளிப்படுத்தினி துவிளக்கு முரிமைப்பாட்டினால் தம்வயத்தவாமாறியைவித்துப் பிறரைப் பிரமமென்பார் கூற்றுக்களைக் கழித்துப் பிரமப்பொருள் சிவபிரானே என்று பிரதிபாதிக்கு மென்பதாம்.

மகாத்மாக்களும் பிரம்வாதிகளுமாகிய அம்முனிவர்கள் அடைந்து ஆன்மவிஞ்ஞானத்தொடர்பினவாகிய வெகுவாதங்களைச் செய்தார்கள். 'இந்தச் சகத்துக்குக் காரணம் எது எமது ஆன்மாவேயா, பூதங்களெல்லாவற்றிற்கும் எவன்றான் காரணமாவன் ஈசுவரனேயா" என்று இங்ஙனம் ஆராய்ந்தவர்களாய்த் தியாநகர்மத்தைப் பற்றிநின்றோராகிய அன்னோர்க்கு மகாதேவி மலையரசன் மகளாகிய கௌரி வெளிவந்தாளென்று தொடங்கிப் பரமேசபத்திநியால் அருணோக்கஞ் செய்யப்பட்டோர்களாய் அன்னோர் அதன் மத்தியில் எல்லாவற்றிற்குங் காரணன், சம்பு, கவி, ஈசிதா, ருத்திரன், பெரியோன், புருடன், பழையோனாகிய தேவனைத் தரிசிக்கின்றார்களென்று கூர்மபுராணத்திற் சொல்லப்படுதலால் "காரணமாகிய பிரமம் எது" என்றற்றொடக்கத்தனவாய்வரும் சுவேதாச்சுவதரவசநங்களுக்கு அவை உபப்பிருங்கணங்களாதலுணர்க. சிவபுராணத்தும் மோக்கவிச்சையினால் முன் முனிவர்கள் சிலர் பிரமவாதிகள் சமுசயத்தாற்சூழப்பட்டமனசினர்கள் எப்படி அப்படி விசாரிக்கின்றார்கள்: காரணம் எது? எதன்பாற் பிறத்தலையுடையேம்? எதனால் நாம் சீவிக்கின்றேம்? எதன்பால் நமக்குச் சம்பிரதிட்டை? எதனால் நாம் தழைக்கின்றேம்? எதனால் என்றும் அடிக்கடி சுகங்களிற்றாம் அந்நியங்களிற்றாம் வர்த்திக்கின்றேம்? தாண்டப்படாத விசுவத்தினது வியவஸ்தை எதனாற் செய்யப்படும்? கால சுபாவ நியதி

யதிரிச்சையும் ஈண்டுள்ளது. பூதங்கள் யோநி புருடன். இவற்றது கூட்டந்தானா? அல்லது வேறுதானா? காலாதிகளுக்கு அசேதத்துவத்தால் ஆன்மாவிற்குச் சேதநத்துவமெனினும் சுகதுக்காபிபூதத்துவத்தால் அநீசத்துவத்தால் விசாரிக்கத்தக்கது. அவர்கள் தியாநயோகா நுகதர்களாய்ப் பாசவிச்சேதிகை, தனது குணங்களாற் பெரிதும் நிகூடை, ஐசுவரியாகிய சாக்ஷாத் சத்தியைக் கண்டார்கள். அவளால் விச்சிந்நபாசர்களாகிய அவர்கள் எவன் காலான்மசகிதங்களாகிய காரணங்களையெல்லாம் உமையாகிய சத்தியோடு கூடி ஒருவனாய் அதிட்டிப்பன், அப்பிரமேயனும் சர்வகாரண காரணனும் சக்திமானுமாகிய (அந்த) மகாதேவனைத் திவ்விய திருட்டியினால் தரிசித்தார்கள் என்பது முதலியவாகச் சொல்லப்பட்டனவும் அச்சுவேதாச் சுவதரவசநங்களுக்கு உபப்பிருங்கணங்களாதலுணர்க. "எவன்பால் பிரம விட்டுணு ருத்திரேந்திர பூர்வகமாகிய இதுவெல்லாம் பூதேந்திரியங்க ளெல்லாவற்றோடு கூட முதலிற் பிறக்கின்றது. காரணங்களுக்கும் எவன் தாதா தியாதா பரமகாரணன் (எவன்) பாலும் யாண்டும் என்றும் பிறக்கின்றிலன் அவன் சர்வைசுவரியசம்பூரணன் நாமத்தால் சுவயம் சர்வேசுவரன் முமுட்சுக்களெல்லாராலும் ஆகாசமத்தியகனாகத் தியானிக்கற்பாலன் சம்பு" என்று சிவபுராணத்தில் அதர்வசிகோபப்பிருங்கணமும் பெறப்படும். இன்னும் சகத்காரணத்துவம் முதலிய பிரமலிங்கங்களைச் சிவபிரானிடத்துச் சமர்ப்பிப்பனவாகிய. அதர்வசிரசு கைவல்லியோபநிடதமுதலியவற்றது. உபப்பிருங்கணங்களும் சிவபுராணமுதலியவற்றுள் ஆண்டாண்டுக் காணப்படும். ஈண்டுக் கூறியவாற்றால் அவை சத்தார்த்தமிரண்டினாலும் மூலச் சுருதிகளின்வைத்து நனிதுலங் கொற்றுமையுடையனவாய் அம்மூலச் சுருதிகட்கெல்லாம் சிவபரத்தனவாந்தன்மையை சிவபரத்தனவாந்தன்மையை அசைவிலதாகப் பிரதிட்டாபனம் செய்வனவாய் வனசிம்மநியாயத்தால் சுவயம் பலமுடையனவாய்ச் சகற்காரணபரப்பிரம்பாவத்தைச் சிவைகாந்திகமாகவே வியவஸ்தாபிக்குமென்பது முடியாயிற்று. ஈண்டுப் 'பல்புராணவாக்கியங்க' ளென்ற விதனால் ஏனைத்தேவர்புராணங்களினும் அதிகாநுக்கிரகம் பிராபல்லிய காரணமாதலுணர்த்தப்பட்டது. என்னை? பதினெண்புராணங்களுள் "பத்தினாலே சிவன் சொல்லப்படுவர். நான்கினால் பகவானாகிய விஷ்ணு. இரண்டினால் பிரமா சொல்லப்படுவர்" என வழங்கும் புராணசங்கியை யாலும் சைவம் லக்ஷம் காந்தம் லக்ஷம் என்பது முதலிய கிரந்தசங்கியையாலும் சிவபுராணங்களுக்கு அதிகத் தன்மை பிரசித்தமென்க. ஈண்டுக்கூறிய முறையே வனசிம்மநியாயத்தால் பரஸ்பரம் அநுக்கிராகியா நுக்கிராக்க பாவத்தையடைந்த சுருதிகள் அவற்றினுபப் பிருங்கணங்களினால் பரப்பிரமபாவம் சிவபிரானுடைமையென்பது விளக்கப்பட்டது.

இதனால் மேலுதாகரிக்கப்பட்ட சுருதிகட்குப் பிநர்பாற் பரத்துவம் உட்கொள்வார் சங்காசூகத்தைக் களைதல் வேண்டிப் பௌராணிகரூபமாகிய உபப்பிருங்கணங்கள் பிரதரிசனஞ் செய்யப்பட்டன. இனி மேல்வரும் செய்யுட்களால் இதிகாசரூபோபப்பிருங்கணப்பிரதரிசனம் செய்யப்படும். (3)

**பகவனாந்துவைபாயநமுனிவான்றான்பகரிதிகாசரத்திநத்திற்**
**றகவுடைத்தருமன்றன்னிடைவிருக்கவுருவகஞ்சாற்றிமெய்த்தலைவ**
**மிகவுயர்பிரமபதத்தினான்மூலம்விதித்தென்றும்விளிவிலாதொன்றாஞ்**
**சகநிறைபிரமநீயெனவெந்தாய்சங்கராவெளிசெய்தானன்றே.** 4

(எ-து). மகாபாரதத்தில் உதிட்டிரனைத் தருமமயமாகிய ஓர் மகாவிருக்கமென் றெடுத்துக்கொண்டு அருச்சுநனை அதனடியாகவும் பீமசேநனை அதன் சாகைகளாகவும் நகுலசகாதேவர்களைப் புட்பபலங்களாகவும் வகுத்து, (அவ்விருக்கத்திற்கு), மூலம் கண்ணன் பிரமம் பிராமணரென முடித்த விருக்கவுருவக வியாசவசநத்தால் பிரமம் மூலமென்று பிரித்துக்கூறிய பரப்பிரமப்பொருள் சிவபிரானேயென்பதினி துணரப்படுமென்பதாம்.

துவைபாயநர் துவீபத்திற் பிறத்தலையுடையவர். அவர் வியாசர். இதனால் நிருப்பதப்பிரமபதப்பிரயோகம் சிவபிரானுக்கேயுளதாகற்பாலதென்பது பெறுவித்துப் பிரமத்துவசித்தி அவன்பாலுளதாமென்பதுணர்த்தப் பட்டது. அற்றேல், பிரமபதத்திற்கு விண்டு பிராமணர் வேதம் தவம் என்னும் நான்கிடத்தும் வழக்குளதன்றே. அது சிவபிரானுக்கே உளதர்கற்பாலதென்றல் இன்னும் ஒப்பப்படாமையின் அது ஈண்டு வலியுற்றுச்செல்லாதாலெனின் அதுபற்றியன்றே யெழுந்த்து வருஞ்செய்யுளென்பது.

(4)

**விண்டுநான்மறையோர்வேறெடுத்தோதப்பட்டனர்வேதமுந்தவமு**
**மண்டர்நாயகசேதநத்திடைவைத்தற்குரியனவாகிலவிதன்ற**
**னெண்டகுவிருத்தியவனிருப்பியற்றுமொருவன்பான்மூலமாமியைபிற்**
**கண்டரூபணத்தின்வசத்தினிற்சங்கைகழிதாக்கழறற்பாற்றீண்டே** 5

(எ-து). விண்டுவும் பிராமணர்களும் வேறெடுத்தோதப்பட்டவை யானும், வேதம் தவமிரண்டும் அசேததங்களாகலானும், ஈண்டு உருவகத்து வகுத்த சேதங்க ளிடையே அவற்றை வைத்தெண்ணல் முறைபிறழ்ந்து பிராயபாட விரோதமாய்ப் பொருந்தா தொழிதலானும், விருக்கத்திற்கு மூலம் போலத் தருமனை அரசியல் வாழ்வில் வைத்துத் தளராது நிறுத்தி உபகரித்த முறையையுடைய சேதந னொருவன்பால் அம்மூலத்துவரூபணவசத்தால் இப்பிரமபதத்தின் விருத்தியைச் சொல்லி முடித்த லின்றியமையாமையானும், அவனும் அத்தருமன் விடயத்தில் மூலமாமியைபுக்குரிய உபகாரகுணங்க ளொருதலையானமைந்த அருட்பெருந் தகையோனென அறிஞர் ஒப்புமாறு ஈண்டைக்கட் சொல்லற்பாலனா கலானும் அவ்வருட்பெருந்தகைமைச் சேதநன் சிவபிரானேயெனப்போந்து மூலமென விதந்தபிரமம் அவனேயாக அப்பிரமபதம் அவனுக்கே யுரித்தாமென்றல் ஒப்பப்பட்டு வலியுற்றுச்செல்லுமாறு உய்த்துணர் வார்க்கினிது புலப்படுமென்பதாம்.

அற்றேல், துரோணபருவத்தில் நாராயணகிருதசிவஸ்தோத்திரத்தில் "உருவம், சோதி, சப்தம், ஆகாயம், வாயு, திவம், பரிசம், சலனம், கந்தம், உர்வி, காலம், தருமம், பிரமம், பிராமணர் நிற்பவுஞ் சரிப்பவுமாகிய இது நின்பாலுளதாவது" எனப் பிரமசத்தத்திற்குப் பிராமணசத்தசமபிவி யாகாரத்தால் வேதபரத்துவம் காணப்படு மன்றே! அதுபோல் ஈண்டுங் கொள்ளலாகாதோவெனின், ஆகாது, என்னை? ஆண்டு

உருவம், சோதி என்பது முதலிய அசேதநசமபிவியாகாரத்தால் ஆண்டுச் சேதாப்பிராயபட மின்மையின் ஈண்டுப் பிரம்பதப்பொருள் சேதானாகிய சிவபிரானெனக்கோடலே பொருத்தமென்பது. இதனால் மூலமென விதந்தபிரமம் சிவபிரானென்றற்கண் வரும் ஆசங்கைபை மறுத்து மேற்கோள் வலியுறுத்தப்பட்டது. அற்றேல், தருமன் விடயத்தில் மூலமாமியைபுக்குரிய அருட்பெருந்தகைமை சிவபிரானுக்குளதாதல் எவ்வியல்பின் வைத்துப் பெறுதுமாலெனின், அஃது ணர்த்தற்கன்றே வருஞ் செய்யுளெழுந்ததென்பது. (5)

**சாகியத்தாலங்கவன்றனக்காசுதலைப்படறனிலரியேபோ**
**லாகுலந்தவிர்ப்போயாசிமுன்னிலையாலந்தணர்போலருண்மன்றி**
**னேகநாயகநித்தியமநுக்கிரகவியல்பினான்மூலநீயிறைவ**
**வாகலினவருண்மத்தியபாடவிடயயோகுதியன்றே** 6

(எ-து). தருமனை அரசியல்வாழ்வில்வைத்துத் தளராது நிறுத்தி உபகரித்தற் கணுடனின்று தொழிற்பட்டுற்றுழியுதவுதலாகிய சாகியத்தாற் கண்ணனும் அவற்கு வென்றிவிழைந்து ஆசிவசகங்கண் மொழிதலினால் அந்தணர்களும் போல அத்தருமனுக்கு என்றும் உள்ளும் புறம்புமொத்து நீங்காது நின்று பேரருள் புரிந்த பெருந்தகைமையால் மூலமாதற்குரியோன் சிவபிரானென்பது பெறப்படுதலின் அவ்விருவரிடைவைத்துப் பிரமமெனப்படிக்கப் பட்டமூலம் அவ்விருவர் தம்மின் வேறாய் அருட்பெருந்தகைமைச் சேதநனாகிய அச்சிவபிரானேயென்பது நுண்ணறி வானோக்குவார்க்கினிது தெளிதரப்படுமென்பதாம்.

எனவே அநுக்கிரகவியல் பின்வைத்துப்பெறுதுமென்பது குறிப்பெச்சம். இதனால் எத்திறத்தும் தருமற்குத் துணை புரிந்து அவற்கு அரசியல் வாழ்வு நிலை பெறுதற் கட்காதகணனாதற்றன்மை கண்ணற்குளதாதல் பெருவழக்கன்றே தருமற்கு வென்றிவிழைந்து ஆசிவசநங்கண்மொழிதலினால் அத்தன்மை அந்தணர்க்கு முளதாதல் பெருவழக்கன்றே! அவன் வனம் புகுந்த காலத்து அவனைத் தொடர்ந்து சென்று அவற்குத் தண்ணளிபுரிதற்கண் ஆசைமிக்குடையராய் "வனத்திலுள்ள வற்றை நாமாகவே தலைக்கூட்டியுட்கொண்டு நாம் தொடர்ந்து வருகின்றோம். அநுத்தியானத்தினாலும். மந்திரத்தினாலும் நினக்குச் சிவத்தை விளைப்போம்" என்று மொழிந்த அவ்வந்தணர்வாய் மொழியினாற்றானே அத்தன்மை அவர்க்குளதாதல் நிச்சயிக்கப்படுமன்றே! அதுபோலச் சிவபிரானுக்கு அத்தன்மையுளதாதல் பெருவழக்கில்லையாதலின் திருமற்கு அத்தியந்தோபகாரகனாகிய கண்ணற்கே அடை மொழியாகச் சமர்ப்பிக்கப்படுவது இப்பிரமபதமென்றல் ஈண்டுப் பொருத்தமா மென்பார் மந்தசங்கை அநுக்கிரகவியல் பின்வைத்து மூலமாதற்குரிமை சிவபிரானுக்குளதாதல் பெறுதுமென எதுக்காட்டி மறுத்து மேற்கோள் வலியுறுத்தப் பட்டது. அற்றேல், அவ்வநுக்கிரகவியல்பாகிய அருட்பெருந்தகைமைக்குரிய உபகாரகுணங்கள். சிவபிரான்பாலுள்ளன இவை இவையென்பது வெளிப்படக் கிளக்கப்படினன்றே அவ்வியல்புண்மை ஈண்டு ஏப்பப்படும் பிறவெனின், அதுபற்றியன்றே யெழுந்தன வருஞ் செய்யுட்களென்பது. (6)

# பிரமதருக்கஸ்தவம்

**அண்ணலேகிராதவருச்சுநீயத்துமசுவமேதக்கதைப்பாலு**
**நண்ணருங்கைலையாத்திரையிடத்துநவில்சதவுருத்திரீயத்து**
**மெண்ணுசௌழுத்திகாதிகளிடத்துமீசபாண்டவர்கள்பாற்பெரிதாந்**
**தண்ணளிபுரிந்ததகைமைநின்றனக்கேசங்கராபிரசித்தந்தானே.** 7

(எ-து). மகாபாரதத்தில் ஆண்டாண்டு வரும் கிராதார்ச்சுநீய முதலிய அவ்வவ்வுபாக்கியாநங்களாற் பாண்டவர்கள்பால் அருட்பெருந்தகையோனாய் விளங்கிய அநுக்கிரகவியல்புக்குரியவுபகாரகுணங்கள் சிவபிரான் பாலன வெளிப் படக்கிளக்கப்படுதலின் அவ்வியல்பு அச்சிவபிரானுக்குப் பெரிது முளதாதல் பெருவழக்கென்பது அம்மந்தசங்கையுடையார் தமக்கும் வெள்ளிடை மலைபோல விளங்க நிற்கின்றதென்பதாம்.

ஆரணியபருவத்தில் கிராதார்ச்சுநீயத்திற் சகலசுராசுரர்முதலியோர்க்கு மறியப்படாத சகலலோக பயங்கரமாகிய பாசுபத் திவ்வியாஸ்திரம் அருச்சுநற் களித்தவன் சிவபிரானென்று சொல்லப்பட்டவதனால் பாண்டவர்கள் பால் அருட்பெருந்தகைமை சிவபிரானுக்குளதாதல் சுப்பிரசித்தம். துரோண பருவத்திலும் சயத்திரதவதத்தின் பொருட்டு, அறியப்படாத மறக்கப்பட்ட பாசுபதாஸ்திரசந்தானப் பிரகாரவிசேட பரிஜ்ஞானம் வேண்டிக் கண்ணன். அருச்சுநனிருவரும் கைலாசயாத்திரை செய்ததும் ஆண்டுச் சிவபிரானை நமஸ்கரித்துத் துதித்து நின்று சிவநியோகத்தரல் அமிர்தசரசிலுள்ள தநுசரங்களைக்கைக் கொண்டு சிவபிரான் சந்நிதியில் வைத்து அவனாலேவப்பட்ட நீலலோகிதருத்திரனால் தநுசரசந்தானஞ் செய்யப்பட்டவது கண்டு பாசுபதாஸ்திரசந்தான விசேடப்பிரதிஜ்ஞாநம் பெற்றதும் பிரதிபாதிக்கப்பட்டது. பாசுபதாஸ்திரப்பேற்றினால் அருச்சுநற்குண்டாகிய உத்கர்ஷம் சல்லிய பருவத்திற் கண்ணனால் தருமனுக்கு விரித்துரைக்கப்பட்டது. "பாரத, உனக்கு மவர்கட்குமுரிய பதினெட்டுஅக்குரோணியும் ஈண்டு வலியினால் அருச்சுநற்கு நிகராவனவல்ல. குருநந்தன, அவனோ திவ்வியங்களாகிய சர்வாஸ்திரங்களையும் சங்கரன்பாற்பெற்றுப் போரின்கண்ணே அவற்குநிகரும் எனக்கு விசிட்டனுமாகின்றான். பாண்டவ, துரோணனை வீட்டுமனைக் கிருபனைக் கன்னனைத் துரோண புத்திரனைச் சயத்திரதனைக் கோபமுளனேல் அரை நிமிடத்திற் கொல்லுதற்கு வல்லனாகின்றான். அரிந்தம, அவன் தேவாசுர கந்தருவர்களையும் இயக்கர் உரகர்கின்னரர்களையுமியைந்த மூவுலகத்தையும் வெல்லுதற்கு வல்லனாகின்றான். மனிதரெனிலெம்மாத்திரம்! விதியினால் விகிதனாகிய இவன் என்னாலேவப்பட்டோனாயவழியும் கொல்லுதற்குப் புத்தி பண்ணுகின்றிலன். கிருதாந்தன் மிகுவலியுடையன். அருச்சுநன் மகாவாகு, எனக்கு நிகராவோன். மகிபதி, பிரபூ, மகேசுவரன்பாற்பெற்ற அஸ்திரத்தையுடையனும் விபுவுமாகிய அவன் எதைத்தான் செய்யமாட்டா" னென்பது கண்ணன்வசநம். ஈண்டுச் சர்வாஸ்திரங்களையும் சங்கரன்பாற் பெற்று எனப்போந்தவசகத்தால் சர்வாஸ்திரங்களினுமிக்கதென்றாவது சர்வாஸ்திரங்களையும் ஒருங்குவைத்து நோக்க ஒத்ததென்றாவது கொள்ளத்தக்கதெனக்கருத்துக்கொண்டு பாசுபதாஸ்திரமே சர்வாஸ் திரங்களுமென்று சொல்லப்பட்டமையால் அதன் பெருமைவிளக்கப்பட்டது. துரோணபருவத்திற்றானே சதருத்திரீயத்திற் சிவபிரானால் யுத்தசமயத்திற் செய்யப்பட்ட மகாசகாயவியல்பு பிரதிபாதிக்கப்பட்டது. ஆசுவமேதிகப்பருவத்தில்

யுத்த சமயத்தில் செய்யப்பட்ட அந்த மகாசகாயவியல்புதானே பீமசேநனால் தருமனுக்கு ஞாபகஞ்செய்யப்பட்டது. அதுவே மோக்கதருமத்திற் கண்ணனால் அருச்சுநனுக்கு ஞாபகஞ்செய்யப்பட்டது. சௌஷுப்திக பருவத்தில் யுத்த சமயத்திலே பாண்டவரது படைவீடு சிவபிரானாலேவப்பட்ட மகாபூதமொன்றினா லிடைவிடாது வாயிலிலனுதியிருந்து காவல் செய்யப்பட்டது என்னுமித்தொடக்கத்தன வருணிக்கப்பட்டன. ஆதிபருவத்திலும் பஞ்சேந்திரோ பாக்கியாநத்தில் இந்திரரைவரை நோக்கி நீங்கள் மாநுடராய்ப்பிறந்து ஆண்டு அசுராவதாரரூபமுடையவர்களாயிருக்கின்ற துட்டவரசர்களெல்லாரையும் வதஞ் செய்து மீளத்தக்கது என்றெழுந்த நியோகவசநத்தாற் பாண்டவர்களுக்குரிய ஜயோபயோகிகளாகிய சர்வகாரியங்களையும் மேற்கொண்ட பொறுப்புடைமை சிவபிரானுக்குளதாதல் விளக்கப்பட்டது. ஈண்டுச் சுருக்கிக்கூறிய வித்தனைபல திறத்தவற்றாலும் பாண்டவர்கள்பாற் சிவபிரானுக்குரிய அருட்பெருந்தகைமை இனிது விளக்கி எது வலியுறுத்தப்பட்டது. (7)

**அருட்கடனின்னாற்பிரத்தியக்கத்தேயழித்திடப்பட்டபின்னன்றோ**
**குருக்கடஞ்சேனைபார்த்தனாலையகொன்றிடப்பட்டவீண்டிதனிற்**
**பெருத்ததாய்த்தருமன்விடயத்தினின்னின்வேறதாய்ப்பேணுமாறெதுகொல்**
**பொருத்தமாமூலமருத்திசேர்மதியைப்புனைமுடிக்கணிந்தவான்பொருளே.** 8

(எ-து). போர்க்களத்திலே சூலபாணியாகிய மகாவடிவத்தோடு நின்று பாண்டவர்களுக்கநுகூலமாகக் குருக்கள் சேனையையழித்தொழித்த சிவபிரானது தோற்றம் அருச்சுநனால் கண்கூடாகக்கண்டு விதந்து துதிக்கப்பட்டதும் அச்சிவபிரானாலழி வெய்திய சேனைமேற்றானே அருச்சுநன் பாணஞ்சென்று பட்டதென்னு முறைமையும் மகாபாரதத்தில் வெளிப்பட முழங்கப்படுவதால் தருமனை அரசியல் வாழ்வின் கண்வைத்துபகரித்தற்கட்காரணனாதலாகிய அப்பெருந்தகைமை கண்ணன் முதலியோரைக்காட்டினும் சிவபிரானுக்கே அதிகமாமென்றலினிது பெறப்படுதலால் ஆண்டுருவகத்தின்கட்பிரமமெனப் போந்த மூலம் சிவபிரானேயென்பதினிதுபோதரவும் அவனைவிட்டு அவனின் மிக்க அருட் பெருந்தகையோனாய் மூலமாதற்குரியோன் வேறொருவனெனக்கொண்டு தேடுந் தேட்டம் வதுவுக்குரிய இயற்கை நலன் வாய்ந்த உத்தமபுருடனாகிய வரனொரு வனிருப்ப அவனை யொழித்து அவ்வுரிமையியற்கை நலன் வாய்க்கப் பெறாதான் பிறனொருவனிழிதகையோனை வரனெனக்கொள்ளும் தனோடொத்துப் பெருநகை விளைத்தற்கிடனாமல்லது பிறிதில்லையென்பதாம்.

சதருத்திரீயாத்தியாயத்திலே சொல்லப்படுமாறு "போரிலே விமலமாகிய சரசமுகங்களினாலே சத்துருக்களை நான் கொல்லுந்நாக, முன்னே அக்கிரிப் பிரபையுடையனாகிய புருடன் செல்கின்றோனைப் பார்க்கின்றேன். சுவலிக்கின்ற சூலத்தைக் கைக்கொண்டு எந்தத்திசையை நாடுகின்றானோ அந்தத் திசையிலே எனது சத்துருக்கள் சிதறுகின்றார்கள். மகாமதே, பாதங்களாற் பூமியைப் பரிசிக்கின்றிலன். சூலத்தையும் விடுகின்றிலன். சூலத்தினின்றும் சூலங்கள் பல்லாயிரம் சொரிகின்றன. அவனது தேசசினால் அவனாலழிக்கப்படுகுநராகிய அந்தச்சத்துருக்களெல்லாரையும் என்னாலழிக்கப்படுகுநராக மதிக்கின்றது சநம்.

அவனாற்றகிக்கப்பட்டசைந்நியங்களைப் பின்னிலைபற்றி அநுதகனஞ் செய்கின்றேன் நான். பகவ, சூலபாணி, மகான், கோபமடையோன், தேசசினாற் சூரியசமானனாகிய அந்தப்புருடோத்தமன் யாவன்? எனக்கு நீ சொல்லுதி" என்று அருச்சுநன் வினாவியகாலத்துப் "பிரஜாபதிகளுட்பிரவரன், தேசசுகளுட்பிரவரன், பிரபு, புவனம், பூர்ப்புவதேவன், சர்வலோகமதேசுவரன், ஈசானன், ஈசுவரன், தேவனாகிய சங்கரனைப் பார்த்தவனாகின்றாய். கௌந்தேய, வரதனாகிய புவனேசுவரனைச் சரண்புகுந்து" என்று தொடங்கி "ஐய, தேசசுடையோனாகிய அந்தச்சிவன் பிரசந்நனா யுனக்குமுன்னே செல்கின்றான். பார்த்த, கோரமாயும் மகாரௌத்திரமாயும் உரோமகர்ஷணமாயுமுள்ள அந்தப் போரில் மகாவில்லாளிகளும் அடிக்கு நருமாகிய துரோணகர்ண்கிருபர்களாற் காக்கப்பட்ட அந்தச்சேனையை மகாவில்லாளியும் வெகுரூபனும் மகேசுவரனுமாகிய தேவனைத்தவிர எந்த நரன்றான் மனசினாலுங் கொல்லுவன். இவன் முன்னிற்குங்கால் ஒருவனும் நிலைநிற்கமுயல்வானல்லன். மூன்றுலகங்களினும் அவனுக்கு நிகராவோனிலன். போரில் கோபமுடையோனாகிய அவனது கந்தத்தினாற்றானே சத்துருக்கள் உணர்விழந்தோராய் நடுங்குநர், உயிரிழந்தோராய் விழுகுநர். அவன் பொருட்டு நமஸ்காரத்தைச் செய்பவர்களாய் எந்தத் தேவர்கள் சுவர்க்கத்தினிலை பெறுகின்றார்கள், உலகத்திலே மற்று எந்தத்தாதவர்கள் சுவர்க்கசித்துக்களாகின்றார்கள், எந்தநரர்கள் பக்தர்களாய் வரதனும் தேவனும் சிவனும் உருத்திரனுமாகிய உமாபதியை வணங்கி இகலோகத்தே சுகத்தையடைந்து அவர்கள் பரமமாகியகதியைச் செல்கின்றார்கள், கௌந்தேய, சாந்தனாகிய அவன் பொருட்டு, என்றும் நமஸ்காரஞ்செய்குதி" என்றெழுந்தன இன்னோரன்ன வியாசவசநங்கள். "நாமனைவரும் அவனுடைய பக்தர்கள் அவனும் எங்களுக்குப் பிரசாதஞ்செய்கின்றான். அவனது பிரசாதத்தினாலே நாம் அரசியலையடைந்தோம். கௌரவநந்தந, மகாவில்லாளிகளும் அடிக்கு நருமாகிய துரோணன் கர்ணன் முதலியோராகாக்கப்பட்ட அந்தச்சேனையை மகாவில்லாளியும் வெகுரூபனும் மகேசுவரனுமாகிய தேவனைத்தவிர வென்றான் மனசினாலுங் கொல்லுவன். மகாராஜ, அவனது பிரசாதத்தாற்றானே உனது சத்துருக்கள் கொல்லப்பட்டார்கள்" என்று அயமேதோத்தியோகத்தில் பீமசேநனால் மேற்சொல்லிய பொருடானே தருமனுக்கு ஞாபகஞ்செய்யப்பட்டது. இங்ஙனம் மிகப்பிரசித்தமாகிய பலமுடிபுகளும் இச் செய்யுளாற் சங்கிரகிக்கப்பட்டன. இதனால் தருமனது அரசியல்வாழ்வுநிலைபேற்றின் கட்காரணனாதற்றன்மை கண்ணன் முதலியோரைக்காட்டினும் சிவபிரானுக்கு அதிகமாதல் சதருத்திரீயாதியுபாக்கியா நசித்தமென்பது தெற்றென எடுத்துக்காட்டி அவனதருட்பெருந்தகைமையாகிய எது மேலும் வலியுறுத்தப்பட்டது. அற்றேல், "இவர்கள் பூர்வத்திற்றானே என்னாற்றானே கொல்லப்பட்டார்கள். நிமித்தமாத்திரமாகு தி சவ்வியசாசி " என்று கண்ண னுரைத்த சாவதாரணவசநத்தில் மேற்கூறிப் போந்தபொருள்'விரோதம தல் காணப்படுதலின் அது வலியுற்று ஒப்பப்படுதல் பொருந்தாதெனின், அதுபற்றியன்றே வருஞ் செய்யுளெழுந்ததென்பது. (8)

**என்றனாற்றானேகொன்றிடப்பட்டாரொன்றியாதரியினாலியப்ப**
**நின்றதாண்டேவகாரத்தானீக்கப்படுபொருள்விசயன்மாத்திரமே**
**மன்றுளோயெவன்றன்வலியினாலந்தமாலவனுந்துணைசெய்தா**
**னன்றிசோவர்கட்கங்கவனாநிற்கெங்ஙனநீக்கநம்பானே.** 9

(எ-து). “இவர்கள் பூர்வத்திற்றானே என்னாற்றானே கொல்லப்பட்டார்கள் சவ்விபசாசி நிமித்தமாத்திரமாகுதி” என்றெழுந்த கண்ணன் வசநத்தில் “நிமித்தமாத்திரமாகுதி சவ்வியசாசி” என்னும் வாக்கிய சேஷத்தானும் ஆண்டுச் சிவப்பிரசங்கமின்மையானும் அவ்வசநத்தின் வரும் தேற்றப் பொருளுணர்த்தும் பிரிநிலை எவகாரத்தால் பிரிக்கப்படுபொருள் விசயன்மாத்திரமேயாதலினாலும் பாண்டவர்க்குவேண்டப்படுவனவாகிய சகாயங்களை வேண்டுழி வேண்டுழிக் கண்ணன் செய்துநின்றதும் சிவனருள் வலிகொண்டே பிறிதில்லையென்பது தேற்றமாதலினாலும் அவ்வருள்வலி முழுதும் கண்ணற்களித்துப் பாண்டவர்க்குப் பேரருள் புரிந்த சிவபிரான் ஆண்டு எவகாரத்தால் நீக்கப்படுவானென்றல் மலையிடறாதலினாலும் அக்கண்ணன் வசநத்தில் சிவபிரானால் குருசேனை அழித்தொழிக்கப்பட்டதென மேற்கூறிப்போந்த பொருள் விரோதமடையுமாறு யாதுமில்லையென்பதாம்.

பார்த்தசாரத்தியம் செய்கின்ற சீமான் கண்ணனுக்கும் அப்போது ஆபத்து நேர்ந்தது நிவாரணமாயதும் சிவனருள்வலியாலென்பது துரோண பருவத்தில் வர்ணிக்கப்பட்டதன்றே. ஆண்டுத் துரோணவதாநந்தரம் அசுவத்தாமா கண்ணன் அருச்சுனிவர்களிடத்து மிகுந்த கோபமுடையனாய்க் குரோசபரியந்தம் சூழ்ந்து காணப்பட்டு அவரோடு நிலவிய சகலபரியந்திசைந்நியங்களையும் பொடிபடுத்த நினைந்து ஆக்கிநேயாஸ்திரத்தைத் தொடுப்ப அதனால் அருச்சுநனது யானை தேர் பரிசகிதமாகிய சகலசைந்நியமும் அப்படியே பொடிபடுக்கப்பட்ட காலத்தில் அதனடுவினின்ற கண்ணன் அருச்சுநனிருவரும் அங்ஙனமேயாயினாரென்று அசுவத்தாமாவும் மற்றெல்லோரும் நிச்சயித்துநின்றாராக அவ்விருவரும் அந்த அத்திரசாந்தியநந்தரம் முன்போல ரதத்தில் ஊறின்றி விளங்கி நின்றாராக, அவ்விருவரையும் அசுவத்தாமா கண்டு சிந்தாசோக முடையவனாய் "திக் திக் எனது அஸ்திரமாகாத்மியம் சாஸ்திரம் பொய்" என்று ரதத்தினின்றிறங்கி யுத்தகளத்தை விட்டு வேகித்துச்சென்றானாகத் தானாகவே ஆண்டுப் பகவான் வியாசமுனி யெதிர்ப்பட அசுவத்தாமா அவனைக் கண்டு வந்தித்து "அசுரர், அமரர், கந்தர்வர், பிசாசர், இராக்கதர், நரகர், இயக்கர், பதகர், மனிதர், இவர்கள் எவ்விதத்தேனும் என்னாற் செலுத்தப்பட்ட இவ்வத்திரத்தை மாறுபடுக்க முயல்குநரல்லர். சுவலிக்கின்ற அது இவ்வொரு அக்குரோணியைமாத்திரமழித்து மாநுடதருமி களாகிய கேசவார்ச்சுநர்களைத் தகித்திலது எதனால்" என்று வினாவினானாகச் “சமுசயத்தால் நீ என்பால் யாது வினாவுகின்றாய் மகத்தாகிய இவ்வர்த்தத்தை நான் உனக்குச் சொல்கின்றேன், சாவதானமனத்தினையாய்க் கேட்குதி, நாராயணனாகிய தேவன் எவன் இவன் முன்னவர்க்கெல்லாம் முன்னுள்ளான், ஆதி தேவன், ஜகந்நாதன், லோககர்த்தா. சுவயம்பிரபு, சர்வலோகத்திற்கு முன்னோன், அநாதிநிதநன், அச்சுதன், சுருதிகளும் முனிகளும் எவனது தத்துவத்தை விரித்துரைப்ப, அயன், அவன் சர்வபூதங்களினாலும் மனசினாலும்

# பிரமதருக்கஸ்தவம்

வெல்லப்படாதோன், ஜகத்பதி, ஆதலின், புருடவியாக்கிர, இவனை வெல்ல இச்சித்து அஞ்ஞானதமசினால் மயங்கினோனாப்த் துன்புறுதலொழிக, ஈண்டு அருச்சுகனையும் அவன் போலக் காண்குதி" என்று கண்ணன் அருச்சுநனிருவரையும் வெல்லுதற்கருமை கூறி அதன்பின் அதற்குக்காரணததை விசேடித்துக்கூறுவானாய் நாராயணன் அமிசபூதத்தால் அறுபத்தாறாயிரம் வருடம் லைநாகத்தில் தபசினால் வாடி ஆண்டுப் பிரசந்தனாகிய பரமசிவனை வெகு விதமாகத் துதித்துப் "போற்றுகின்ற பக்தனாகிய என்னைப், போற்றுக" என்று பிரார்த்தித்த முன்னிலையாற் பிறர்க்கெல்லாம் அரியனவாகிய வரங்கள் மலவற்றையும் வேண்டினன். "எனது பிரசாதத்தால் மனிதருள்ளும் தேவகந்தருவயோநிகளுள்ளும் அளவிடப்படாதவலியுடையோனாவாய். நாராயண, தேவர், அசுரர், உரகர், பிசாசர், கந்தருவர், நரர், இராக்கதர், சுபர்ணர், நரகர், விசுவயோநிகளெல்லாரும் உனக்கு எதிர்நிற்கமாட்டார்கள். எந்தத் தேவனும் போர்களில் உன்னைவெல்லமாட்டான், எனது பிரசாதமிருத்தலின் சத்திரத்தால் அத்திரத்தால் தீயினால் நீரினால் நனைந்ததால் உலர்ந்ததால் சரத்தால் அசரத்தால் கையினால் காலினால் காட்டத்தால் ஓட்டினால் எத்துணையும் எவனும் உனக்குத் துன்பஞ்செய்குகனல்லன். போர்விளையுமேல் ஒருகால் என்னின் அதிகனாவாய்" என்று சிவபிரானால் அவனுக்கு அவ்வரங்கள் கொடுக்கப்பட்டன" என்றுசொல்லி, அதன்பின் "இவை முதலிய வரங்களைச் சூலபாணியினது பிரசாதத்தாற் பெற்று அந்தத் தேவன்றானே மாயையினால் ஜகத்தை மோகிப்பித்துலவுகின்றான். அந்தத்தேவனது தபசினாற்றானே அவனோடு ஒத்தவனேயாய் நான் என்னும் நாமமுடைய. மகாமுநிவனுளனாயினான். அவனையே என்றும் அருச்சுநெனென்றறிகுதி". என்று அந்த நாராயணன்றானே கண்ணன் வடிவின் அவதரித்தானென்றும் அவனது தபசினாற்றானே அவனுக்கு ஒத்ததன்மையை அடைந்தவனாகிய நரனே அருச்சுநவடிவின் அவதரித்தானென்றும் உபதேசித்தனன். அதனால் ஈண்டுக் கண்ணன் அருச்சுநனிருவரும் ஆக்கினேயாத்திரத்தால் அழிவுசெய்யப்படாமைக்குத் "தீயினால் நீரினால்" எனவுள்ளிட்டுவந்த சிவ்வரப்பிரதானமே காரணமென்பது தெளிவுபடத்தானே வியாச முனி அறிவுறுத்தினானன்றே! சௌஷுப்திக பருவத்திலும் கண்ணனது ஆராதகத்திற் பிரீதியடைந்த சிவபிரானால் கண்ணன் செய்த பாண்டவசகாயவியல்பை நிருவகிக்கு பொருட்டுப் பாண்டவர்களது படைவீடு காவல் செய்யப்பட்டதென்று விரித்துரைக்கப்பட்டது. அசுவத்தாமா துரியோதநவதாநந்தரம் அதிகோபமுடையோனாய்ப் பாண்டவ பாஞ்சாலசகிதம் பாண்டவரது படைவீடு முழுதும் அழித்தல் செய்வேனென்றெண்ணி ராத்திரியில் அப்படை வீட்டின் வாயிலிற் போனகாலையில் மகத்தாகிய பூதம் அதிபயங்கரமாயும் ரௌத்திராகாரமாயும் ஆயிரங்கண்களுடையதாயும் காணப்பட்டது. அங்கே அவனால் விடப்பட்ட எல்லா அஸ்திரங்களும் ஆயுதங்களும் அதனால் விழுங்கப்பட்டன. அதனால் துரோணபுத்திரன் சிந்தாகுலமுடையனாய் இவ்வாபத்தைக் கடக்கும் பொருட்டுச் சிவனைச் சரண்புகுவனென்றெண்ணி அதன் பொருட்டு முயலுங் காலையில் அவன் முன் பருவதாகாரமாய் மகத்தாகிய வேதியொன்றுளதாயிற்று. அதன்மேல் சுவாலாமாலாசடிலமாகிய மகத்தாகிய அக்கிநி உளதாயிற்று. அதன்பால் அளவிறந்த பூதப்பிரமதருத்திரர்கள் சாந்தகோரரூபமுடையர்களாய் நாநாவிதங்களாகிய ஆயுதங்கள் வாத்தியங்கள் முதலியவற்றைத்

தரித்தோராயுளராயினர்.. அதன்பின் அந்த அக்கிநியிற்றானே தன்னை உபகாரமாக்வே நிவேதித்துச் சிவனைப் பிரீதி பண்ணுவேனென்று துணிந்து மந்திரத்தாற் றன்னை அவியாகநிவேதித்துப் புயத்தை உயர்த்திக்கொண்டு அக்கிநியிற் பிரவேசித்தானாக, ஆண்டுப் பிராதுர்ப்பூதனாகிய சிவபிரான் “சத்தியசௌசார்ச்சவத் தியாகங்களால் தபசினால் நியமத்தால் பொறுமையினால் பக்தியினால் தைரியத்தினால் கருமத்தினால் மநசினால் வாக்கினால் நான் சுக்கருமமுடைய கண்ணனால் வழுவாது ஆராதிக்கப்படுகின்றேன். அந்தக் கண்ணனைக் காட்டிலும் இஷ்டதமன் வேறு எனக்கிலன். அவனை யறியுமிச்சையுடையனாய் அவனுக்குச் சம்மாநஞ் செய்கின்ற என்னால் பாஞ்சாலர்கள் எத்திறத்தானும் காக்கப்பட்டார்கள். மாயைகளும் வெகுவாகச் செய்யப்பட்டன. அதனால் அவனுக்குரிய சம்மாநத்தாற்றானே என்னாற் காக்கப்பட்ட பாஞ்சாவர்கள் காலத்தினால் அபிபூதங்களுரயினர். இப்போது அவர்களுக்குச் சீவிதமில்லை" என்று சொல்லிய ருளினானேன் ஆண்டுத்தானே சொல்லப்பட்டது. அதனால் கண்ணன் செய்தவழிபாட்டிற் பிரீதியுடையனாகிய சிவபிரான் அக்கண்ணன் செய்த பிரதின்ஞையை நிருவகித்தற்பொருட்டே பாஞ்சாலா திசம்ரட்சணத்தை இதுபரியந்தம் செய்தானென்பது தெற்றெனப் புலப்படுகின்றது. கண்ணன்பால்வைத்த வெகுமாதத்தினால் இதனைச் செய்தான் சிவபிரானென்பதும் அவனைத் தன்பத்தனெனக்கொண்டே பிறிதில்லையென்க. இதனை இனிது வெளிப்படுத்தற்கன்றே "இதனது இதை எவ்வாற்றானும் எடுத்துச் சொல்லுதற்கும் பார்த்தற்கும் முடிவுதேயன்று, அதனைப் பர்வதங்களும் தண்டு, பிளக்கும், பாரத, அதனது. முகத்தினும் நாசிகளினும் செவிகளினும் கண்களாயிரத்தினும் அவற்றினின்று மகாசுவாலைகள் தோன்றியன. அந்நிலையில் தேசோகிரணங்களினின்று சங்கு சக்கர கதாதரர்களாய் இருடிகேசர்கள், நூற்றுவர் ஆயிரவர்களாகத் தோன்றினார்கள்" என முன் படைவீட்டுவாயிலிற் காணப்பட்ட பூதத்தினது கண்முதலியவற்றினின்றும் போந்த தீச்சிகைகளினின்று அளவிறந்து கண்ணர்களது பிராதுர்ப்பாவம் சொல்லப்பட்டது. ஈண்டுக் கூறியவாற்றாற் பாண்டவர்களுக்குத் துணை நின்று கண்ணன் சகாயம் செய்ததும் சிவனருள் வலியாலென்பது இனிது நிச்சயிக்கப்படுகின்றது. இஃதுணராது. “என்னாற்றானே கொல்லப்பட்டார்கள்” என்னும் கண்ணன் வசநத்தில், ஏவகாரத்தாற் பிரிக்கப்படுபொருள் சிவயிரானென்றல், ஆத்தியந்தா நுசிதமேயென்பதும் அதனாலாய பிரிநிலைப்பொருள் அருச்சநன்மாத்திரமேயென்பது அதன்பொருளாதலும் இகல்பூண்டுரைக்கும் வாதிகளாலும் ஒப்பற்பாலதென்பது ஈண்டுத் தெளிவுறுத்தப்பட்டது. இதனால் "என்னாற்றானே இவர்கள் கொல்லப்பட்டார்கள்" என்னுமது. கண்ணன் வசநமென்பதை அங்கீகரித்து அதன்கண் வரும் அவதாரணத்திற்குக் கதியுரைத்து. அதுபற்றிவருமாசங்கை மறுக்கப்பட்டது. (9)

**நாதவாங்கெதனைக்காட்டியவரியாலங்ஙனநவின்றிடப்பட்ட**
**கோதுமவ்விசுவரூபமுநினதேயுணர்குவலுலகினுக்கெல்லா**
**மாதாமாவோய்பரவுருக்காட்சியாசைப்பட்டிரந்த பார்த்தற்குக்**
**காதலினவ்னாலங்கதுவன்றேகாட்டிடத்தக்கதென்கண்ணே.** **10**

(எ-து). "இவர்கள் பூர்வத்திற்றானே. என்னாற்றனே கொல்லப்பட்டார்கள்" என்ற வசநம் கண்ணன் விசுவரூபங்கொண்டகாலத்துச் சொல்லப்பட்டமையானும் கொல்லப்பட்டார்களென்னுமதனை உரைத்தற்குரிய சமயம் முன்னும் பின்னுமாகாது சங்காரகாரணனாகிய சிவபிரானுக்குரிய விசுவரூபங்கொண்ட சமயமேயென்று தெரியப்படுதலானும் அவ்விசுவரூபமும் சிவபிரானுடைமையே யென்பது "புருடோத்தம், நினது ஐசுவரரூபத்தைக் காண்பான் விரும்புவ" லென்று அதனைக் காண்டற்கண் ஆசைப்பட்டிரந்த அருச்சுநனுக்கிரங்கி அவன் கருத்தை யறிந்து முடித்தற்கட் கருணையுடையனாகிய கண்ணனால் காட்டிடற்பாலது சங்காரகாரணனது ஐசுவரமாகிய அப்பரவுருவே திதிகாரணனாகிய தனது நிசவடிவன்றென்றூகித்துப் பெறப்படுதலானும் அப்பான்மை வழுவாது கண்ணனும் ஐசுவரமாகிய அதனையே காட்டினானாதலர்னும் அதனைக் காட்டிய மேதக் கோனாகிய அக்கண்ணனாற் சொல்லப்பட்டதென்ற அவ்வசநமும் விமற்சரராய் உண்மைபற்றி நோக்குவார்க்கு விசுவரூபனாகிய சிவபிரான் வசநமெனத்துணிதலே பொருத்தமுடைத்தென்பதாம்.

ஈண்டு விசுவரூபம் சைவமேயென்பது பூர்வாபாபரியாலோசநை யினாலுணரப்படும். அங்கனமன்றே! "குடாகேச, சராசரமாகிய சகம் முழுதையும் ஈண்டு. எனது தேகத்தில் ஓரிடத்ததாக இப்பொழுது பார். வேறெதையும் பார்க்க விரும்புதி" (அதனையும்) என்னும் சுலோகத்தால் எனது விசுவரூபான்மகமாகிய ரூபம், வேறும் பார்க்க விரும்புதியேல் அதையும் பார் என்று அருச்சுநனால் வினாவப்பட்டதற்கு உத்தரஞ் சொல்லி வேறெதையும் பார்க்க விரும்புதி என்றும் பகவானாற் சொல்லப்பட்டது. அதன்பொருளாமாறிது. "வெல்வோமா? எங்களை வெல்வார்களா?" என்று வெல்வி தோல்வி முதலிய வேறெதையும் எங்கனம் சங்கிக்கின்றாய் அதனையும் பார்க்க விரும்புகின்றாயாயின் பார் என்பது. அதனால் துரியோதநாதி சகலசத்துரு சங்காரப் பிரதாகரூபத்தைக் காட்டுகின்றேனென்று பகவானாற் குறிப்பிக்கப்பட்டது. அவ்வியல்பிற்றாகிய வுருவமன்றே அவனாற் காட்டப்பட்டதும். கண்ட அருச்சுநனாலும் அதுவே அதுவாதஞ் செய்யப்பட்டது. "திருதராட்டிரனுடைய புத்திரர்கள் அவநிபால சங்கங்களோடு கூட நம்மவர்களாகிய சேநைத்தலைவர்களோடு கூட வீட்டுமன் துரோணன் இந்தக்கன்னனாகிய இவர்களெல்லாரும் நின்னை விரைந்து நுழைகின்றார்கள். தமிஷ்டிரங்களினால் கராளங்களாயும் பயத்தை வருவிப்பனவாயுமுள்ள நினதுமுகங்களில் விரைந்து நுழைகின்றார்கள். சிலர் பொடிபடுத்தப்பட்ட சிரசுகளோடுகூடப் பல்லிடைகளிலே யொட்டினவர்களாய் காணப்படுகின்றார்கள். எத்திசையினும் சுவலிப்பன்வாகிய வதகங்களால் சமஸ்தலோகங்களையும் உட்கொள்பவனாய் நக்குகின்றாய். உன்னுடைய உக்கிரங்களாகிய சோதிகள் தேஜசுகளினாலே சகமுழுதையும் நிறைத்து மிகத் தவிக்கச் செய்கின்றன விஷ்ணுவே " யென்பது அவன் அநுவாதம். அதன்பின்னர் லோகரக்ஷகனும் விஷ்ணுவுமாகிய நினக்குச் சகலலோக சங்காரகமாயும் அதிபயங்கரமாயும் நின்னாற் காட்டப்பட்டதாகிய இந்த வுருவமில்லையன்றே என்னுமபிப்பிராயங் கொண்டு “உக்கிரரூபனாகிய நீ யார்? எனக்குச் சொல்குதி. நினக்கு நமஸ்காரமாகுக, தேவவர், அருள்குதி, முன்னவனாகிய நின்னை யறிவான் விரும்புகின்றேன். நினது பிரவிருத்தியை யறிகின்றிலன்" என்று

# பிரமதருக்கஸ்தவம்

அருச்சுநனால் வினாவப்பட்டது. அப்பொழுது “லோகக்ஷயம் செய்பவனாகிய காலனாகின்றேன்.. லோகங்களை ஒடுக்கும் பொருட்டுப் பிரவர்த்திப் போனாய் ஈண்டுத் தழைக்கின்றேன். பிரத்திய நீகங்களிலிருக்கும் வீரர்கள் எவர்கள் அவர்களெல்லாரும் நின்னையன்றியுமிருக்கின்றிலர்" என்றதனால் சகலலோக சங்கார காலாக்கிநிருத்திரரூபம் தன்னாற் காட்டப்பட்டதென்று பகவான் கண்ணன் அறிவுறுத்தருளினானன்றே! அதனால் சகத்தைச் சங்கரிக்கும் பொருட்டுக் காலாக்கி நிருத்திரரூபத்தை மேற்கொள்ளுகின்ற சிவனுடைமையன்றே இவ்விசுவரூப மென்பது பொருத்தமாம். அற்றேல், கண்ணனால் சைவரூபமே காட்டப்பட்ட தென்னுமிது பொருந்துமாறு யாண்டையது? "புருடோத்தம், உன்னுடைய ஐசுவரமாகிய ரூபத்தைக் காண்பான் விரும்புகின்றேன்" என்று அருச்சுநனால் கண்ணனது முன்னையதாகிய ஐசுவரரூபமன்றே காட்டற்பாலதெனப் பிரார்த்திக்கப்பட்டதேனின், நன்று சொன்னாய்; எது தான் உண்மையால் நோக்குங்கால் யாண்டும் கண்ணற்கு முன்னையதாகிய ரூபமென்று கொள்ளற்பாலதோ அதுவே அவனது பிரார்த்தகத்தை அநுசரித்துக் காட்டப்படத்தக்கது. அது தான் உண்மையான் வைணவரூபத்திற்கும் மூலபூதமாகிய சைவரூபமே யென்பது. எனவே அந்தச் சைவரூபத்தையே காட்டினானென்றற்கட் பொருந்தாமை யாண்டையதென்க. ஈண்டுக் கூறியவாறு அபேதம் வேண்டப்படுவ தன்றெனின் ஆண்டும் பொருந்தாமையில்லையென்க. எங்ஙனம்? சர்வாத்மகமாயும் முன்னையதாயுமுள்ள ஐசுவரரூபமன்றே அருச்சுநனால் காட்டவேண்டுமென்று பிரார்த் திக்கப்பட்டது. அதுதான். உண்மையாற் சைவரூபமே என்று அபிப்பிராயங் கொண்டு யோகமாகாத்மியத்தாலே அதுவே கண்ணனால் காட்டப்பட்டது என்று பொருந்து தலானென்க. என்னை? "இந்த நினது கண்ணினாற்றானே என்னைப் பார்க்க வல்லுநனாகமாட்டாய், நினக்குத் திவ்வியநேத்திரத்தைத்தருகின்றேன். எனது யோகமாகிய ஐசுவரத்தைக் காண்குதி" என்று தன்னாற் செய்யப்படும் விசுவரூபப் பிரதரிசநத்திற்கு ஈசுவரவிடயமாய்த் தனக்குளதாகிய யோகசத்தியதி சயரூபத்துவ முண்மை கண்ணனாற்றானே சொல்லப்பட்டமையானென்க. இப்படியே இந்தக் கண்ணனது வசநத்தைக் கேட்டு அஞ்சலி செய்தோனாய் நடுங்கினோனாய்க் கிரீடியானவன் என்பது முதலிய சந்தர்ப்பத்தில் பயந்தோனாகிய அருச்சுநன் கண்ணனை நோக்கிச் சொல்லியவசநங்களெவை அவை பொருந்துவதெங்ஙனம்? இவைதாம் தான் முன்செய்த அபராதங்களைப் பொறுத்தல் வேண்டுமென்னும் பிரார்த்தநசகிதங்களாகக் கண்ணனைத் துதித்த வசநங்களன்றே! இவை கண்ணற்குரிய ரூபாந்தரமாகிய அதுவே அவன்றன்னாற் காட்டப்பட்டது என்னும் பொருளைப் பயப்பனவன்றே! என்று.சிலர் கூறுவதுண்டேல் அபேதம் கொள்வதுண் டெனின் அப்போது பொருத்தமின்மை சிறிதுமில்லை. அது வேண்டப்படுவ தன்றெனின் ஆண்டும் மேற்கூறியவியல் பிற்றாகிய சிவயோகநிஷ்டத்துவ ரூபமாகாத்மியாதிசயதரிசந்த்தினால் அத்துதி முதலியன உளதாயிற்றென்று அதனது பொருத்தமுண்மை பெறப்படுமன்றே! என்னை? அதன் பின்னர்ப் "பிரசந்நனாகிய என்னால், அருச்சுந, நினக்கு இந்தப்பரரூபம் ஆத்மயோகத்தாற் காட்டப்பட்டது" என்று பகவானாற்றானே தனது விசுவரூபப்பிரதரிசநத்திற்கு யோகப்பிரபாவம் காரணமாய தன்மை சொல்லப்படுதலானென்க. அதனால் அவர் கூற்றுப் பொருந்தாமையுணர்க. கீதைகளில் ஒரிடத்துக் கண்ணனால் “எனது ரூப" மென்று சொல்லப்பட்டது.

ஓரிடத்து யோகப்பிரபாவத்தால் காட்டப்பட்டது ஐசுவரரூபமென்று சொல்லப்பட்டது. ஓரிடத்து "இந்தச் சகமுழுதையும் ஓரம்மிசத்தினாலே நான் பற்றி நின்று நிலைபெறுவல்" என்றற்றொடக்கத்தியல்பினையுடைய அகமென்பது முதலிய சத்தங்களினால் பரப்பிரமலிங்கவர்ணநம் உணர்த்தப்பட்டது. ஒரிடத்து "அந்த ஆதிபுருடனையே சரண்புகுகின்றேன். எந்த அவ்வியயனாகிய ஈசுவரன் மூன்றுலகத்தையும் உட்புகுந்து தாங்கும்; ஈசுவரன் சர்வ பூதங்களினது இருதயஸ்தலத்தில் யந்திராரூடங்களாகச் சர்வபூதங்களையும் மாயையினாலே சுழற்றிக்கொண்டு நிலைபெறும், அருச்சுந, அவனையே சரண்புகுதி" என்பது முதலியவற்றால் ஈசுவரநாமதேயசிவவிடயமகிமவர்ணநம், உரைக்கப்பட்டது. இப்படி ஆண்டாண்டுக்கூறிய அவ்வுரைமுழுதும் அதிவிருத்தம் போலவும் காணப்பதெலின் கீதைகளில் வரும் பகவத் வசநங்களாகிய அவற்றிற்கு அபிப்பிராயம் என்னை யென்று ஐயுறவினால் அநுகீதாவதாரத்தில் மீட்டும் வினாவிய அருச்சுநனுக்கு "என்னால் அது முழுதும் அப்படியே மீளச் சொல்லுதல் முடியத்தக்கதன்று. மேலாயதும் இதமுமாகிய அது யோகயுக்தனாகிய என்னால் நினக்குச் சொல்லப்பட்டது." என்று பகவானுரைத்த வசநம் காணப்படுதலானும் அவ்விசுவரூபம் யோகப்பிரபாவத்தாற் காட்டப்பட்டதென்பது தெளிவு. ஈண்டுக் கூறியவாற்றால் எத்திறத்தாலும் கண்ணற்குளதாகிய சிவாபேதத்தாற்றான் சிவயோக சாமர்த்தியத்தாற் கிடைத்த சிவோகம் பாவபாவநையாற்றான் சைவரூபமே காட்டப்பட்ட தென்பதில் பொருந்தாமை சிறிதுமில்லையென்பது பெறப்பட்டது. இதனால் "என்னாற்றானே இவர்கள் கொல்லப்பட்டார்கள்" என்னுமது உண்மையானோக்குங்கால் சிவபிரான்வசநமென்பதுணர்த்தி அதுபற்றிவருமாசங்கை பின்னும் மறுக்கப்பட்டது. அற்றேல், 'என்னாற்றானே' யென்பது விசுவரூபங்கொண்ட காலத்துரைக்கப்பட்டமையால் அதுதான் சைவரூபமேயாதலால் சிவவசந மென்பதமைக. அதனை விடுத்துக் கண்ணன் தனது நிசவடிவெடுத்த காலையில் 'என்னாற்றானே' யென்பது. விடுத்து "அவனாற்றானே" யென்றுரைத்ததுண்டுகொல்? அஃது ண்டெனினன்றே இப்பரியாலோசறைமுடிபு வலியுற்று ஒப்பப்படும் பிறவெனின், அஃதுணர்த்தற்கன்றே வருஞ்செய்டிளெழுந்ததென்பது. (10)

**புரிமதிச்சடையோயந்தவிங்கிது மன்பொருத்தமாதலினன்றேமோக்க**
**தருமத்திற்றனது நிசவடிவெடுத்த செவரியாலருச்சுநன்றனக்குத்**
**திரிபிரி தாவத்தேவனாற்செகுக்கப்பட்டவர்தம்மையே செகுத்தல்**
**புரிதியென்றுரைத்தவ்வுரைமுடியுன்பாற்புகன்றிடப்பட்டதையன்றே.** 11

(எ-து). விசுவரூபங்கொண்டகாலத்து "என்னாற்றானே பூர்வத்திற்றானே கொல்லப்பட்டார்கள்" என்றுரைத்த கண்ணன் அதனை விடுத்துத் தனது நிசவடி வெடுத்த காலத்து "அந்தத்தேவனாற் கொல்லப்பட்டவர்களையே நீ கொன்றவனாகின்றாய்" என்று அருச்சுநற்குரைத்து அதனால் என்னாற்றானே யென்னும வ்வசநம் சங்காரகாரணனாகிய சிவபிரான்பாற் பரியவசாந்மாதலை இனிது விளக்கினானென்பது மகாபாரதத்தில் மோக்கதருமத்திற் காணப்படும் அக்கண்ணன் வசந்த்திற்றானே பெறப்படவும் கண்ணன் அருச்சுநற்குக்காட்டிய விசுவரூபம் சைவமேயாக என்னாற்றானே என்னுமவ்வசநம் சிவவசநமெனப்போந்த இப்பரியாலோசநைமுடிபு ஒப்பப்பதெற்கண் ஆசங்கை என்னையென்பதாம்.

# பிரமதருக்கஸ்தவம்

"அவனாற் பூர்வத்தே கொல்லப்பட்ட சத்துருக்களையே நீ கொன்றவனா கின்றாய்; அளவிடப்படாத பிரபாவமுடையோன், தேவதேவன், உமாபதி, விசுவேசன், அவ்வியயனாகிய அரனைப் பிரயதனாய் நீ என்றும் போற்றுதி" என்று மோக்கதருமத்திற் பகவான் கண்ணன் அருச்சுநற்குரைத்த வசநம் காணப்படும். விசுவரூபங்கொண்ட காலத்துரைத்த "என்னாற்றானே கொல்லப்பட்டார்க" ளென்னும் வசமும் மோக்க தருமத்திற் காணப்படும்" அவனாற்றானே "யென்னுமிவ்வசநமும் சொல்லாலும் பொருளாலும் தம்முள் ஒற்றுமையுடையனவாமாறுரைத்து "என்னாற்றான" யென்னுமது சிவபிரான் வசநமென்றே நிசவடிவெடுத்த கண்ணன் றன்னாற்றானே இனிது விளக்கப்பட்டது. அற்றேல், சிவபிரான் வசநமன்னுமானின் "பூர்வத்திற்றானே கொல்லப்பட்டார்கள்" என்பது எதனைச் சுட்டியதாங்கொலெனின், அஃதாமாறுரைக்குதும்; நாளாயின் முன்னிலையில் இந்திரரைவயும் நோக்கி "இவள் நுமக்குப் பாரியாவாள். ஐயுறவில்லை. நீவிரனை விரும்மாநுடயோநியிற் பிறக்க. ஆண்டு நீவீர் அரியதொழிலையெல்லாம் செய்து போர்க்களத்தே திவ்வியங்களாகிய படைக்கலங்களினாலே சூரர்களாய் வெகுவிதமுடையர்களாய் மனிதர்களாய்ப் பிறந்திருக்கின்ற அப்பகைவர்களையெல்லாம் பொருதுவென்று கோறல் புரிந்து வென்றி யெய்திச் சவகர்மத்தால் மிகப் பூசிக்கப்படுவதும் மிக மதிக்கப்படுவதுமாகிய இந்திரலோகத்தையே மீட்டுமடைக" வென்று சிவபிரான். கட்டளையிட்டனுப்பிய குளியதெக்காலமோ அக்காலத்திற்றானே கொல்லப்பட்டார்களென்பதையே அது சுட்டியது பிறிதில்லையென்க. என்னை? "முதன்மையோராகிய இருடிகள் வசநத்தையோ அர்த்தம் அநுவர்த்திக்கும்" என்று அவ்விருடிகளது பெருமையுணரும் மேதக்கோர் கூறுப... சிவபிரானோ "விச்சுவாதிகன் உருத்திரன் மகாவிருடி" என்று சுருதியினாற் றுதிக்கப்பட்ட மகாவிருடியென்பது பிரசித்தம். ஈண்டு அவ்வசநமோ இந்திரர்களை நோக்கி அச்சிவபிரான் கூறியதென்பது. எனவே மகாவிருடியாகிய அவன் வசநம் அப்படியே அர்த்தத்தைப் பலிப்பிக்குமென்பது இனிது போந்து, பின்னிகழ்வனவாகிய நிகழ்ச்சிகளெல்லாம் அவ்வசநப்படியே முடிவு பேறெம்துமென்பது சொல்லாமே பெறப்பட்டது. படவே சூரரனைவரும் அன்றே கொல்லப்பட்டு முடிந்தார்களென்பது. தேற்றமாம். ஆகவே எல்லா நிகழ்ச்சிக்கு முந்தியதாய் மகாவிருடியாகிய சிவபிரானுரைத்த அக்கால நிகழ்க்கியே கட்டியது "பூர்வத்திற்றானே கொல்லப்பட்டார்க" ளென்பதென்று அபிப்பிராயங்கோடலே சாமஞ்சசியமாயிற்று. இனி நாராயணனால் கண்ணன் வடிவெடுத்தவதரித்தும் பாண்டவசாகாயகம் செய்யப்படுமென்று சங்கற்பிக்கப்பட்டதோவெனின், அது மேற்கூறிப்போந்த சிவவசநாநந்தாமே சொல்லப்பட்டதென ஆதிபருவத்தில் பஞ்சேந்திரோபாக்கியாகத்திற்றானே வருணிக்கப்பட்டமையால் அப்பூர்வபதச்சுட்டுக் கண்ணனுரை நிகழ்ச்சியிற் செல்லுமாறொரு சிறிதுமில்லையென்க. இதனால் முன்னர்க்கூறிய மோக்க தருமவசநத்தை அநுசரித்தும் பூர்வத்திற்றானேயென்னும் இதன்கட் போந்த சாமஞ்சசமுடிபை அநுசரித்தும் "என்னாற்றானே இவர்கள்" என்று தொடங்கிய அவ்வசநம் சிவபிரான்வசநமென்பதும் அவ்வசநத்தைக் கிளந்த விசுவரூபவிக்கிரகமும் சிவனுடைமையாகிய சைவமே பிறிதில்லையென்பதுமே பொருத்தமாயிற்று. கீதைகளில் பிறாண்டும் விசுவரூ விக்கிரகமாகிய அதனைத் தன்னதாகக்கொண்டு கண்ணனால் எது வியவகரிக்கப்படும் அது முழுதும் சிவபிரான்பாற் கண்ணற்குளதாகிய சிவாபேதத்தாற்றான் சிவோகம்பாவபாவு

நையாற்றான். எழுந்ததெனக்கோடலே பொருத்தமாதலானென்க. அற்றேல், இம்முறைபற்றிய வியவகாரபரியாலோசகை முடிபு எவரும் ஒப்புமாறு உறுதிப்பாடுடைத்தென்றல் எற்றால் வெளிப்படப் பெறுதுமெனின், அதுபற்றியன்றே எழுந்தது வருஞ்செய்யுளென்பது. (11)

**புண்ணியமுதலேபார்த்தனாற்காண்பான்புரிந்திடப்பட்டதுமுன்னாங்**
**கெண்ணியசகலமகிமைகளோடுமியைந்திடுபாவுருவன்றே**
**நண்ணினர்க்கினியோய்கீதையினவிலப்பட்டுளமகிமைகள்னைத்துந்**
**திண்ணநின்னுடைய்வெனல்வெளிப்படையேகௌர்மக்கூற்றாற்றொகுதுமே.** 12

(எ-து). விசுவரூபவத்தியாயத்தின் முன் ஆண்டுச் சொல்லப்பட்ட சர்வமகிமை களோடுங் கூடிய பரரூபமன்றே அருச்சுநனால் தரிசிக்கவிரும்பப்பட்டதென முன்னர்க்கூறிப்போந்த விசுவரூபமொன்றோ, அது தான் கீதைகளில் அதற்கு முன்னும் பின்னும் சொல்லப்பட்டன வாய்ப் போந்த மகிமைகளெவையெவை யுளவோ அவையவையெல்லாந்தாம் சிவபிரானுடமைகளென்பது வெளிப்படை யாதல் கூர்மபுராண வாராய்ச்சியுடையார்க்கினிதுபுலப்படுமென்பதாம்.

“இந்தச் சகத்தையெல்லாம் ஒருகூற்றினால் பற்றிநின்று நான் நிலை பெறுவல்" என்றற்றொடக்கத்தனவாக விசுவரூபாத்தியாயத்தின் முன் பகவான் கண்ணனால் எத்துணை மகிமை வருணிக்கப்பட்டதோ அத்துணை யோடியைந்த பரவடிவமன்றே தரிசிக்கப்படத்தக்கதென அருச்சுநனால் பிரார்த்திக்கப்பட்டது. எங்ஙனம்? “பூதங்களது தோற்றமும் ஒடுக்கமும் நின்பால் என்னால் விஸ்தாரமாகக் கேட்கப்பட்டன. அவ்வியயமாகிய மாகாத்மியமும், ஆன்மாவைச்சுட்டி எப்படி நீ கூறினை இது இப்படியே, தாமரைக்கண்ண, பரமேசுவர, புருடோத்தம், நினது ஐசுவரரூபத்தைக் காண்பான் விரும்புகின்றேன்' என இவ்வுசகத்தின் முன் சொல்லப் பட்டனவும் பின் சொல்லப்படுவனவுமாய்ப் பரபாவசூசகங்களாய்ப் போந்த சகலமகிமைகளும் சிவபிரானுடைமைகளேயென்பது கூர்மபுராணவசநங்களாற் பெறப்படுதல் பற்றி இவ்வாறு கூறியதென்க. என்னை? ஆண்டுவரும் ஈசுவர தீதையில் சிவபிரானது சகலமகிமையும் சிவபிரானாற்றானே சநத்குமாராதிகளுக்கு உபதேசிக்கப்பட்டதென வருணித்து "மகாமுநியாகிய சநத்குமாரபகவான் சம்வர்த்தருக்கு ஐசுவரமாகிய ஞாநத்தை அளித்தார், அவரும் சத்தியவிரதர்க்கு. யோகீந்திரார்கிய சத்தியவிரதரும் மகாவிருடியாகிய, புலத்தியருக்கு அளித்தார். பிரசாபதியாகிய புலத்தியரும் பின் கௌதமருக்கு அங்கிரா வேதவித்தாகிய பரத்துவாசருக்கு அளித்தார். கபிலர் சைகீஷவ்வியருக்கு, அப்படியே பஞ்சசிகருக்கும். சர்வதத்துவவித்தும் எனது பிதாவுமாகிய பராசாரும் அந்தப்பரமஞானத்தைச் சநகர்பாற் பெற்றார், அவர்பால் வாந்மீகி பெற்றார் சதிதேகபவாங்கசர், தேவர், ருத்திரர், பிநாகத்தைத்தரித்தவராகிய வாமதேவமகாயோகி முன் எனக்குரைத்தார். பகவானும் தேவதிதநயனும் அரியுமாகிய சாக்ஷாத்நாராயணன்றானே அந்த உத்தமமாகிய ஞாநத்தை அருச்சுநனுக்களித்தான். ருத்திரராகிய வாமதேவரிடத் தினின்று மிகமேலாயதை நான் எப்போது பெற்றேனோ அது தொடுத்துக் கிரீசனிடத்தில் எனக்கு விசேஷமாகப் பத்தி உண்டாயிற்று” என்று வியாச முநியினாற்றானே சொல்லப்பட்டது. “ஐசுவரமும் திவ்வியமுமாகிய அந்த ஞாநம்

உள்ளவாறே நின்னாலறியப்பட்டது. இருடிகேசன்றானே பிரீதியினால் சநாதநமாகிய அதனைச் சொன்னான். நினதிடத்திற்குச் செல்க செல்க. சோகநிகழ்த்தற் பாலையல்லை. சரண்ணியனாகிய சிவபிரானைப் பரபத்தியினாலே சரணடைக" வென. இவ்வாறே, அருச்சுநனைச் சுட்டியும் அவ்வியாச முநியாலுரைக்கப்பட்டது என்றும் கூர்மபுராணம் சொல்லும்... அதனால் பகவற்கீதைக்கு ஈசுவரக்கையின் அநுவாதரூபத்துவம் காணப்படுதலினால் அப்பகவற்கீதை சொல்லிய பொருள்க ளெல்லாம், ஈசுவரகீதைப்பொருளில் பரியவசாநத்தையடைய மென்றலே பொருத்த மென்பது பெறப்பட்டது. படவே அவ்வியவகாரபரியாலோசநை முடிபு உறுதிப் பாடுடைத்தென்றல் இதனால் வெளிப்படப்பெறுதுமென்க. அற்றேல் மூலபூதமாகிய ஈசுவரகீதார்த்தபரியாலோசநை போலப் பகவற்கீதார்த்தபரியாலோசநையினாற்றான் ஆண்டுபதேசிக்கப்பட்ட அர்த்தத்தைக்கேட்ட அருச்சுநனது வியவகார பரியாலோச நையினாற்றான் பகவற்கீதை சிவபரமாயெழுந்ததென்று நிச்சயிக்கப்படினன்றே ஈண்டுக்கூறிய பொருள் யாப்புறவெய்தும், அல்லாக்கால் அது யாப்புறவெய்து மாறில்லையெனின், அது பற்றியன்றேயெழுந்தது வருஞ்செய்யுளென்பது. (12)

**கீதைகளகத்துமாதவன்றன்னாற்கிளமைசாலருச்சுநன்றனக்கு**
**நந்தவீசனையேசரண்டைகுதியென்றெவ்வுரைநவின்றிடப்பட்**
**தியாதினின் னுரையையியற்றுவலென்றாங்கிவன்றனானின்வழிபாடே**
**சாதிக்கப்பட்டதங்கதனாலுமவ்வண்ணந்தெளிகுதுந்தானே.** 13

(எ-து). அருச்சுநற்குண்மை புலப்படவேண்டிக் கருணையினாற் கீதை நூலைச் செவியறிவுறுத்த ஆப்தகுருவன்றே கண்ணன் அக்கண்ணன்பாலுண்மையுணர்ந்து தான் செய்வனவெல்லாம் முதல்வன் செயலாகக்கண்டு பழிபாவங்கள் தன்னைத்தீண்டாது திருவருள் வழிப்பட்டு நன்னெறிபற்றி ஒழுகுமொழுகலாற்றை விரும்பித் கீதை நூலைக்கேட்ட உத்தமபரிபக்குவ சீடனன்றே அருச்சுநன் "பாரத, சர்வபாவங்களினாலும் அந்த ஈசுவரனையே சரண்புகுதி" என்பதன்றே கீதையில் அவ்வாப்தகுரு உரைத்த குருமொழி. நினது வசநத்தைச் செய்வ" லென்பதன்றே அவ்வாப்தகுரு முன்னிலையில் அவ்வுத்தமசீடனுரைத்த உறுதி வசநம். சிவபூஜையன்றிப் பிறிதில்லையன்றே அவ்வாறுரைத்த அவ்வருச் நன் தானுரைத்தவாறெழுகியவொழுகலாறெனச் சாங்காறுஞ்செய்தது பகவற்கீதையை வழுவாது சொல்லுந்திறத்திற் கண்ணற்கு முற்பட்டாரும் அதனை மலையாது மனம் பற்றிக் கேட்டுணர்ந்தொழுகிய ஒழுகலாற்றின்றிறத்தில் அருச்சுநற்கு முற்பட்டாரும் உலகிற் பிறரெவருமிலரென்பது பிறர்க்குமுடன்பாடன்றே. இவற்றையுட்கொண்டு கண்ணன் அருச்சுநனிருவரது அவ்வசநகவுளப்பாட்டையும் கண்ணனுரைத்த குருமொழி வரம்புப்பட்டு நின்று ஒழுகிய முற்பட்ட சீடனாகிய அருச்சுநனது சிவபூஜாநிய வொழுகலாற்று வியவகாரத்தையும் பரியாலோசிக்கும் ஊகமுடையார்க்குச் சரண்புகற்பாலனெனக் கண்ணனுரைத்த பரமான்மா ஈசுவரனாகிய சிவபிரானேயென்பதும் விசுவரூபவிக்கிரகமுடைமை உள்ளிட்டு முன்னும் பின்னுமாகக் கீதைகளிற்கிளந்த மகிமைகளெல்லாம் சிவபிரானுடையனவே என்பதும். கூர்மபுராணத்துணிபென மேற்கூறிப்போந்த பொருள் யாப்புற வெய்தவ தெளிதரப்படுமென்பதாம்.

# பிரமதருக்கஸ்தவம்

பகவற்கீதைகளில் - "ஈசுவரன் சர்வபூதங்களினது இருதயஸ்த்லத்தில் சர்வபூதங்களையும் மாயையினாலே யந்திராரூடங்களாகச் சுழற்றிக்கொண்டு நிலை பெறும். அருச்சுந, சர்வபாவங்களினாலும் அவனையே சரண்புகுதி. பாரத, அவனது பிரசாதத்தால் பரமாகிய சாந்தியையும் சாசுவதமாகிய பதத்தையும் அடைகுதி" என்று பகவானால் எது உபதேசிக்கப்பட்டது அதுதான், "எவன்பால் பழையதாகிய பிரவிருத்தியுளதாயிற்று. அந்த ஆதிபுருடனையே சரண்புக்கின்றேன்" என்று பகவான் றன்னாலும் செய்யப்படுவதாகிய ஈசுவரப்பிரபதனம் யாது அதுதான் அவன்விடய மென்றல் பொருந்துமாறு யாண்டையிது? "அந்த ஆதிபுருடனையே சரண் புகுகின்றேன்" என்புழி எந்தப் புருடனையென்று அவரவுங்கால் "எந்த அவ்வியயனாகிய ஈசுவரன் உலகமூன்றையும் உட்புகுந்து நின்று தாங்கும் மற்றை அந்த உத்தமனாகிய புருடன் பரமாத்மாவென்றெடுத்துரைக்கப்படும்" என்று பிரதிபாதி க்கற்பாலனாகிய புருடன்பால் சிவாசாதாரணமாகிய ஈசுவரநாமப்பிரயோகத் தினாலும் "ஈசுவரன் சர்வபூதங்களினது" மென ஈண்டும் அதுவே கேட்கப்படுதலினாலுமென்க. "உத்தமனாகிய புருடன் அவன் பரமாத்மா வென்றெடுத்துரைக்கப்படும்" என்னும் சுலோகத்தின் பின்னர் "எதனால் நான் அழிவதைக்கடந்தோன் அழியாததினும் உத்தமன் அதனால் உலகத்தும் வேதத்தும் புருடோத்தமனெனப் பிரசித்தனாகின்றேன்" என்று அழிவது அழியாததைக்கடந்து அவற்றினுமிக்கதாகிய உத்தமத்தன்மை தனக்கு முளதெனப் பகவான் சொல்லியது எது அதுவும் ஈசுவரர்பேதத்தாற்றான் ஈசுவரவிடயயோகத்தாற்றான் எழுந்ததென்று கொள்ளற்பாலதென்பது. புருடோத்தமநாமதேயத்தினும் முன் கேட்கப்பட்ட ஈசுவரநாமம் வலியுடையதெனப் பிராதாந்நியாநுரோதத்தால் இயைவிக்கற் பாலத்தாகலானென்க. இனி "ஐயுறவொழிந்தோனாய் நிலைபெறுவேனாகின்றேன். நினது வசநத்தைச் செய்வல்" என்று பிரதிஞ்ஞைபண்ணின அருச்சுநன் சாங்காறும் சிவபூஜாநிரதனாயே வாழ்ந்தானென்பதெது அதனாலும் கீதைகளில் சகல பரபாவ லிங்கமகிமைகளால் நிறைந்தோனென்றும் முமுக்ஷுகளாற் சரண்புகற்பால னென்றும் கண்ணனால் உபதேசிக்கப்பட்ட பொருள் சிவபிரானேயென்பது இனிதுணரப்படுமன்றே. இதனால் "அவனையே சரண்புகுதி யென்பது முதலியவற்றது அநந்தரம் "எல்லாவற்றினும் மிக்கரகசியமும் மிகமேலதுமாகிய எனது வசநத்தை இன்னும் கே" ளென்று தொடங்கிச் "சர்வ தருமங்களையும் கைவிட்டு என்னொருவனையே சரண்புகுதி" யென்று பகவானுரைத்ததெது அவ்விடயந்தான் "நினது வசநத்தைச் செய்வல்" என்று அதநநந்தரம் அருச்சுநன் அவற்குரைத்த பிரதிவசநந்தான் என்னுமிவைபற்றி வருமாசங்கையு மொழிக்கப் பட்டதென்க. இவற்றால் சரணடையற்பாலன் கண்ணனே என்பது பொருளா மெனின் சிவபூஜையைக் கைவிட்டு விஷ்னு பூஜையன்றே அருச்சுநனா செய்யற்பாலதென்று முடிபுளதாம். அங்ஙனமாகாது சாங்காறும் அவனாற்செய்யப்பட்டது சிவபூஜையே விஷ்ணுபூஜையன்று என்பது முடியாதலால் அப்பொருட்கோள் பொருந்தாதென்க. இனி ராத்திரியிற் செய்யப்படும் நித்தியமாகிய சிவபூஜையின் பொருட்டுத்தலைக் கட்டிய உபகாரமுழுதும் கண்ணன்பாற் சமர்ப்பிக்கப்பட்டது என்று போந்ததெவ்வசநமோ அதுவும் கண்ணன் வடிவில் சிவாவிர்ப்பாவம் உளது சிவாராதாபுத்தியாற்றானேயென்னுமிவ்வுண்மையற்றியெழுந்ததாகலின் அதுபற்றி, இழுக்கின்மையுணர்க. அதனாலன்றே "நைசமும், நைத்தி நைத்தியகமுமாகிய தனது.

அந்தவாதாரமுழுதையும் வாசுதேவன்பால் நிவேதிக்கப்பட்டதைத் திரியம்பகனது சமீபத்திற் கண்டான்" என்று கண்ணன் அருச்சுநனிருவரது கைலாசயாத்திரையில் சகலவுபகாரமும், சிவகமீபத்தில் அருச்சுநன் கண்டமை சொல்லப்பட்டது. இனிக் கீதையில் சத்தியங்களாகிய உறுதிமொழிகள் பலவற்றையும் அருச்சுநனுக்குரைத் துத் தனது நிலைமை முழுதும் அவனுக்குத் தரிசிப்பிக்கப்பட்டதென்றும் அதனால் அவன் சத்துருக்களைக் கொன்றானென்றும். தருமனுக்குக் கண்ணனுரைத்த வசநத்தை யநுசரித்து நினது வசநத்தைச் செய்வில் என்று அருச்சுநனுரைத்தது. யுத்தமாத்திரவிடயமாமெனக்கொள்ளின் ஆண்டும் "பிற்ரைக் சிந்தைசெய்யாதோர்" 'என்னொருவனையே சரண்புகுதி' அற்பமேதைகளாகிய அவரது அப்பலம் அந்தமுடைய தென்றற்றொடத்தத்துவசநங்களைப் பகவான் சொல்லியதனால் அவற்றைக்கேட்டு அவன் சொல்லியவாறே அருச்சுநனால் எனைத்தேவரைக்கை விட்டுச் சிவபிரானைக் சரண்புகுதலாகிய சிவபூஜாமே செய்யப்பட்டது என்பதில் விவாதமில்லையென்க எனவே என்றும் தன்னாற் பூஜிக்கப்படுபவனாகிய சிவபிரானது மகிமையே கீதைகளிற் கண்ணனால் அருச்சுநனுக்குப தேசிக்கப்பட்டதென்பது தெளிவித்துங் பரபாவம் சிவபிரானுக்கே உண்டென்பது பகவற்கீதை கொண்டு நிச்சயிக்கப்பட்டதாயிற்று. அநுகீதாவதாரப் பிரச்சிநத்தை யநுசரித்துக் கீதாசிரவண சமயத்தில் சமூசயகற்பமாகிய ஞாநம் அவ்வநுகீதாசிரவணாநந்தரம் திடநிச்சயமாயிற்று என்றும் ஈண்டுக் கோடல் தக்கதென்பது இவ்வைந்து செய்யுட்களாலும் பாண்டவர்களிடத்துச் சிவபிரானுக்குரிய அருட்பெருந்தகைமையென்னுமேதுக்கண் என்னாற்றானே' யென்னும் கண்ணன் வசநம் பற்றி வரும் ஆசங்கைகளை யெதிரிட்டு அவற்றினுள்ளூறு பொருள் காட்டி அவையெல்லாம் அவ்வேதுவின்கண் ஆக்கவியல வாமாறு தெளிவித்து அவ்வேது மேன்மேலும் வலியுறுத்தப்பட்டது. ஈண்டுக் கூறிய வாற்றால் கண்ணன் பிராமணர்களைக்காட்டினும் பாண்டவசமரக்ஷத்துவம் சிவபிரானுக்கு அதிகமாதல் விளக்கி, "மூலம் கண்ணன் பிரமம் பிராமணர்" என்னும் மகாபாரதவசநத்தில் மூலத்துவநிரூபணம் அச்சிவபிரானுக்கு ஆவசியகம் சொல்லற்பாலதென முடித்து அதன்கண் வரும் நிருபபதமாகிய பிரமபதம் பரப்பிரமப் பொருள் சிவபிரானேயென்பதை விளக்குதற்கண்ணெழுந்ததென்னும் உண்மை வச்சிரலேபருஞ்செய்யப்பட்டது. இதனால் பரப்பிரமபாவம் சிவபிரானுக்கே யுரியதென்பதை அவன்பால் நிருப்பதப்பிரமபதப்பிரயோகஞ் செய்து விளக்கினான் வியாசமுநியென்பது சமர்த்திக்கப்பட்டது. இனிப் பிரமப்பொருள் சிவபிரானென்பதைப் பிரமசூத்திரங் கொண்டு நாட்டவெழுந்தது. வருஞ்செய்யுளென்பது. (13)

**வாதராயணன்றான்சூத்திரகணத்தங்குட்டமாத்திரம்புருடனையே**
**யாதினின்னிடையேகிலுத்தமதாயரூடியீசாநனென்பெயரான்**
**மேதகுபிரமமெனநிறுத்திட்டான்விமலநாயக்வதனாலும்**
**போதருபிரமமென்றுநின்றனையேபுண்ணியாபுடஞ்செய்தானன்றே.** **14**

(எ-து) "அங்குட்டமாத்திரமாகிய புருடன் ஆத்மமத்தியத்தில் நிலை பெறும். இறந்ததற்கும் எதிர்வதற்கும் ஈசாநன். அதனால் மறைக்க இச்சிக்கின்றிலன்" என்று கடலல்லிகளிற் படிக்கப்பட்ட புருடனைப் பரிச்சிந்நபரிமாணத்துவத்தால் சீவனெனக் கொண்டெழுந்த பூர்வபுக்கத்தை மறுத்துப் பிரமசூத்திரகணத்தில் "சுத்தத்தினாற்றானே

அளக்கற்பால" னென்னும் அதிகரணத்தில் பிரமாபிதாந ரூபமாகிய ஈசாநசத்தத்தாற்றானே பரமான்மாவென்று அளந்து நிச்சயிக்கப்படுமென்று அவ்வங்குட்ட மாத்திரபுருடனைப் பிரமமென நிறுத்தினானன்றே பகவான் வியாச முநி சிவபிரானுக்கே ரூடியென எவருடுமாப்புமாறமைந்த ஈசாநசத்தமன்றே அவ்வாறு நிறுத்தியதற்குச் சாதகமாய் நின்றது. அதனாலும் ஈசாகசப்தவர்ச்சியனாகிய சிவபிரானே பிரமப்பொருள். ஏனையோரல்லரென்றல் பிரம்சூத்திரகாரர் துணிபென்பது வெள்ளிடைமலை போல விளங்க நிற்கின்றதென்ப தாம்.

ஈண்டு எவன் அங்குட்டமாத்திர்புருடன் அவனை ஈசானென்றறிந்து அதநகந்தரம் தன்னை மறைக்க இச்சிக்கினறிலன் அபயப்பிராப்தத்துவத்தால் என்று இங்ஙனம் 'அறிந்து' என்னும் சொற்பெய்து மந்திரப் பொருள் சொல்லற்பாலது. "அங்குட்டமாத்திரமாகிய புருடன் அதும்கமாகிய சோதிபோலும் இறந்ததற்கும் எதிர்வதற்கும் ஈசாநன் அவனே இன்று அவனே நாளை இதுதான் இது" என்பது முதலியனவாக வேறு மந்திரங்களும் ஆண்டுப் படிக்கப்படும். ஈசாநசத்தயோகத்தால் அடைவிக்கப்படும். ஐசுவரிய லிங்கம் இருக்க, எளிதிலுணரப்படும். ஈசாநசத்தத் தாற்றானே அளக்கப்படுவது பரமான்மாவென்பதை நிர்ணயித்தல் முடியுமென்பது ஈண்டு அதிகாரணத்தில் எவ்காரத்தின் பொருளாதறெளிக. இனி இறந்ததற்கும் எதிர்வதற்குமென ஐசுவரியப்பிரதியோகியுபாதார்த்தால் கேவலம் ஐசுவரரூபலிங்க சமர்ப்பத்மேயாம்,, இவ்வீசாகசப்தம்.. இது தேவதாசமர்ப் பகமன்றெனின் அது பொருந்தாது. என்னை?. பிரதியோகிவிசேடோ பாதாகமிருப்பினும் அதன்பாற் கிலுப்தமாகிப் ரூடியினாலே அதனாற்பெறப்படுபொருள் தேவதாவிசேடமென்பது தடையின்றி ஒப்பற்பாலத்தாகலானென்க. இவ்வியல்பு சிவதத்துவவிவேக முதலியவற்றுள் விரித்துரைக்கப்பட்டது, ஆண்டுக் கடைப்பிடிக்க, அபரிச்சிந்தனாகிய பரமேசுவரனுக்கு அங்குட்டமாத்திரத்துவமுரைத்தது இருதய கமலாவச் சிந்நத் துவத்தாலேலிங்கரூபத்தன்மை மேற்கோடலானென்க. அதனாலன்றே அம்சோப நிடதத்தில் இருதயகமலாவச்சிந்நமாகிய பிரமத்துக்கு லிங்க ரூபத்துவம் சொல்லப்பட்டது. "இந்த இப்பரமஹம்சம் பாநுகோடிப்பிரதீகாசம், எதனால். இது வியாப்தம் அதற்கு விருத்தி எண்வகையாலுளதாம். பூர்வதளத்தில் மதி, ஆக்கிநேய த்தில் நித்திரை ஆலசிய முதலியன உளவாம். யாமியத்தில் கிரௌரியத்தின் மதி, கைஞதியிற் பாபத்திற் புத்தி, வாருணியில் கிரீடை வாயவ்வியத்தில் கமனமுதலியவற்றிற் புத்தி, சௌமியத்தில் ரதிப்பிரீதி, ஐசாகத்தில் திரவியாதாநம், மத்தியில் வைராக்கியம், கேசரத்திற் சாக்கிராவஸ்தை, கர்ணி கையிற் சொப்பநம், லிங்கத்திற் சுழுத்தி" என ஆண்டுரைக்கப்பட்டது. "அதனின்மை நாடிகளினும் அது கேட்கப்படுதலின் ஆத்மாவினும்" என வருமதிகரணத்திலும் இருதயகமலா வச்சிந்தமாகிய பிரமத்தினிடத்தன்றே சீவனுக்குச் சுழுத்தி சகல சுருதிசித்தமாகச் சமர்த்திக்கப்பட்டது; படவே ஈண்டுப் பிரமத்திற் சுழுத்தியென்று சொல்லவேண்டுழி லிங்கத்திற் சுழுத்தியென்று சொல்லிப் போந்தவதனால் இருதயகமலாவச்சிக்கமாய் அவ்வவ்வங்குட்டபரிமாணலிங்காகாரத்தன்மையால் உபாசநீயமெனப் பிரமமே சுருதி யினால் விளக்கப்பட்டதென்பது பெறப்பட்டது. "அதன்பின் அவ்விய யவான்மாவும் முராரியுமாகிய அந்த அரி இருதய்பங்கயசாயியும் ஐசுவரமுமாகிய லிங்கத்தைத்

தேவர்களுக்குத் தரிசிப்பித்தான்" என வாமநபுராணத்திலும் இருதயத்தின் கண்ணுள்ளோனாகிய ஈசுவரனுக்கு லிங்கரூபத்துவ முண்டென்பதைத் தேவர்களுக்கு நாராயணனுணர்த்தியமை சொல்லப்பட்டது. இதனால் கடவல்லி மந்திரத்திற் பிரமபரத்துவ நிர்ணயம் செய்தவிடத்துச் சிவாபிதாநச்சுருதியை. ஆண்டைக் கண்ணேதுவாகக்கொண்டு முடித்து அதனாலும் சிவபிரானுக்கே பரப்பிரமபாவம் விளக்கினான் பகவான் வியாசமுநி என்னும் முறைமை தரிசிப்பிக்கப்பட்டது. இதுகாறும் முதற்செய்யுட்கண் நிறுத்தமுறையானே உபநிடதவசநங்களாகிய விதப்புவாக்கியங்கள் பலவும், புராணவிதிகாசமென்னுமிருதிறத்து உபப்பிருங் கணங்களும், பிரமசூத்திரமுமென்னுமிவற்றால் எது பிரமமென்று பிரதிபாதிக்கப்படும் அந்தப் பிரமம் சிவபிரானேயென்பது, சாதகோபக்கியாந்நியாசமுகத்தால் நாட்டப்பட்டது. இது சாதகோபக்கியாசம். இனிவருவது பாதகோத்தாரணம். (14)

**இப்படியளவைவரிசையாற்சங்கையிரிதரப்பிரமநீயென்று**
**செப்பநின்னிடையாரோபமாத்திரையாற்சேர்பனவாம்பிறப்பாதி**
**தப்புகளானீபிரமமன்றென்றுசாற்றுநற்செளியனேனாகிற்**
**குப்புறாதெடுத்தாண்டருள்குருமணியேகோவிடையாய்கொளுத்துதுமே** 15

(எ-து). இந்தப்பிரகாரம் சுருதி புராண விதிகாச நியாய சூத்திரபரியாலோச கையாற் பெறப்படுவனவாய்ச் சிவபிரானுக்கேயுரிய பரப்பிரம்பாவ சித்திக்குச் சாதகங்களாயமைந்த பிரமாணவரிசைகளை ஒப்புமாறு வகுத்து நிரூபித்தும் அவற்றை யுணர்வினுள்ளூறைப்பக்கொண்டடங்காதார் எவ்வாற்றானும் தெருட்டற் பாலரல்லர். அவர், அம்மட்டோ, எவ்வுபாயத்தானும் சிவபரப்பிரமநிர்ணயத்திற்கு இழுக்கு நேராது கொல்லென்னும் ஏக்கறவுபூண்டு அது பிடர் பிடித்துந்தப் பிறப்பிலி யாகிய சிவபிரானுக்குப் பிறப்பு முதலிய தப்புக்களுளவாக அற்றம் நேர்ந்துழி ஆரோபித மாத்திரத்தாலியைவித்து வாய்கூசாதுரைத்துச் சிவாயராதிகளு மாகின்றனர் அவரவ்வியல்பினராய் எரிவாய் நரகிற்கிரையாய் மாழாந்து போகாமன் முன்னைப்பிறப்பினல்லூழ் வந்து கைகூடுமேல் நன்னெறி கடைப்பிடித்துய்தற் பொருட்டுத்தான், பிறரும். அவர்பொய்யுரையை மெய்யுரை யெனச் செவிக்கொண்டு வழிமயங்காமற் பாதுகாத்தற் பொருட்டுத்தான் தவநெறி விடுத்து அவநெறிபற்றிய அன்னோர் பிதற்றும் அவ்விழுக்குரைகள் எதிருரைபுகன்று மறுத்தற்குரியன வல்லவாயினும் ஒருவாற்றான வரளவிற் கசக்குமியல்பினவேனும் கருணையாற் சில புகன்று அவர்க்குக் கொளுத்துதல், ஈண்டை இந்நாளுலகியல் நோக்குங்காற் பெரிய தோரறமென்பதாம்.

இதனால் பாபக்கத்தாராய். உண்மையியல்பு பற்றாது துரபிமாந மாத்திரையே பற்றி மாறுப்படக்கூறு வாலிசர் புலம்பல்களை வேர்களைந் தெறியுமாறு தோற்றுவாய் செய்யப்பட்டது. (15)

**எந்தைகற்பத்தின்முதல்களிலயன்மாலீசன்றனுருக்களினீயே**
**முந்துநின்னிடையேபிரவிபாகத்தைமுற்றுதிமுற்றுணர்முதலே**
**யுந்துகண்ணுதலேயவைதமுளவராலொருவர்பாலொருவராயுதித்தென்**
**சிந்தையுள்விளக்கேயநுகரித்திடுதிவென்றியின்விழைந்துளோர்செயலே.** 16

# பிரமதருக்கஸ்தவம்

(எ-து). முதல்வனாகிய சிவபிரான்றானே சற்பரிபாகமுள தாமாறு உயிர்கள் பொருட்டுப் புநருற்பவஞ் செய்வனாகலின் அதுபற்றிவருங்கற்பாரம்பங்கடோறும் முக்குணங்களினொன்றொன்றின் மிகுதிப்பட்டுநின்று அவை பற்றி வரும் அயனரியா னென்னும் மூவர்வடிவங்களை மேற்கொண்டு தனது சத்தியாற் றன்னிற்றனே பேதவியல்புடையனாய்த் தோன்றிநின்று தோற்றம் நிலை இறுதியென்னும் முத்தொழிலும் செய்வான். ஒருவர்பாலொருவராய் அவர்பால் அவராற்றோன்றி. அம்மூவர்வடிவங்களும் மேற்கொள்ளும் அம்முதல்வன்றானே அவராலவர்க்குள் தாம் வென்றிவிழைந்த செயல்களை விளையாட்டு மாத்திரமாக அறுகரித்திலுஞ் செய்வன் அதன் கண்வரும் வியவகார வகைகள் உண்மையானிரூபிக்கில் முந்திய முதனடுவிறுதியுமாகி மூவருமறிகிலனாய் யாவரும் மற்றற்கிலனாய்ப் பந்தணை விரலியுந் தானுந் தன்னடியார் பழங்குடிறொறு மெழுந்தருளியபரனை எவ்வாற்றானுந் திண்டற்பாலனவல்ல. அவனும் அவற்றிற் றொடக்குறற்பால்னு மல்லன். இவ்வியவகாரங்கட்கெல்லாமதீதனாய் நின்ற பெருந்தகையாகிய அவனியல்பு அம்மூவர்வியங்காரங்களுள், வைத்தெண்ணவருவதொன்றன்று. இவ்வுள்ப்பாடு வினைமாசுநீங்கி முக்குணமுங்கடந்து அவனருள் பெற்றுடைய மூதறிவாளர்க்கே அறியவருவதொன்று... அவரும் அவன்ருணிறைவிலடங்கி அநந்நியராய்க்கலந்து நின்று அவனருள் கண்ணாக அறியாமலறியின் ஒருவர்ற்றான றியப்படுந்தரத்தது அவ்வுளப்பாடெனின், அவர்க்கேயன்றி எனைப்புல்லறிவாளராகிய அவ்வாலிசர்க்கு எங்கு மெங்கள் பிரானார், புகழல் திகழ்பழியிலரே" என்னுமவ் வுண்மையுளப்பாடு எட்டுணையேனும் புலப்படுதல் யாண்டையதென்பதாம்.

பிறப்பு தாமசத்துவம் பாசபத்தியவரணம் வாணாசுரயுத்தமுதலியனவாகத் தப்புக்களென்று அவர்தம்மாற் சொல்லப்படுமவைதாம் மூவர்க்கு முதல்வனாகிய சாம்பசிவனுக்கு எவ்வாற்றானுமியையுமாறில்லை. மற்றெவர்பால் அவை யியைவிக்கப்படுமெனின் சங்காரருத்திரனும் ஸ்ரீசாம்பசிவவிபூதிவிசேடங்களாய் அவனது அமிசவடிவினருமாகிய அன்னோர் பாற்றாமே அவை யியைவிக்கப்படு மென்க. அவர் தமக்கும் பிரமநாராயணர்களைக் காட்டினும் நிகர்ஷம் நியமமாக வில்லை. மற்றென்னைகொல்லெனின், ஓரிடத்தில் பிரமனுக்கும், ஓரிடத்தில் நாராயணனுக்கும், ஓரிடத்தில் அன்னோர் தமக்கும் உளதெனக் கற்பாதிபேதத்தால் அது வியவஸ்தைசெய்யப்படுமென்க. "காரணாத்மாக்களாகிய அம்மூவரும் சாக்ஷாத் மகேசுவானிடத்தினின்றும் தோன்றினார்கள்" என்று தொடங்கிப் "பிதாவும் மகேசுவரனுமாகிய அவனைத் தபத்தினால் மகிழ்வித்துப் பூருவம் கற்பாந்தரத்தில் உருத்திரன் பிரமநாராயணர்களைச் சிருட்டித்தான். சகன்மயனாகிய பிரமா பின் கற்பாந்தரத்தில் உருத்திர விட்டுணுக்களையும், விஷ்ணுவாகிய பகவானும் அதுபோல மீளப் பிரமாவைச் சிருட்டித்தான். பிரமா மீள நாராயணனை, பவன் மீளப் பிரமாவை. இந்தப்பிரகாரம் கற்பங்கடோறும் கற்பங்கடோறும் பிரம விட்டுணு மகேசுவரர்கள் ஒருவரையொருவர் வெல்லுமிச்சையுடையர்களாய் ஒருவர்பாலொரு வராய்ப் பிறக்கின்றார்கள். அந்தந்தக்கற்பாந்தவிருத்தாந்தத்தை யதிகரித்து மகாவிருடிகளால் ஒருவர்பாலொருவர்க்குளதாம் அவரது பிரபாவமானது சொல்லப்படும்" எனவும் "அந்தந்தக் கற்பாந்தவிருத்தாந்தத்தை அதிகரித்து மகாவிருடிகளால் அவை அவை சொல்லப்பட்டன. ஆண்டு வித்துவான் மயங்கு

வானல்லன். இவன் மேலோன் இவனல்லன் என்று சம்ரம்பத்தில் அபி நிவேசிப்போர் இராக்கதர்களாயும் பிசாசர்களாயும் பிறப்பார்கள். சமுசயமில்லை" எனவும் மேற்கூறிய இவ்வுண்மை சிவபுராணத்தில் வாயுசங்கிதையில் வெளிப்படவுரைக்கப்பட்டது. "பிரம விட்டுணு ருத்திரர்களுக்குப் பேதம் சொல்லப்படுவதை இலதாகவும் எவன் சாதிக்கின்றான் அம்மாநவன் உதரவியாதி யுடையனாகின்றான்" என்று கர்மவிபாக சாத்திரத்திலும் பரமேசுரனது அமிசபூதர் களாகிய அவர்க்குப் பேதம் சாதிப்பதில் தப்புண்மை யுரைக்கப்பட்டது. இதனால் சாக்ஷாத் சாம்பசிவனுக்குத் தப்புக்களெவையும் ஒப்பற்கொரு சிறிது மிடனிலதாகவும் பிறப்பு முதலியனவாக மேற்கூறிப்போந்த சிலவற்றை எடுத்துக் கொண்டு அவைதாம் உள்ளிட்டு நோக்குங்கால் எவ்வியல்பினவாமென்பதை ஊகித்தல் செய்யாது அவற்றைத் தப்புக்களாக வைத்து அவையெல்லாம் சங்கார ருத்திரன் பாலனவும் அவனமிசங்கள் பாலனவும் என்றடங்கலுஞ் செய்யாது சாம்ப மூர்த்தியாகிய அச்சிவபிரான் மேல் அவற்றை இயைவித்துப் புலம்புமவ்வாலி சருரைகட்குச் சாதாரணபாரமார்த்திகபரிகாரமுரைக்கப்பட்டது. இனிச் சாக்ஷாத் சாம்ப மூர்த்தி மேலனவாகத்தான் அவற்றை என்று கொண்டு பிறப்பு என்று அவர் கூறியதனியல்பு வியவகரித்து விளக்கி அதன்பால் அவர் கொண்ட வாறிழுக்கின்மை யுணர்த்தவெழுந்தன வருஞ்செய்யுட்களென்பது. (16)

**தேவநான்முகன்மாலிவர்தநெற்றியினிற்றிருவுருக்கொண்டனைநீயே**
**யாவையேலதனாலிழிபுனக்கென்னோவயன்றனாசித்துளையதனின்**
**மேவினையலைமாலெனப்பௌத்திரன்பால்வந்திலைவெளியனேனெனதும்**
**பாவகத்துருக்கொண்டுதித்தருண்முதலேவந்திலைமநுடன்பாலினுமே. 17**

**எங்கணுநிறைந்தோய்புருடவீரியத்தினியறுளித்தொடர்புநிற்கிலையே**
**யங்கநையொருத்திகருப்பவாசமுமின்றையயோநிசத்துவமின்றா**
**லங்கொரோவிடத்துவியத்திமாத்திரத்தாலவத்தியநினக்கெனிலரிக்குச்**
**சங்கரவிவற்றாலெத்தனைகுறைதாஞ்சார்ந்திடாதனிட்பரம்பொருளே. 18**

**ஐயவிவ்வவதாரங்களாமனைத்துமப்பியர்த்தநத்தினதடைவாற்**
**செய்வதுவினையின்வயத்தன்றென்றுசெப்புபௌராணிகர்தம்மான்**
**மெய்யமன்விளக்கப்படுபரிகார்வித்மந்தோவீணராமவர்க்குச்**
**செய்யமேனியனேயறியப்பட்டதுவாய்ப்படாததாய்ச்சென்றதையன்றே. 19**

(எ-து). சிவபிரானுக்குப் பிறவியுண்டென்று பரபக்கவாலிசர் ஆரோபித்துக் கூறியவதுவும் பிரமநாராயணர்களது அவிமுக்தோபாசநாஸ்தாநமாய் அதனால் அதிபரிசுத்தவியற்கைத்தாய் வாய்ந்த லலாடப்பிரதேசத்தினின்றும் போந்த அபிவியக்திமாத்திரமே பிறிதில்லையென்பதும், நாராயணனுக்குப் போலப் பிரமனுடைய நாசாபுடத்தாற்றான் அவனது பௌத்திரராகிய காசிபரிடத்திற்றான் மநுடமாத்திரத்திற்றான் பிறந்தது போல்வதொருபிறப்புச் சிவபிரானுக்கு யாண்டு மில்லை யென்பதும், எப்பெருமானுக்குத் தோற்றம் சொல்லிய விடத்தும் நாராயணற்கு போலப் புருஷவீரியா நுப்பிரவேசந்தான் ஸ்திரீ கர்ப்பவாசந்தான்.

# பிரமதருக்கஸ்தவம்

அம்ம! யோநிசத்துவந்தான் என்னுமிவை பற்றி அது நிகழ்ந்ததன்றென்பதும், இவை யெல்லா முணர்ந்தும் ஒரோரிடை நிகழ்ந்த அபிவியக்திமாத்திரத்தாலே சிவபிரானுக்குத் தோஷமுளதாய்த்தென்று முந்தியுரைக்கு மவ்வாலிசர் கூற்றுத் தானுரைக்கப்பட்டு அவர்வாய்ப்புறம் போதற்கு முன்னே நாராயணன்பால் ஒன்றினொன்று நோக்கப் பெரிதும் இழிவரவுறுத்துவனவாகிய ஈண்டுக்கூறிய எதுக்களாறானும் சங்கை தீர்ந்த அவத்தியங்கட்கெல்லாம் தோற்றுவாய் செய்து அவர் தமக்கே அநர்த்தமாய் விளைந்ததென்பதும், சிவபிரானது சநநமாகாத அபிவியக்திமாத்திரத்தைச் சநநதோஷத்ததென வெளியிடுமவ்வாலிசர் உண்மையா னோக்கின் நாராயணற்குரிய சநநதோஷத்தையே எவர்க்கும் இனிது பிரகாசப் படுமாறு திறந்துவிட்டுச் சந்தியிலிழுத்துவைத்த சழக்கர்களாய் முடிந்தார்க ளென்பதும், அப்படியன்றென்று அவர் பின்னும் வெறுங்கூச்சலிடுவரேல் அவர்தாம் வழிபடும் ராமன் கண்ணனவதாரங்களில் முக்கியமாக நிகழ்ந்த சோகம் மோகம் பீதி முதலிய பாரவசியங்களாக ஆண்டாண்டு விரிக்கப்பட்டனவற்றை எடுத்துரைக்கவே நாராயணனது அச்சநநதோஷம் வலிபெற்று அவ்வெறுங்கூச்சலை வந்தவழிநோக்கப் புறம்பொழித்துவிடுமென்பதும், ஈண்டு அறுவகைபற்றிக்கிளந்த நாராயணனது அவதாரவியவகாரங்களெல்லாம் பிரமன் முதலியோர் செய்த பிரார்த்தநைந்கெளி வந்து ஏனையோர்க்குப்போல வினையின்வயத்ததாகாது சுவேச்சாமாத்திரத்தாற் செய்யப்பட்டனவென்றும் அவ்வப்போது கொண்ட மாநுடபாவ முதலியவற்றால் அநர்த்தரூபமாய்த்தோன்றும் சோகம் மோகம் முதலியனவெல்லாம் அவ்வவ்வவதாரங்கட்கியைந்த அபிநயமாத்திரையே பிறிதில்லையென்றும் இது எங்ஙனம் பெறப்பட்டதென்றார்க்குப் புராணவசநங்களாலென்றும் தமக்கு வேண்டிய வளவிற் பரிகாரமுரைப்பாராய்ப் புராணவசநங்கள் காட்டி அத்துணை சூழ்த்து கூறுமன்னோர் அம்மாத்திரைக் குமிடனாகாத சிவபிரானுக்குரிய எத்துணையு முயர்ந்த அபிவியக்திமாத்திரமும் பிரமாதிகளது பிரார்த்ததைக்கெளிவந்த சுவேச்சா கிருத்தியமென்று அவர்தாம் காட்டுமவற்றின் எத்துணையும் வலிபெற்றுவரும் அப்புராணவசனங்களாற்றான் றெளிந்து அதனுண்மைகடைப்பிடித்து என்றும் அடங்கவே முறையாக அவரை அங்ஙனமாகவொட்டாது தடுத்து நின்ற அவரது மோக படலமே பெரிதும் வியக்கற்பாலதென்பதும், இழிந்தனவாகிய நாராயணன வதாரங்களுக்கெல்லாம் பரிகாரந்தேடிக்கூறுமாறு அவர்க்குத் தெரிந்து உயர்ந்ததாகிய சிவபிரானது அபிவியத்திமாத்திரத்திற்குப் பரிகாரமவர்க்குத்தெரியப்படாது மறைந்தது அவர்தங்கயமையியல் பின்வைத்து நோக்க அவர்க்கு வியப்பன் றென்பதும், இது அறிவான்மேதக்க சான்றோரியல்பாகாது பெரிதும் நகைவிளைத்தற் கிடனாமென்பதும், இவர் இப்படியே தமக்கு மநம்போனவாறு பிதற்றி நாத்தழும் பேறிச் சிவாபராதிகளாவதுகண்டு சத்துக்கள் அந்தோவென்றிரங்கினும் அது அவர்தம் வினைவலியால் அவர்க்குப் புலனா மாறில்லையென்பதும் இனிது விளங்கலால் "பிறப்பில்பெருமா" னாகிய சிவபிரானுக்குப் பிறப்புளதென அவர் கூறிய பொய்யுரை நெருப்பின் முன்னிட்ட பஞ்சினது கதியை அடைந்தொழியுமேதவிரப் பயன்படுமாறொருசிறிதுமில்லையென்பதாம்.

பிரமனது நாசாபுடத்தால் விண்டு பிறந்தது ஆதிவராகரூப மெடுத்த காலையிலென்க. இது "அநக, இப்படியே தியாநிப்போனது நாசித்துளையினின்று

பன்றிக்குட்டி அங்குட்டபரிமாணமுடையதாய்ச் சீக்கிரம் வெளிவந்தது. கணப்போதில் அகிலவாரியினின்றும் ஆகாயத்ததாய் யானை மாத்திரமாக வளர்ந்தது. அதைக் கண்ட அவனுக்கு அது மகத்தாகிய அற்புதமாயிற்று" என்று பாகவதத்தில் சொல்லப்பட்டது. அகில வாரி என்றது பூமியை அமிழ்த்திய பிரளய சமுத்திர வெள்ளத்தை. புருடவீரியாநுப்பிரவேசம் ஆண்டுஸ்திரீகர்ப்பவாசம் அவள்பால் யோநிசத்துவம் இவைகள் விண்டுவுக்குண்டென்பது பாகவதத்திற்றானே வாமநா வதாரத்திலுணர்த்தப்பட்டது. "அதிதி பிரபுவாகிய அரியினது துர்லபமாகிய சந்மத் தைத் தன்பாற் பெற்றுக் கிருதகிருத்தியை போல மேலாகிய அன்பினால் பதியிடத்திற் சென்றாள். உண்மையறிவுடைய அந்தக்காசிபமுநி அரியினது அமிசம் தன்பாற் புகுந்திருக்குமதைச் சமாதியோகத்தாலறிந்தான். அரச, தபசினால் வெகு காலமாகச் சம்பாதிக்கப்பட்ட வீரியத்தை ஒற்றுமை மநசுடைய அவன் தாருவில் அக்கிநியை அநலன் போல அதிதியிடத்தில் விட்டான். அதிதியினால் அதிட்டிக்கப்பட்ட கர்ப்பத்தைச் சநாதநனாகிய பகவானென்றறிந்து இரணியகருப்பன் குஃகியநாமங்களால் துதித்தான். இந்தப்பிரகாரம் விரிஞ்சனாற் றுதிக்கப்பட்ட கர்மவீரியனாய் அமிர்தபூவானவன் நாலுபுயத்தனாய்ச் சங்கம் கதை தாமரை சக்கரமுடையனாய்ப் பீதாம்பரனாய்த் தாமரைமலர்போலும் நீண்ட கண்ணுடையனா ய்த் தோன்றினான்" என்று பாகவதம் சொல்லுமென்க. பிரமன் துதித்தானென்று சொல்லப்பட்டவிதனால் சிலகாலம் மநுடர்முதலியோர்போலக் கருப்ப வாச முண்மை சூசிக்கப்பட்டது. பிரகிலாதன் விண்டு யாண்டுள்ளானென்று சர்வலோக ங்களினுந் தேடி ஓரிடத்தினுங் காணாது மேருவின்கீழ் ஓர் சாரில் தேவமாதாவாகிய அதிதி அதிகதேசசுடையளாயிருத்தல் கண்டு இவளுடையகுக்ஷியில் நிச்சயமாக இருக்கின்றானென்றெண்ணி அதன்கட்புகுந்து ஆண்டு விண்டுவைக் கண்டான் என்று வாமந புராணத்தில் இவ்வுண்மை வெளிப்படையாகவே யுரைக்கப்பட்டது. "முநியே, தாநவபதி தேசசு முழுதினாலும் அதிகையாய் அந்தத் தேவமாதா இருத்தலைக் கண்டு மதுசூதநனைத் தேடும் பொருட்டுப் புகுந்தான். அவன் பின் சகந்நாதனும் வாமநாகிருதியுடையனும் சர்வபூதவரனுமாகிய மாதவனைத் தேவமாதாவினது உதரத்திற் கண்டான்" என்பது வாமாபுராணவசநம். பிரமநாராயணர்களது லலாடத்தினின்றும் போந்த சிவபிரானது அபிவியக்தி சுவேச்சையாலுளதாயிற் றென்பது மகாபாரத கூர்மபுராணங்களி லுணர்த்தப்படும். "அரச, தாரகம் முதலிய ஞாநங்கள் முழுதும் எவன் வசத்தன, அணிமாமுதலிய குணங்களோடியைந்த ஐசுவரியம் எவனுக்குக் கிருத்திரிமமில்லை அநாதி நிதானும் சைதந்தியாதி சமந்விதனும் பூர்வாதிகனுமாகிய அந்தத்தேவன் அநியோச்சியனாயினும் விதியினது தபசினால் மகிழ்விக்கப்பட்டோனாய் லலாடத்தினின்றும் புத்திரத்துவத் தால் பரிகற்பிக்கப்பட்டான்" எனவும் "ருத்திரனும் கற்பாந்தத்தில் கோரரூபத்தைத்தரிப்பவனும் சூலபாணியும் குரோதசனுமாகிய நான் நின்பால் நினக்குப் புத்திரனாய்ப் பவிப்பேன்" எனவும் வருதலானென்க. இந்தப்பிரகாரம் "மகேசனாகிய நீலலோகிதன் பரமேசனால் செலுத்தப்பட்டுப் பிரமாவுக்கு அநுசனாகிப் புத்திரனாகிப் பிரமாவை அநுக்கிரகித்தான். இருதயகமலத்தின்கண்ணுள்ள அவனது நியோகத்தால் அங்கசனும் விபுவுமாகிய மகேசுவரன் அவனது லலாடத்தைப் போதித்துப் பிராதுர்ப்பவித்தான்" என்பது முதலிய சைவலைங்க வசநமும் காணப்படும். கர்ப்பவாசமுதலியன சிவபிரானுக்கு யாண்டுமில்லையென்பது

# பிரமதருக்கஸ்தவம்

ஸ்காந்த புராணத்தில் சநத்குமாரசங்கிதையில் சொல்லப்பட்டது. "எவனுக்குப் பூதசமுசாரசங்கிரகம் சுவேச்சையானுமில்லையென்று சொல்லுகிறார்கள்; சிறிது அமிசத்தாலும் கர்ப்பத்துக்குத் துர்வாசத்துவத்தை எடுத்துச்சொல்வோனாய் முன் எதனால் அத்திரிபத்திநியினது கரத்தினின்றுதானே புத்திரனானான்; பூதங்களுக்கு அதிபனும் ருத்திரனும் மிரிடனும் தந்திசரனும் விரிஷனுமாகிய பிரபு சிருட்டியின் பொருட்டுப் பிரமனுக்குப் புத்திரனாய் லலாடத்தினின்றும் எழுந்தான்" என்பது சநற்குமாரசங்கிதைவசநம். ராமன் கண்ணன் என்னுமவதாரங்களில் இந்திரசித்து சாலுவன் முதலியோரது யுத்தங்களில் அவர் சரங்களினால் அடிபடல் கட்டுண்டல் மூர்ச்சையடைதல் முதலியன ராமாயணபாரதாதிகளில் பிரசித்தமாகச் சொல்லப் பட்டது. ஆயுண்முடிவில் தேகத்தியாகமும் "எவ்விடத்து அந்தத்தீர்த்தவைபவத்தால் ராமன் பிருத்திய பலவாகநங்களோடு கூடத் தேகத்தைவிட்டுச் சுவர்க்கத்தை அடைந்தான் (அப்படிப்பட்ட) சரயுவினது தீர்த்தம் உத்தமம் அதனால் கோப்பிரதாரத்தைச் செல்க" என்றதனாலென்க. இப்படிப்பட்ட பாரதாதிவசநத்தால் பிரசித்தமாயிருக்கின்ற சுக்கிலசுரோணிதசம்பவம் பிராகிருத சரீரலிங்கம் நிர்த் தோஷமாகுமெனின், விண்டு மனிதர்களுள்ளே சொல்லப்படுவது சிந்தை சிரமம் விரணம் அஞ்ஞானம் துக்கங்களோடியைந்தவனாகச் சொல்லப்படுவதென்னை? பெரியோய், இந்தச் சமுசயம் என்னுடைய இருதயத்தில் சல்லியம் போல அறையப்பட்டிருக்கிறது. மற்றை மனிதர்களால் களையப்படத்தக்கதன்று. உரை வன்மையினால் அதைக் களைக" என்பது முதலிய பிரச்சிநங்களால் பிரமாண்ட முதலிய புராணங்களில் நாரதாதிகளால் சங்கிக்கப்பட்டதென்னை? ஸ்திரீ புருஷ மல சம்பந்தமாகிய தேகம் அவனுக்கு உளதாகாது. மற்று நிர்த்தோஷ சைதந்நிய சுகமும் நித்தியமும் தன்னதுமாகிய தநுவைப் பிரகாசிப்பிக்கின்றான். விண்டுவினது அந்தச்சநநம் இப்படிப்பட்டதே பிறிதில்லை. அப்படியாயினும் சுத்த சத்குணனாகிய அவன் அசுரமோகத்தின்பொருட்டு ஒவ்வோரிடங்களில் பிறர்க்குரிய துக்கம் அஞ்ஞானம் சிரமம் முதலியவற்றைக் காட்டுவன். சுவதந்திரன், அசிந்தியசத்குணனிடத்தில் விரணமுதலியது எங்கே? ஆத்மா எங்கே? மோக்ஷத் தினது தௌர்லப்பியத்தின் பொருட்டே காட்டுவன் பிறிதில்லை. அரியாகிய கண்ணன் அத்தியக்த தேகனாயினும் தியக்த தேகனுடைய தேகம் போல உலகர் களுக்குச் சுவரூபசதிரிசாகிருதியைக் காட்டுகின்றான்" என்பது முதலிய வசந சமூகத்தைக் காட்டி யத்திநத்தாற் பரிகரிக்கற்பாலது. தேகத்தியாகம் சிவபிரானுக்கு யாண்டும் கேட்கப்படுவதில்லை. சிவபிரான் அருச்சுநன் தவநிலையில் கிராத வடிவங் கொண்டு வந்த காலத்து "அதன்பின் அருச்சுநன் சரங்களால் வருடத்தைக் கிராதன்மேற் பொழிந்தான். சங்கரன் பிநாகதாரி பிரசந்தமாகிய மாசுடையனாய் முகூர்த்த நேரம் அந்தச் சரவருடத்தை ஏன்றுகொண்டான். ஏன்றுகொண்டு மலை போல ஊனமில்லாத சரீரமுடையனாய் நின்றான். அந்தத் தநஞ்சயன் சரவருடந்தான் பயன்படாத நிலைமை கண்டு மிகுந்த ஆச்சரியமடைந்தான். நன்று என்றென்று சொன்னான்" என்று மகாபாரதத்திற் சொல்லியதனால் அருச்சுநசரங்களால் ஊறடையாது நின்ற நிலைமை விளக்கப்பட்டது. ஈண்டுக் கூறியவாற்றால் பிரமநாராயணர்களது லலாடமுதலியவற்றினின்றும் போந்த சிவபிரானது ஆவிர்ப்பாவமாத்திரத்திற்குக் கர்மாதீநத்துவமுண்டென்பதைப் பரிகரிக்குமாறு ஐச்சிகத்துவம் சொல்லற்பாலது. விண்டுவுக்கும் புருடவீரியாதுப்

பிரவேசம் கர்ப்பவாசமிவற்றிற்கு ஐச்சிகத்துவமுண்மை "பிறர்க்கெல்லாம் சுக்கிலத்தாற் பிறவி. நித்தியோதிதஞாந்தநுமானாகிய அரிக்குத் தனது தநு வினாற்றானே. சுக்கிலத்தாற் பிறவி எங்கிருந்துளதாம். அரிக்கு அவதாரங்களிலும் சுக்கிலசம் பவமாகிய தேகமில்லை. அப்படியாயினும் சுக்கிலத்திடத்தனாய் மாதிரு தேகத்தைப் பிரவேசித்தும், சுக்கிலத்தையன்றியும் ஆண்டே கேவலம் ஜாதரூபகனாய் உலகத்தை விமோகிப்பித்துப் பகவானும் மாயியுமாகிய விண்டு உதிக்கின்றான்" என்பது முதலிய காருடவாராகாதிவசநசமூகத்தைக் காட்டி யத்திநத்தாற் சொல்லற் பாலதே பிறிதில்லை. இப்படியே "பிறவாதோன் என்று எவனொருவன் பயந்தோன் இங்ஙனம் எந்த நினது தக்கிணமுகத்தைச்சரண்புகுவன், ருத்திர, அதனால் என்றும் என்னைக் காக்க" என்னும் சுவேதாச்சுவதரோபநிஷந்மந்திரத்தாலும் "இவனொருவனே பிறவாதோனென்று மதித்துப் பிறப்பிற்பீதியுடையோர் இந்த ருத்திரனது தக்கிணமுகத்தைக் காப்பின் பொருட்டுச் சரண்புகுகின்றார்கள்" என்னும் சிவபுராணோபப்பிருங் கணத்தினாலும் "பிரமவிட்டுணு ருத்திரேந்திரர்களாகிய அன்னோர் பிறக்கின்றனர். காரணமன்று." என்பது முதலிய அதர்வசிகா வாக்கியத்தினாலும் முன்னுதாகரிக்கப்பட்ட சிவபுராணோபப்பிருங்கணத்தினாலும் சிவபிரானொருவனே சநநமில்லாதோன் மற்றெல்லோரும் சநநத்திற்பட்டோர் என்று நிறுத்தப்படவும் சநநம் உண்டென்பார் கூற்றை எதிரிட்டு அவர் சநநமென்று கொண்டவது தான் உண்மையின் அவ்வியல்பிற்றன்றாதலால் இழுக்குடைத் தாமாறெங்ஙனமென்பது சமர்த்திக்கப்பட்டது. இனித் தாமசத்துவம் பற்றி இழுக்குரைப்பார் கூற்றை மறுக்கவெழுந்தன வருஞ் செய்யுட்களென்பது. (17, 18, 19)

**கற்பத்தின்முடிவாஞ்சமயங்கடோறுங்காலத்தீயுருத்திரவடிவா**
**லற்பகத்தமர்ந்துநார்புணோயாற்றுமவனியலாயுதமதுபோற்**
**சொற்புகாக்கருணைவடிவினோயுயிர்க்குத்தொடர்பவபீடையைத்தொலைத்தாங்**
**கற்பொருதமமேற்கொள்ளுதி நீயாருயிரெலாமளிக்குமாரமுதே.** **20**

(எ-து). சடம் துக்கம் மித்தையாகிய பிராபஞ்சிகபோகத்தை ருசிப்பித்து உயிர்களை அதன்பாலியைவிக்கும் படைத்தல் காத்தல் என்னுமத்தொழில்களை ஏனையோர்பால் வைத்து அவற்றின்மேலதாய்ச் சித்துச் சுகம் சத்தியமாகிய பிரபஞ்ச சூந்நியத்தில் வரும் முத்தியின்பத்தை ருசிப்பித்து உயிர்களை அதன் பாலியை விக்கும் அழித்தலாகிய அவ்வரிய தொழிலைத் தன்பாற்கொண்டவன் முதல்வனாக லானும், அழித்தலென்னுமது தான் அவ்வுயிர்களைத் தொடர்ந்து வந்த பவபீடை யைத் தொலைத்தன்மாத்திரையே பயனாகக் கொண்டு நிகழ்த்தும் இளைப்பொழித் தற்றொழிலே பிறிதில்லையாகலானும், அதன் பொருட்டுக் கற்பாந்தங்கடோறும் காலாக்கிநிருத்திரவடிவினின்று தாம சகுணத்தை மேற்கொண்டு இச்சகமுழுதுமழித் தொழிப்பது நரரது புண்ணோயை ஆயுதங்கொண்டறுத்துப் பரிகரித்து ஆரோக்கியமளிக்கும் ஆயுர்வேதியனது செயலோடொத்துப் பெருங்கருணையாய் முடிதலானும், அதனால் அவ்வுருத்திரவடிவம் உணர்வான்மிக்க சான்றோர்க்குச் சொல்லுக்கடங்காக் கருணைவடிவமென்பது இனிது புலப்படமொகலானும் அழித்தலாகிய சங்காரகிருத்தியம் பற்றிப் பிரமப்பொருளாகிய சிவபிரானுக்கு வரக்கடவதோரிழுக்கு ஒருசிறிதுமில்லையென்பதாம்.

ஈண்டுத் தாமசத்துவம் இழுக்குடையதாகச் சொல்லப்படவரின் எந்தத் திறத்தால்? தமோகுணத்தை உபகரணமாகக்கொண்டு சகல சுகத்தையும் சங்கரிக் கின்றானெனக் கருணையின்மை கொள்ளும்வகையால் தமோகுணோப கரணகத் துவதோஷம் கொள்ளுந்திறத்தாலோ, அல்லது பிராகிருதசந்த்துக்குப் போல இழி வரவு கொள்ளுந்திறத்தாலோ என்னும் இரண்டு திறத்துள் கருணையின்மைத் திறத்தின் இழுக்குரைப்பாரை மறுத்தற்கெழுந்தது இச்செய்யுள், என்னை? சமுசார மாகிய நெடுவழியில் நெடுங்காலம் போக்குவரவுசெய்து அதிகசிரமமடைந்த உயிர்களைச் சிலகாலம் மகாசுழுத்தியில் வைத்து விச்சிராந்தி எய்துவிக்கும் பொருட்டுச் சகல சகத்தையும் சங்கரிக்கலுற்ற சிவபிரான் அச்சங்காரத்துக்கு உபகரணமாந்தன்மையில் தமோகுணத்தை மேற்கொள்வன். வெகுகாலம் புண்ணோயாற் பீடிக்கப்பட்டு நித்திரை உண்டியின்றி அதிதுக்கத்திற்பட்ட நரரைப் புண்ணோயினீக்கிச் சுகிப்பிக்கும் பொருட்டு அப்பொழுதைக்கோர் சிறிது துக்க விளைவினதேனும் அது நோக்காது புண்ணறுத்தல் செய்யும் விரணவைத்தியன் அதற்குபகரணமாந்தன்மையின் ஆயுதத்தை மேற்கொள்ளுவன். ஆயுதத்தை மேற்கோடலும் புண்ணை அறுத்தலும் அவனுக்குக் கருணையின்மையைக் குறிப்பிப்பனவன்று. மற்று 'இந்த உயிர் காக்கப்படுக' என்னும் பரமதயாளுத் துவத்தையே குறிப்பிக்குமென்க. "நிதாநந்தெரிந்தவனாய் ரோகியினிடத்தில் துன்பத்தைப் பிரயோகிப்பவனாகிய வைத்தியனுக்குச் சிறிதும் வன்கண்மையில்லை. கருணையே ஆண்டு யோசிக்கத்தக்கது" என்று சிவபுராணத்தும் இவ்வுண்மை சொல்லப்பட்டது. இதனால் சங்காரருத்திரதருமமாகச் சொல்லப்படும் தாமச குணத்தைச் சாக்ஷாத் பரமசிவதருமமெனவைத்து அதனால் கருணையின்மை இழிவரவு என்னுமிருதிறத்தானுமிழுக்குளதென்பார் கூற்றை எதிரிட்டுச் சங்காரமென்றவது கருணையின்மைபற்றிய செயலன்று உயிர்கண்மேற் கொண்ட பெருங்கருணை பற்றிய செயலே என்பதினிது காட்டிக் கருணையின் மைத்திறத் தினிழுக்குரைக்குமவர் கூற்று மறுத்தொழிக்கப்பட்டது. (20)

**ஐயநின்றனக்குத்துயிற்படுமியறானையுறற்பாலதொன்றிலையே**
**சையநுசிதமாம்விடயத்தெத்துணையுங்கிரெளரியங்கண்டிடத்தகாதே**
**மையமர்தமத்தின்விகாரமாமற்றெக்குணமுமெந்தாயிலைநினக்கு**
**மெய்யுணர்ந்தோராற்றமத்திழிவாறானெங்கனம்வினவத்தான்படுமே.** **21**

(எ-து). தமோகுணவிகாரமாய் முந்திநிற்பதொன் றன்றே துயிற்படுமியல்பு! அது சிவபிரான்பாற் சங்கித்தற்கு மிடமில்லையாகலானும், அதுநீங்கிய சாக்கிரத்தின் கண்ணும் அநுசிதவிடயங்களில் நாராயணாதிகட்கு நிகழும் குரூரவியல்பு அவன் பாலெத்துணையுங் காண்டற்கிடமில்லையாகலானும், எதிரிட்டகாலையில் திரிபுர சலந்தரா திகளிடத்து நிகழ்த்திய செயலும் உண்மை யானோக்குங்கால் உசித விடயங்களேயாகலானும், கர்வித்தகாலையில் அயன்றலைகொய்தல் தக்கன்மக மொடிந்தல் முதலியனவும் அவ்வவர்பால் அவ்வப்பொழுது நிகழ்த்திய அருள்விளைவு நிகழ்ச்சிகளை நோக்குங்கால் அவையும் பேரருட்டொழிலெனப்பட்டு உசிதவிடயங்களாய்முடிதலானும், நள்ளிருளினும் நட்டமாடியும் பரமகருணாநிதி யும் நிருபாதிகனுமாகிய சிவபிரான்பால் தமோகுணவிகாரங்களாகிய சோகம் மோகம் பீதி வஞ்சனை முதலியனவற்றுள் எந்தக்குணமாவதுண்டென்பது

எவ்வாற்றானுமியையுமாறில்லையாகலானும், நண்பகலினுந்துயிற்படுமியல்பு பக்தனாகிய மாபலியைப்பந்தித்தல் ஸ்திரீகளாகிய பிருகுபத்திநி தாடகைவதம் துதித்து வந்த வாலியை மறைந்து நின்று கோறன் முதலிய அநுசிதவிடயங்களிற் காணப்படும் கிரௌரியமும் சோகம் மோகம் பீதி வஞ்சனை முதலிய தமோகுண விகாரங்களும் நாராயணன்பாலும் அவனவதாரங்களாகிய ராமன் கண்ணன் நரசிங்கம் பரசுராமன். பலபத்திரன் முதலியோரிட்த்துமுளவென்பது புராண பாரத ராமாயணதிகளில் இனிது பெறப்படுதலானும் இவ்வுண்மைகளை உய்த்துணர்ந்த டங்கவல்லார்க்குச் சிவபிரான்பால் தமத்திழிவரல் ஐயுறுதற்குப் பரமாணுப்பிரமாண மேனுமிடமுளதாதல் யாண்டையதென்பதாம்.

நிக்கிரகந்தான். இரண்டுவிதப்படும், அநுக்கிரகத்தை யுத்தேசித்ததும் அதனை யுத்தேசிக்காத்துமென. அவற்றுள் முன்னையது மூன்றுவகைப்படும். அதுக்கிராகியா நுக்கிரகோத்தேசியகம், வெகுவிதராநுக்கிரகோத்தேசியகம், உபயாநுக்கிரகோத்தேசி யகம் என. அவற்றுள் முன்னையது சதாசாரா நுவர்த்தந முதலியவற்றைப் பயனாகவுடையது. அது புத்திரன் சீடன் முதலியோரை நிக்கிரகித்தல். அது குணமேயாம். இரண்டாவது "யாண்டு ஒருதுட்டசாரி கொல்லப்படுங்கால் அது பலர்க்கு முபகாரமாய் முடியும், ஆண்டு நிகழும் கொலை புண்ணியத்தைத் தருவதாம்" என்னும் வசநத்தால் இழுக்குடைத்தன்றென்க, அதுதான் வேட்டையினால் வியாக்கிரா திவதம். மூன்றாவது சோரவதமுதலியன. "மாதவர்கள் பாபங்களைச் செய்து அரசர்களால் தண்டஞ்செய்யப்பட்டோராய் நிர்மலர்களாய்ச் சுவர்க்கத்தை அடைகின்றார்கள், சத்துக்களாகிய புண்ணிர்கள் போல" என்னும் வசந்தாலிஃதுணர்க. அதனால் இது உபயாதுக்கிரகோத்தேசியகமென்க. இம்முறை பற்றிவரும் குற்ற நீங்கிய செயல்களுள் ஒன்றாகத்தானே வைத்தெண்ணப்படுவது சிவபிரானாற் செய்யப்படும் நிக்கிரகமுழுதுமென்பது. அதனால் புத்திராதிங்க்கிரகம் போலப் பிரமாதிநிக்கிரகமும் உசிதமே. "பிரமாதிகளிடத்தில் எந்த நிக்கிரகங்கள் சில காட்டப்பட்டன, அவைதாம் உயிர்களது இதத்தின்பொருட்டே ஸ்ரீகண்டமூர்த்தி யினால் செய்யப்பட்டன. ஸ்ரீகண்டமூர்த்திக்கு அகண்டர்திபத்தியமுண்டன்றே. சமுசயமில்லை. சிவபிரானே ஸ்ரீகண்டமூர்த்தியைக் கிரீடையின் பொருட்டு அதிட்டிக்கின்றான். தேவர் முதலியோரை உசிதப்பிரகாரம் நிக்கிரகிக்கின்றான். அதனால் அவரும் பாபமிலராகின்றார். பிரசைகளும், துன்பமிலராகின்றார்கள். நிக்கிரகமும் சுவரூபத்தால் புத்திமான்களுக்கு வெறுக்கப்படத்தக்கதன்று. அதனா லன்றே தண்டிக்கற்பாலரிடத்தில், தண்டம் அரசர்களுக்கு : உயர்த்துச்சொல்லப்படும். காரியவர்க்கம்முழுதிற்கும் ஈசுவரத்துவத்தால் பிரசித்தி. ஈசதையை அவன் செய்யாவிடின் சகத்துக்கு ஈசுவரனாதலெப்படி? இதத்தில் எப்போதும் முயற்சியுடை யோர்க்கு ஈசுவரன் நிதரிசமாகின்றான். அசத்துக்களது நிக்கிரகமாத்திரத்தால் சத்துக்களால் அவன் எங்ஙனம் இகழப்பவென். உலகத்தில் நிக்கிரகமெல்லாம் வித்து வேஷபூர்வகமன்று. எவன் நிக்கிரகித்துச் சிட்சிக்கின்றான் (அந்தப்) பிதா புத்திரனை வெறுக்கவில்லை" என்று இவ்வாறே சிவபுராணத்துச் சொல்லப்பட்டது. ஈண்டுக் கூறியவாறே நித்திரை கிரௌரியமில்லையாயினும் மேகாதிவிகாரம் காணப்படு மெனின் ஆண்டுத்தசமத்திழிவரவு கற்பிக்கப்படும். சிவபிரான்பால் அதுவோ இன்மை யால் அக்கற்பகத்துக்கு அவகாசமில்லை என்பது முடிபு. காரியதரிசநத்தால் அது

கற்பிக்கப்படுமெனின், அப்போது விண்டுவிற்கே அது கற்பிக்கப்படும். என்னை? நித்திரை மாபலிபந்தநமும் பிருகுபத்திநி தாடகைவாலிவதம் முதலியன், தேவர்கள் பொருட்டுச் செய்த பலதிறப்பட்ட அசுரர்களது பலவதங்கள் முதலியவற்றில் அநுசித விடயத்தில் கிரௌரியமும் ராமன் கண்ணனவதாரங்களில் சோகமோகாதி விகாரங்களும் விண்டுவாகிய அவனுக்கே பெரிதும் காணப்படுதலானென்க. நித்திரா பாரவசியம் விண்டுவுக்குளதென்பது "ஆதிதேவனும் புாணாத்மாவும் அவ்விய யனுமாகிய விஷ்ணு என்றும் சகத்தை மோகிப்பித்துக்கொண்டு நித்திரையின் வசத்திற் புகுந்தோனாய்த் துயின்றான்" என வீட்டுமனாற் சபாபருவத்திற் சொல்லப் பட்டது. "எதனால் தாமசகலாலே சத்தாற் கிரகிக்கப்பட்டவனாய் நீ பயோநிதியில் நித்திராபரவசனாய்த் தூங்குகின்றாய், அங்ஙனமாக நீ சாத்துவிகனாவதெங்ஙனம்" என்று துயிற்படுமியல்பு தாமசத்துவலிங்கமாதலை நரசிங்கத்திற்குச் சரபம் சொல்லியதென ஸ்காந்தத்திற் பிரதிபாதிக்கப்பட்டது. பாரதயுத்தத்தில் அவரவரை வதைக்கும் பொருட்டு ஸ்ரீகண்ணனாற் செய்யப்பட்ட கபடவியாபாரவியல்பினவாகிய உபாயங்கள் சல்லியபருவத்தில் துரியோதானால். எடுத்துக் கணிக்கப்பட்டன. ஆண்டுப் பகவானாகிய வாசுதேவனை நோக்கியே அதிகோபமுடையனாகிய துரியோதநன் சொல்லிய வசகங்கள் இவை. "கஞ்சதாசனதுபுத்திர, அதர்மத்தால் நான் கதாயுத்தத்தில் விழுத்தப்பட்டேன் என்பது எது இதனால் நினக்கு லச்சையே இல்லை. தொடையைப் பிளக்குதி என்று பீமனுக்கு மிருதியைப் பொய்வழியால் விரும்புகின்றபென்பது யாது, அருச்சுநனுக்குரைத்ததெது இது எனக்கு எப்படித் தெரியப்படாதுபோம். நோயுத்தமுடைய மகிபாலர்களை ஆபிரவராக நிபுணங்களாகிய கபடமார்க்கங்களினால் விழுத்தி நினக்கு லச்சை இல்லை. நினக்கு உழைவில்லை. நாள்தோறும் சூரர்களது மகத்தாகிய நாரத்தைச் செய்கின்ற பிதாமகன் சிகண்டியை முன்னேவிட்டுக் கொல்லப்பட்டான். மிகுந்த துர்ப்புத்தியுடையோய், அசுரவத் தாமாவுக்கு ஒத்த நாமத்தையுடைய யானையைக் கொன்று ஆசாரியன் சத்திரம் விடுவிக்கப்பட்டான். அது எனக்கு எப்படித் தெரியப்படாது போம். கொலைகாரனாகிய இந்தத் திட்டத்துயும் நனால் அந்த வீரியவான் கொல்லப்பட்டானாயினான். நீ பார்த்து நின்றாய். இவனைத் தடுத்தாயல்லை. பாண்டுபுத்திரனது வதத்தின் பொருட்டு யாசிக்கப்பட்ட சத்தியைத்தானே கடோற்கசனிடத்தில் விடுவித்தாய். நின்னைக் காட்டினும் மிக்க பாபச் செயலுடையோன் வேறு யார்? சேதிக்கப்பட்ட வாகுவை யுடையனாய் மரணோபாயத்தையடைந்த பூரிசிரவா யுத்தத்தில் நின்னாற் செலுத்தப் பட்ட துராத்மாவாகிய சாத்தகியினாற் கொல்லப்பட்டான். பந்தகேந்திரசுதனாகிய அசுவசேநனது முயற்சியினால் பார்த்தனை கொல்லல் வேண்டுமென்னுமிச்சை யினால் உத்தமகர்மத்தைச் செய்பவனாகிய நரருட்சிறந்த கர்ணன் சக்கரம் பதிந்த காலத்தில் முயற்சியின்கணின்றோன் தோல்வி செய்யப்பட்டான். நரருட்சிறந்தோன் சக்கிரவி பக்கிரமுடையனாகிய கர்ணன் யுத்தத்தில் விழுத்தப்பட்டான். என்னைத் தான் கர்ணனைத் தான் பீஷ்மதுரோணர்களைத் தான் யுத்தத்தில் நேர்வழியால் பொருதால் உனக்கு விசயமே இல்லை. நிச்சயம். அநாரியனாகிய உன்னால் சுவதர்மத்தினின்றவர்களாகிய நாமும் மற்றரசர்களும் கபடமார்க்கத்தினால் விழுத்தப்பட்டோம். கண்ண, மாயாவியாகிய உன்னால் அர்க்கப்பிரமோக்ஷிணியாகிய மாயை செய்து சிந்துபதி கொல்லப்பட்டான். அது எனக்கு எப்படித் தெரியப்படாது போம்" என. "பீமசேநனால் காலினால் சிரசு மிதிக்கப்பட்டது எனக்குத் துக்கமில்லை.

காகமாவது பருந்தாவது கழுகாவது கணப்போதில் காலை வைக்கப் போகின்றன" என்று துரியோதனால் நிருபனாகிய பீமசேநனுக்கு அபகாசம் செய்யப்பட்ட காலையில் தேவர்களால் ஆகாசத்தில் துர்யோதநனுக்குச் செய்யப்பட்ட நன்கு மதிப்பையும் அவன்மேலே புஷ்பமழைமுதலியவற்றையுங் கண்டு அப்படிப்பட்ட முன் சொல்லிய கபடமுதலியவற்றைச் செய்தமையினாகிய வெட்கம் கவலை முதலியன அடைந்தமை சொல்லப்பட்டது என்னை? "வாசுதேவன் முதலியோர்கள் அத்தியற்புதங்களையும் துர்யோதநனுக்குச் செய்த பூசைமுழுதையும் கண்டு வெட்கமடைந்தார்கள். பீஷ்மனைத் துரோணனைக் கர்ணனைப் பூரிசிரவாவை அதர்மத்தால் கொல்லப்பட்டவர்களாகக் கேட்டு நிருபர்கள் சோகத்தால் பீடிக்கப்பட்டுத் துக்கித்தார்கள். சிந்தாபரர்களாயும் தீநமநசுடையவர்களாயும் -நின்ற அந்தப் பாண்டவர்களைப் பார்த்து மேகதுந்துபி முழக்கத்தையுடைய கண்ணன் இந்த வசநத்தைச் சொன்னான்" என்றதனாலென்க. ஆசுவமோதிகத்திலும் உதங்கமுநிவந்தானென்று தொடங்கிக் கண்ணனை நோக்கித் துர்யோதநன் முதலியோர்கள் கபடத்தால் கொல்லப்பட்டார்களென்று அவன் கோபங்கொண்டமை சொல்லப்பட்டது. "வந்த கோவிந்தனை யடைந்து கோபமுடையனாகிய முநி தீநர்களாகிய தார்த்தராட்டிரர் முதலிய எல்லாரையும் கபடத்தால் நீ நாசஞ் செய்தாய். கண்ண, அதனால் உன்னைச் சபிப்பேன்" என்று சொன்னான். என்று சொல்லப்பட்ட "அரியாகிய அந்தக் கண்ணன் சொல்வானாயினன்" என்றதனாலென்க. இனிக் கண்களை மூடித் துயிற்படுமியல்பு சுவாத்மதத்துவாநுசிந்தரூபமென்றும் சோகம் மோகம் முதலியன அபிநயமாத்திரமேயென்றும் அநுசிதவிடயத்திற் கிரௌரியநிகழ்ந்தமை ஆண்டாண்டு வதைக்கப்பட்ட அவ்வவர்பாபவிசேடத்தாலாய தென்றும் இம்முறையே நாராயணன்பால் தமசின்காரியமாகச் சங்கிக்கப்படும் நித்திரை முதலியன பரிகரிக்கற்பாலன. இப்படியே புராண ராமாயண பாரதங்களில் ஆண்டாண்டு வைத்துப் பரிகரித்தல் செய்தமை காணப்படும். அவ்வியல்புபற்றிய சங்கை நாராயணற்கு இம்முறையே யத்திநம் செய்து பரிகரிக்கப்படினும் அம்மாத்திரந்தானும் சிவபிரான்பால் எத்துணையும் சங்கித்தற்குமிடங் கிடைக்கா தென்பது தேற்றமன்றே! அந்த இது முழுதும் ஈண்டு வியதிரேகமுத்திரையால் இச்செய்யுளில் கிளந்துணர்த்தப்பட்டது. இதனால், தமத்தின் காரியமாகிய இழிவரவுகள் கிளந்து அவை சிவபிரான்பாற் சங்கித்தற்குமுரியனவல்லவென்பதுணர்த்தி இழிவரவுத்திறத்தானிழுக்குரைப்பார் கொள்கையை எதிரிட்டுச் சங்காரமென்றது பெருந்தகைமையற்றிய செயலென்பது போதர இழிவரவுத்திறத்தினவர் கொள்கை மறுத்தொழிக்கப்பட்டது. அற்றேல், கருணையின்மையினாற்றான் இழிவரவினாற்றானிழுக்குளதாமாறு தாமசத்துவதோஷம் சிவன்பாலில்லை என்பதமைக. சாத்துவிகப் பிரசித்தியுடைய நாராயணனுக்கன்றே அதன் விரோதியாகிய தாமசத்துவம் சங்காஸ்பதந்தானுமில்லையென்றௌிதிற்பரிகரித்தல் முடியும். சிவனுக்கு எங்ஙனம் முடியுமெனின், அதுபற்றியன்றே வருஞ்செய்யுளெழுந்ததென்பது. (21)

**சத்துவப்பிரவர்த்தநகானாச்சாலநீயறிதரப்படுதி**
**சத்துவகினக்குத்ததுவநீயார்மெய்ச்சத்துவமயன்சகமீன்ற**
**மைத்தகுகூந்தற்பார்ப்பதிமணாளதமத்தியல்விரோதியாமதித்த**
**சத்துவவியல்பித்தனையுமெந்தாய்மற்றொருவர்பாற்சம்பவிப்பனவே.** **22**

(எ-து). சாத்துவப்பிரவர்த்தகனெனச் சுவேதாச்சுவதரமும், சத்துவதநு மாடுனனச் சூதசங்கிதையும், சத்துவமயனென வாசிட்டராமாயணமும் சிவபிரானையெடுத்து முறையிடுதலானும் பிறவாற்றானும் அகமும் புறமுமொத்துத் தமோகுண விரோதியாகிய சத்துவவியல்பு முழுதுமுடையான் அச்சிவபிரானேயென்பது தேற்றமாதலினால் அவனை விடுத்துச் சத்துவகுணமுடையார் பிறரொருவருள ரெனக்கொண்டு கூறுவார்கூற்று இப்பியின்கண் வெள்ளிகண்டுகலிநீங்கிப் பெருமை பாராட்டுவாரியல்போடொத்துப் பயன்படுமாறொரு சிறிதுமில்லையென்பதாம்.

"மகாந் பிரபு புருடன் இவன் சத்துவத்தினது. பிரவர்த்தகன்" என்று சுவேதாச்சுவதரோபநிஷத்திற் சொல்லப்படும். "மும்மூர்த்திகளுள் எவனுக்கு மாயா கதமாகிய சரீரம் சத்துவம் சங்காரத்தின் பொருட்டுத் தமோகுணமுளதாம். அவன் ருத்திரனாவன் பிறனல்லன். மும்மூர்த்திகளுள் எவனுக்குச் சரீரம் சாக்ஷாத் தமசு, பாலநத்தின் பொருட்டுச் சாத்துவிகம் குணமாம். அவன் விட்டுணுவாவன் பிறனல்லன்" என்று சிவபிரானுக்குச் சரீரம் சாத்துவமே, தமசு அவனுக்குக் காரியகரணோபாதி; விட்டுணுவுக்கோ இதன்மறுதலையாம் என்று சூதசங்கிதையிற் சொல்லப்பட்டது. “அரன் முதலிய தேவர்கள் சாத்துவர்கள்" என்று வாசிட்ட ராமாயணத்தில் தேவர் திரியக்கு மநுடர் முதலியோருள் சாத்துவாதிகுண விபாகத்தில் பிராதாந்நியத்தால் சிவபிரானுக்குச் சத்துவமயத்துவம் சொல்லப் பட்டது. இத்தனை சாத்துவிகத்துவம் சிவபிரானினன்றி ஏனையோரிடத்தில் யாண்டும் உளதாவதில்லை. நாராயணனிடத்தோவெனின் பாலநத்தினௌபாதிக மாத்திரத்தால் சத்துவபரிக்கிரகம். அதுவும் யாண்டும் சாத்துவப்பிரவர்த்தநசுவதந்தி ரனாற் பிரவர்த்திக்கப்பட்ட சத்துவத்தினது சமுந்மேடணத்தால் பாலநசாமர்த்திய சித்தியின் பொருட்டுளதாயதே பிறிதில்லையென்க. இதனால் உண்மைபற்றி நோக்கு ங்கால் சாத்துவிகப் பிரசித்தியுடையான் சிவபிரானே என்பது சுப்பிரசித்தமாதலினிது விளக்கித் தாமசத்துவம் சங்காஸ்பதந்தானும் அவன் பால் எட்டுணையுமில்லை என்பது நிச்சயித்து மேற்கோள் வலியுறுத்தப்பட்டது. அற்றேல், சிவன் உக்கிரன் பீம னென்று சொல்லப்படுமாற்றால் தாமகத்துவவிரோதியாகிய சாத்துவிகப் பிரசித்தி அவற்குளதாமாறெங்ஙனமென்பாரை நோக்கி யெழுந்தது வருஞ்செய்யுளென்பது. (22)

**உலகெவற்றிடத்துமுற்படுசிரேட்டச்செலவினாலுக்கிரனீயே**
**தலைவதற்பாதையுக்கிரனாவலென்றுகண்டிடத்தகுமன்றே**
**யலைவிறவெவையுநிறுத்துறுதலைமையமைதலாற்பீமனேயாதி**
**மலைவிலோயெதனான்மிகப்பயங்கரனாமறையுனைவழுத்திடுமாறே.** 23

(எ-து). யாண்டும் எவரினும் முற்பட்டுச்செல்லும் மேன்மைச் செலவு டையனாதல் பற்றிச் சிவபிரான் உக்கிரனெனப்படுமாகலானும், அதுபற்றிய தாற்பரியமன்றே உக்கிர்னாவலென்றுவரும்வாக்கியத்தில் காணற்பாலதாகலானும், சகலலோகமும் தன்னாணை வழியஞ்சிநின்று முறை பிறழாது வரம்புபட்டொழுகும்

# பிரமதருக்கஸ்தவம்

ஒழுகலாற்றிற்கு இன்றியமையாது முற்பட்டதாய்வேண்டப்படுங்குணம் பீமத்துவ மன்றே! அஃதுடைமைபற்றிச் சிவபிரான் பீமனெனப்பமொகலானும், அது எவர்க்கு மினிது புலப்படற்கன்றே வேதமும் அவனை மிகப்பயங்கரனென்றெடுத்து வழுத்திய ராகலானும் இவ்வியல்புகளெல்லாம் சகலமுதன்மையும் தன்னிபல்பெனக் கொண்டு சேதநாசேதகரூபமாகிய சகல பிரபஞ்சத்தையும் தனது பேரருள் வியாபகப் பரப்பில் வைத்து நியமித்து நடத்தும் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய பரப்பிரம்த்துக்குத் தருமமென்பது தேற்றமாக, ஆண்டைக்கட் சத்துவப் பிரவர்த்தகத்துவாதிலக்கணமாகிய சத்துவிகம் அப்பரப்பிரமமாகிய சிவபிரானுக் குண்மை வெளிப்பட்டு அது தமோகுணமணந்தானும் எத்துணை யேனுஞ் சகிக்க மாட்டாதென்பது புலப்படுதலால் அச்சிவபிரானுக்குரிய உக்கிரபீமவ பிதா நவழக்குப் பற்றித் தமோவிரோதியாகிய சத்துவகுணமுழுதுமுடையான் அவனென்றற்கண் ஆசங்கை நிகழ்தற்கு யாதுமிடமில்லையென்பதாம்.

உக்கிரசப்தம் ஈண்டு உத்தரனென்னும் பொருட்டு. உத்தரதை முற்படு சிரேட்டச் செலவு. (முற்படுசிரேட்டச்செலவு) என்றது "ஞாநதிரோதகமாய் மறைத்துக்கொடுநிற்றலான்" என்புழிப்போலக் கொள்க. பின் “தனது நிசவடி” வென்றதுமது. உக்ரோஸ்யுக்ரோஹம்ஸஜாதேஷு பூயாஸம் என்று உக்கிரத்துவத்திற்கு ஆசாசியத்துவம் கேட்கப்படுதலான் அது ஈண்டு அப்பொருட்டென்க. என்னும் ஔணாதிக சூத்திரத்தால் ரத்பிரத்தியயத்தால் நிபாதிதமாகிய இவ்வுக்கிரசப்தம் "'எவரினும் முற்படுசிரேட்டச்செலவு” சிவபிரானுக்குண்மையுணர்த்தற்கண்ணெழுந்தது. கிரௌரியத்தை உணர்த்தற் கண்ணன்றென்பது. பீமசப்தம் பயங்கரனென்னும் பொருட்டன்றே! அது சிவபிரானுக்கு உயர்வையே நிறுத்துமென்க.

யதிதம் கிம்ச ஜகத்ஸர்வம்பிராணவவேதி நிஸ்ருதம் மஹத்பயம் வஜ்ரமுத்யுதம் யஎதத்விதுரமிர்தாஸ்தே பவந்தி என்னும் மந்திரத்தால் சகமுழுதிற்கும் பயத்தை வருவிக்குமியல்பு அலைவறவெவையு நிறுத்துறுதலைமையாகிய பரப்பிரமதரும மாதல் அறியப்டுதலானென்க. இதனால் உக்கிரபீமநாமவழக்குக்களது உள்ளுறையை ஊசிக்காது மேலிட்டு நோக்குவார் கொள்கைப்பற்றி வருமாசங்கை மறுத்து அவற்றினுள்ளுறுபொருள் காட்டி மேற்கோள் வலியுறுத்தப்பட்டது. அற்றேல், மேற்கூறிப்போந்த சாத்துவிகவியல் புகண்மூன்றனுள் அகத்தனவாகியவிரண்டும் நிற்கப் புறத்ததாகிய சத்துவப் பிரவர்த்தகத்துவம் சிவபிரானுக்குண்டென்பது அதன் காரியத்தின் வைத்துணர்த்தப் படினன்றே வலியுற்று ஒப்பப்படும்பிறவெனின், அதுற்றியபன்றே யெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (23)

**சங்கைதீர்குணசத்துவநிதிநீயேதற்பராஞாநமுஞ்சுகமும்**
**பங்கமாருயிர்க்குச்சத்துவகுணத்தாற்பலிப்பவேற்பழமறைப்பயனாம்,.**
**புங்கவசாபாலத்திடையினிதாய்ப்போந்திடுமுரைமுதலவற்றா**
**லங்கவையிரண்டுநினதுடைமைகளேயறிகுதுமம்பலத்தாசே. 24**

(எ-து). உயிர்களால் ஞாநமும் சுகமும் அடையப்படுவது சாத்துவகுணத்தி லென்பது பெருவழக்காதலினாலும், அவை இரண்டும் சிவனுடைமைகளே என்பது சாபால சுருதி முதலியவற்றால் எவருமறியக்கிடத்தலினாலும் அவ்விரண்டனடை விற்கிடனாகிய சத்துவகுணநிதி சிவபிரானேயென்றல் சொல்லாமே பெறப்படுதலால் ஈண்டைக்கண் ஆசங்கை நிகழ்தற்கிடனுளதாதல் யாண்டையதென்பதாம்.

சாபாலோபநிடத்தில் "ருத்திரன் தாரகமாகிய பிரமத்தை விரிக்கின்றான் எதனால் இவன் அமிர்தனாப் முத்தனாகின்றான்" என அவிமுக்தோபாசநையினால் சிவபிரான் பிரசந்நனாய் உபாசநாவசாநகாலத்தில் சமுசாரதாரகப்பிரண வார்த்தபூதமாகிய பரப்பிரமவித்தையை அளித்தருளுவனென்னுமுறைமை கேட்கப்பட்டது. இதனால் சீவன்முத்திசுக்ரூபமும் பரமுத்திசுகரூபமுமாக அவ்வித்தையின் பலம் முறையே அடையற்பால தென்பது ஈண்டு அமிர்தனாதல் முத்தனாதன் மொழிகளால் குறிப்பிக்கப்பட்டது. சீவன்முத்திசுகமும் நிதிசயாநந்தரூப்பிரமஞாநத்தாற்றான் அதன் காரியமாகிய துச்சவிடயசுகவை திருட்டிணியத்தாற்றானுளதாவதொன்றாய் முத்திசுக்கற்பமேயாம். "உலகத்தில் காம சுகமெது மகத்தாகிய திவ்வியசுகமெது இவை நிராசையினாலாகிய சுகத்தினது பதினாறாவது கலைக்குமுரியனவாகா" என்பது முதலியனவாகக் கூறுமாற்றானி ஃதுணர்க. இதுவே சிவபிரானுக்கு ஞாநப்பிரதத்துவம். "அந்தத் தேவன் சுபமாகிய மிருதியோடு நம்மைச் சேர்க்க" என்று தைத்திரியோபநிடதத்தும் "அவன் சுபமாகிய புத்தியோடு நம்மைச் சேர்க்க" என்று சுவேதாச்சுவதரோபநிடதத்தும் தனது பிரார்த்தந ரூபமுகத்தால் ஆண்டுச் சுபத்துவம் பிரதிபாதிக்கப்படுகின்றது. இதுவே சீவன்முத்திபரமுத்திசுகப்பிரதத்துவம், சாபாலசுருதியோடு பொருளொற்றுமைபோ தரலானென்க. எனவே ஞாநமும் சுகமும் சத்துவத்திற் பலிப்பனவென அவற்றிற்குச் சத்துவாதீநத்துவம் கொள்ளப்படுமாற்றால் அவற்றை உயிர்கட்களிக்க விரும்பிய சிவபிரானால் அளிக்கப்மெறுமவ்வுயிர்க்குச் சத்துவோத்திரேகம் செய்யற்பால தென்பது போந்தது. ஞாநசுகப்பிரதத்துவம் சிவபிரானுக்கேயுண்டென்றது. எனவே சத்துவப்பிரவர்த்தகன் சிவபிரானே என்பது. ஏனையோரெல்லாம் அவனாற் பிரவர்த்தி ப்பிக்கப்பட்ட அவ்வக்காரியோபயோகி மாத்திரமாகிய சுகோத்திரேக விசேடமடைந்தோரென்பதே பொருத்தமெனக்கொள்க. இதனால் சத்துவப் பிரவர்த்தகன் சிவபிரானே என்பதை ஞாநம் சுகம் என்னும் காரியத்தின்வைத்துக் காட்டி அது வலியுறுத்தப்பட்டது. அற்றேல், ஞாநம் சுகம் இரண்டும் சிவன்பாற் பெறப்படும் சிவனுடைமைகளென்பது அவனது நாமரூபகுணகிரியைகளின் வைத்துணர்த்தப்படினன்றே அது வலியுற்று ஒப்பப்படும் பிறவெனின், அதுபற்றி யன்றே யெழுந்தனவருஞ் செய்யுட்களென்பது. (24)

**வித்தைநன்களிப்போனென்றுமற்றெவரைவிசுவசித்திடுவமெப்பொருளே**
**வித்தியாதிபனாய்விச்சுவகுருவாய்விமலநீவிளங்கவுமேலா**
**மத்தமுற்றுணர்ந்தோனென்னவுமொளிருமம்புலிமுடித்தனையெனவுஞ்**
**சத்தசவ்வியப்பாற்றநுவெனவான்மவித்தையைத்தரீஇவிளங்கவுமே.** **25**

(எ-து). வித்தியாதிபனென்றும் விச்சுவகுருவென்றும் சர்வஞ்ஞனென்றும் இந்து சூடனென்றும் மாதொருபாகனென்றும் வழங்கும் இச்சிவநாமவழக்குக்களே

# பிரமதருக்கஸ்தவம்

சிவபிரானைச் சரண்புகுந்து பெறற்பாலது ஞாநமென்றற்கும் அது சிவனுடைமை என்றற்கும் அது பிறருடைமையென்று கூறுவார்கூற்று அறிந்தாரவைக்கட் பொருந்தாவழக்கென்றற்குந் தக்க சான்றுகளென்பதாம்.

"ஈசாநன் சர்வவித்தைகளுக்கும்" என்னுமந்திரத்தில் சிவபிரானுக்குச் சர்வவித்தியாதிபதித்துவம் பிரசித்தம். அதனால் சர்வவிஞ்ஞாநங்களும் அவனுடைமைகளென்பது தானே போதரும். "தாரசமுதலிய ஞாநங்கள் முழுதும் எவன்வசத்தன" என்று மகாபாரதத்திலும் சொல்லப்பட் சங்காரகாலத்தில் அதற்குபகரணமாதற்றன் மையானே தமோகுணக்கிரகணம் சிவபிரானுக்குண்டென் றும் என்றுமமைந்த வியற்கை நிலைமை விசுத்தஞாநமயத்துவமென்றும் பிரமாண்ட புராணத்தில் மத்திய பாகத்தில் இளோபாக்கியாநத்தில் வருணிக்கப்பட்டது. என்னை? "சதசத்பாவயுக்தன், பிரளயத்தில் தமசாத்மா, விசுத்தஞாந்தத்துவன், ருத்திராத்மாவாகிய நின்பொருட்டு நம" என்று ஆண்டு வசந்மிருத்தலானென்க. "சிருட்டிதோறும் பிரசூதர்களாய்வரும் காலாவச்சே தவர்த்திகளாகிய பிரமாக்களுக்குச் சாஸ்திரவிஸ்தரத்தை ஆதியில் உபதேசிப்போன் அவன்றானே. காலாவச்சேதயுக்தர்களாகிய குருக்களுக்குக் குரு இவன்றானே. எல்லார்தமக்கும் சர்வேசன் காலாவச்சேதவர்ச்சிதன்" என்று விசுவகுருத்துவம் சிவபிரானுக்குச் சிவபுராணத்திற் பிர்திபாதிக்கப்பட்டது. "கிலேசகர்மவிபாகாசயங் களால் தீண்டப்படாதோன் விசேட புருடன் ஈசுவரன்" என்று சூத்திரம் எடுத்துக்கொண்டு "அவன் முன்னோர்தமக்கெல்லாம் குரு காலத்தால் அவச்சேதமின்மையினால்" என்று பகவான் பதஞ்சலியும் யோகசூத்திரத்தில் இப்பொருளையே யாத்துரைத்தானென்பது. இனி இருடிகளுக்கும் சார்வஜ்ஞும் சமாநமாகவும் சிறப்பு வகையால் சிவபிரானுக்கு வழங்கப்படும் சர்வஞ்ஞனென்னும் நாமவழக்கு அவனது விசுவகுருத்துவோபயோகியாகிய நித்தியசித்தநிரதிசயசார்வஞ் ஞசத்பாவத்தைக் காரணமாகக் கொண்டெழுந்ததென்க. அதனாலன்றே சிவபுராணத்திலும் ஆதிகுருத்துவத்தைச் சிவபிரானுக்கு உபபாதாஞ் செய்யும் பொருட்டு அதனை வருணித்தற்குமுந்தியே "உலகத்தில் ஞாநைசுவரியம் சாதி சயத்துவத்தாற் காணப்படும். சிவபிரான்பால் நிரதிசயத்தாலுள்ளது என்று அறிஞர் கூறுவர்" எனப்படிக்கப்பட்டது. பாதஞ்சலத்திலும் "அவன் முன்னோர்தமக்கெல்லாம் குரு" என்னும் சூத்திரத்திற்குப் பிராசீநசூத்திரம்" அவனுக்குச் சர்வஞ்ஞபீஜம் நிரதிசயம்" எனவருமாறு தெளிக. சிவபிரானுக்குச் சந்திரசேகரத்துவம் பிரசித்தமன்றே. ஞாநசந்திரகலாசூடனைப் பத்துத்திசையினும் பாநுமண்டல மாவோனைத் திரைகுண்ணிய முதலியவற்றின் வடிவினவாகிய பத்துத்திவ்வியா யுதங்களினால் விளங்குவோனை" என்று அந்தச் சந்திரன் சகலஞாநமயனென்பதைச் சிவ சாஸ்திரங்கள் வெளிப்படவுரைக்குமென்க. பசியான் வருந்தி வருவோர்க் கெல்லாம் தடையின்றி அந்தமளிக்கும் அந்தசத்திரபதி தனது அந்த தாநவிசேடம் எல்லாருக்கும் தெரியப்பட்டு அவர் தன்பால் வந்து பசி நீங்குமாறு தனது மாளிகைச் சிகரங்களில் அந்தக்கொடிகட்டி வெளியிடுமாறு போல ஞாநநாயகனாகிய சிவபிரானும் பவபீடையான்வருந்தி வருவோர்க்கெல்லாம் ஞாநவமுதளிப்போன் தானே யென்னுமுண்மை வெளிப்படுக்குமாறு பெருங்கருணையினாலே ஞாநமய மாகிய சந்திரகலையைத் திருமுடியிற்றரித்தருளுவனென்று சிவபிரானுக்கு ஞாநப்

பிரதத்துவம் பொருந்துமாறு தெளிக. இனிப் பகவதியாகிய உமாதேவி பிரம வித்தியாப்பிரதாயினி என்பது சுருதிபுராணசித்தம். தலவகாரிகளதுபநிடதத்தில் சக்கிராதிகளுக்கும் சுவேதாச்சுவதரர்களதுபநிடதத்தில் மகா விருடிகளுக்கும் பரப்பிரமவித்தையை உபதேசித்ததன்மை பகவதிக்குச் சொல்லப்பட்டது. கூர்ம புராணத்திலும் ஈசுவரகீதைகளில் யோகாத்தியாயத்தில் "பரமையாகிய பார்வதிதேவி சர்வவித்தியாப்பிரதாயினி எவள் விசேடித்துத் தியானிக்கப்படுவள் அவடான் எனது வசநத்திற்கு அநுகை" என்று பிரமவிட்டுணுருத்திராதிகளுக்குச் சிவநியோகத்தால் சிருட்டிபாலநசங்காராதிகர்த்திருத்துவப்பிரதிபாதகப்பிரகரானத்தில் சிவவசநமெழுந் தமையால் சகலலோகாநுக்கிரகைகரசிகசிவநியோகத்தால் பிரமவித்தியாப் பிரதத்துவம் அவட்குண்டென்பது சொல்லப்பட்டது. இவ்வியற்கையுடைய பகவதியாகிய உமாதேவியாரைத் தனது விக்கிரகத்தின் ஏகதேசரூபமாக வுடையான் ஏவன் அவனுக்கு ஞாநப்பிரதத்துவ முண்டென்பது கேட்கவும் வேண்டுமோவென்றால் கைமுதிகநியாயசித்த மென்க. எனவே சிவபிரானைக் கைவிட்டு முத்தியேதுவாகிய ஞாநப்பிர தத்துவம் பிறர்க்குண்டென்பார்கூற்று எட்டுணையும் பொருந்தாமை பெறப்படும். இதனால் ஞாநம் சிவன்பாற் பெறப்படும் சிவனுடைமையென்றற்கு வேறுமேதுக்கள் காட்டி அது வலியுறுத்தப்பட்டது. (25)

**சம்புமன்றிருத்திவிராகத்திற்சான்றோன்றகுவைராக்கியக்குறியா**
**னம்பமனிறைந்தோனென்றுநீகேட்கப்படுதியன்றேமறைநவிற்று**
**மும்பர்நாயகவக்கரையிலாச்சுகசாகரமெனுமுனையன்றியெவர்பா**
**லம்புவியுயிர்க்குச்சுகம்பவித்திடுதற்குரியதாமம்பலத்தமுதே** **26**

**யாதுமெய்யாகிலசிவாகமலாளநீயமாஞ்சீவரத்திநந்தா**
**னாதமுக்கண்ணயாவைதாமிரிடசங்கரநாமதேயங்க**
**ளோதிவற்றாலுமநந்நியசமாச்சிரயமதாயுயிர்களுக்கெல்லாம்**
**போதருசுகப்பிரதத்துவநினக்கேபுடமதாப்புகன்றிடப்படுமே.** **27**

(எ-து) சம்புவென்றும் திருப்திவிராகசாலியென்றும் வைராக்கியசிந்ந பரிதனென்றும் கேட்கப்படுவோன் சிவபிரானாதலால் இச்சிவநாம வழக்குக்களும் சிவாகமங்களெல்லாவற்றாலும் கொண்டாடப்பட்டு அவற்றின்கட் சீவரத்திந மென்றுயர்த்தோதப்படும் சிவ என்னும் உபயாக்ஷரவபிதாநமந்திரமும் மிரிடன் சங்கரன் என்று வழங்கும் நாமதேயங்களும் சிவபிரானுக்குக் கேட்கப் படுதலால் இச்சிவநாம வழக்குக்களும் அபாரசுகசமுத்திரமாகிய சிவபிரானே உயிர்கள் சரண்புகுந்து சுகப்படுதற்கிடமாவானென்றற்கும் அவ்வுயிர்களனைத் திற்குஞ் சுகத்தையளிப் போனவனே யென்றற்கும் அவ்வியல்பு பிறரெவர்க்கு முரித்தாகா தென்றற்கும் தக்கசான்றுகளென்பதாம்.

நிரதிசயசுகத்திற்கு இடமாதற்றன்மை சிவபிரானுக்குண்மை தேற்றமாய வழியன்றே அதனை யேதுவாகக்கொண்டு சகலசீவசுகப்பிரதத்துவம் அவற்குளதென்பது தெளிவித்தல் முடிவுபெறும். அவ்வேதுவை விளக்கும் பொருட்டெழுந்தது ஈண்டு முதற்செய்யுளென்பது. என்னை? சம்புவென்பது எவனிடத்திற் சுகம் பவிக்கின்றதோ அவனுக்குரியபெயரென்பது. ஆத்மாக்கள

னைவருக்கும் சுகாத்மத்துவம் உண்டெனினும் சிறப்பு வகையால் இங்ஙனம் சம்புவென்றது நிரதிசயசுகாத்மத்துவாபிப் பிராயம்பற்றியென்க. அதனாலன்றே நித்திய திருப்தி நித்தியமாகிய விடய சுகவை திருட்டிணியம் சிவபிரானுக்குள வென்று சிவசாஸ்திரங்களிற் பிரசித்தமாகச் சொல்லப்படும் "சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரதை, அலுப்தசக்தி, அநந்தசக்தி விபுவாகிய மசேசுவரனுக்கு ஆறு அங்கங்களாக ஏலோர் கூறுப்". "ஞாநம், விராகம், ஐசுவரியம், தபசு, சத்தியம், க்ஷமை, திருதி, சிருட்டிருத்துவம், ஆன்மசம்போதம், அதிட்டாதிருத்துவம் என்னும் அவ்வியயங்களர்கிய இப்பத்துக்குணங்களும் சங்கரன் பாலென்றும் நிலைபெறுவன" எனவசநமிருத்தலானென்க. "ஒப்பில்லாததாகிய ஞாநம் வைராக்கியம் ஐசுவரியம் தருமம் இந்நான்கும் லோக நாயகனுக்குச் சகசித்தங்கள்" எனவும் வைராக்கியம் பிரமனுக்குங் கேட்கப்படினும் "சநநமுறுவோனாகிய இரணியகருப்பனைப் பார்க்கின்றான்" என்று சநநமுறுமவத்தையிற்றானே சிவகடாட்சத்தால நுக்கிரகிக் கப்பட்ட அவனுக்குச் சகோற்பந்தமாயதென்பதே தவிர நித்தியமன்று. அதனாற்றானே சகசித்தமென்றுரைக்கப்பட்டது. நிரதிசயசுகாஸ்பதத்துவத்தால் துச்சவிடயசுகவை திருட்டிணியம் தனக்குளதென்பது தெளிவித்தற்பொருட்டன்றே விடயபோகலம் படர்களாகிய மூடர்களால் ஆதரிக்கப்படுவனவாகிய வஸ்திரம் மாலை ஆபாணம் சந்தநமுதலிய அநுலேபநங்கள் இவற்றைக் கைவிட்டு யானைத்தோல் சர்ப்பம் எலும்பு சாம்பல் இவற்றை அவ்வவற்றிற்குரிய இடங்களில் சிவபிரான் மேற்கொள்வனென்க. இவ்வுண்மை பாகவதத்தில் காசிபவசநத்தால் புடஞ்செய்யப் "எவர்களால் வஸ்திரம் மாலை ஆபரணம் அநுலேபநங்களால் நாயினுண்டி தானாகவே கொண்டாடப்படும் (அந்தத்) துர்ப்பகர்சள் சுவாத்மாவில் -ரதனாகிய எவனது அபிப்பிராயத்தை அறியாதவர்களாய் (அவனது) ஆசரிதத்தை நகைக்கின்றார்கள்" என வருமாற்றாலறிக. சுவாத்மாவில் ரதன் சுவாத்மாநந்தாமிர்தசாகரத்தில் முழுகினோன். அவனது அபிப்பிராயத்தை அறியாதவர்கள் = நிரதிசய சுவாத்மாநந்தத்தை நித்தியம்நுகருதல்பற்றிவந்த விடயசுகவைதிருட்டிணியத்தைப் புடஞ்செய்யுமபிப்பிராயத்தை அறியாதவர்கள். நாயினுண்டி = இந்தச் சரீரம் விழுந்த அநந்தரம் நாய்களாலு வந்துண்ணப்படுவதென்றபடி, வைதிருட்டிணியம் = நிராசை. துர்ப்பகர்கள் = துஷ்டபகோற்பந்நர்கள். இனி வெகுதநமுடையோன் கழிபெரும்பற்றுடைய னாங்கால் தநதாநமின்மையும் தநசந்தாந முதலியனவில்லாதோனாயும் அநுக்கிரகசமர்த்தனாகிய யோகியினிடத்தில் தநதாநமுங் காணப்படுதலால் தனக்கேயுரிய நிரதிசயசுகத்துவம் ஏனையோர் விடயத்தில் சுகப்பிரதத்துவமுண்மைக்கு ஏதுவாதலெங்கனமென்று சங்கை செய்தல் பொருந்தாது, எங்கனம்? "இவனது ஆநந்தத்தினது மாத்திரையே அந்நியங்களாகிய பூதங்கள் உபசீவிக்கின்றன" என்னும் சுருதியை யநுசரித்து நிரதிசயசுகாஸ்பதத்துவத்தால் தனதேயாகிய சுகமகாசமுத்திரத்தில் அற்பத்துளி மாத்திரமாகிய ஐரண்ணியகர்ப்ப பரியந்தமுள்ள சுகத்தை யளிக்குந்தன்மை சிவபிரானுக்கே பிரசித்தமாக லானென்க. இனிச் சகலசீவசுகப்பிரதத்துவம் சிவபிரானுக்கே யுண்டென்பதற்குக் சாக்ஷாத் எதுக்களை விளக்கி யெழுந்தது இரண்டாவது செய்யு ளென்பது. "இனி இவனைப் பிரமசாரிகள் எந்த மந்திரத்தால் அமிர்தத்துவம் சொல்க என்று கேட்டார்கள். அந்த யாஞ்ஞவற்கியன்

சதருத்திரீயத்தால் என்று சொன்னான். இவைகள் அமிர்தனுடய நாமதேயங்கள். இவற்றால் அமிர்தனாகின்றான்" என்று சாபாலோபநிடத்தில் ஸ்ரீ ருத்திரத்திற் சொல்லப்படுவனவாகிய நித்தியமுத்தனென்னும் சிவபிரானுக்குரிய நாமதேயங்கள் அமிர்தத்துவசாதகங்களாகச் சொல்லப்பட்டன. அவை தம்முள்ளும் சிவ என்னும் நாமம் அத்தியுக்கிருஷ்டம். என்னை? "வித்தைகளுள் சுருதி உத்கிருஷ்டம், அதினும் ஏகாதசிநி, அதினும் பஞ்சாக்ஷரி, அதினும் சிவ என்னுமிரண்டு அக்ஷரம்" என்று சிவாகமரகசியவித்துக்கள் மொழிதலானென்க. "எந்த இருமையக்கரம் ஒருதரம் பிரசங்கத்தால் வாக்கினால் சொல்லப்பட்டது அது நரரது பாபத்தைச் சீக்கிரம் சேதித் துவிடும்" என்று பாகவதத்தினு மதன் பெருமை சொல்லப்பட்டது. அதனால் சிவ என்னும் நாமத்தைச் சீவரத்திநமென்று வியவகரிப்ப சிவாகமாக சியவித்துக்களென்பது. அது சிவத்தைச் செய்வோனென்னும் பொருட்டு, "சிவனொருவனே தியாநிக்கற்பாலன் சிவத்தைச் செய்வோன்" என்று அதர்வசிகோபநிடதத்தில் அதற்கு அங்ஙனம் உரைக்கப்பட்டமையானென்க, அதனுரையாதல்பற்றியன்றே ஆண்டுச் "சிவத்தைச் செய்வோ னென்னும் பதமெழுந்தது. "சர்வைசுவரியசம்பந்தன் சர்வேசுவரன்" என்னும் பூர்வவாக்கியத்திலும் சர்வேசுவரநாமத்திற்கு யோகத்தன்மை யாலுரையுரைக்கும் பொருட்டுச் சர்வைசுவரியசம்பந்தனெனப் பதாந்தரம் சேர்த்துரைக்கப்பட்டமை காணப்படுதலானென்க. "மனிதர்களது சிவத்தை இச்சித்து என்றும் சர்வார்த்தங்களினது உபக்கிரமத்தைத் தழைப்பிக்கின்றானென்பது யாது அதனால் தேவன் சிவனென்று கொள்ளப்படும்" என்னும் ஆநுசாசநிகவசநத்தாலும் சிவநாமத்திற்குச் சிவத்தைச் செய்வோன் என்னும் பொருளுண்மை விளக்கப்பட்டது. "தாநவர் அமரர்கள் எவர் அவர்களெல்லாரும் எனக்குச் சமமாகின்றார்கள். சர்வபிராணிகளுக்கும் சிவனாகின்றேன். தேவிர்காள், அதனால் எனக்குச் சிவத்துவம்" எனக் கர்ணபருவத்தில் வரும் சிவவசந்த்தாலும் அதற்கு அப்பொருளுண்மை புடஞ்செய்யப்பட்டது. மிரிடன் சங்கரன் என்பன சிவத்தைச் செய்வோனென்னும் பொருளவாதல் வெளிப்படை. இவ்விரண்டுசெய்யுட்களானும் சுகம் சிவபிரானைச் சரண்புகுந்து பெறற்பாலதாய்ச் சிவனுடைமையாமென்றற்கு வேறுமேதுக்கள் காட்டி அது வலியுறுத்தப்பட்டது. இவற்றால் ஞாநம் சுகமிரண்டும் சிவனுடைமைகளென்பது நாம ரூபகுணகிரியைகளின் வைத்துணர்த்திச் சத்துவப்பிரவர்த்தகத்துவம் சிவபிரானுக்குண்மை வலியுறுத்தப்பட்டது.

இவ்வெட்டுச்செய்யுட்களாலும் சிவபிரானுக்குத் தாமசத்துவதோஷ முண்டென்னும் வாலிசர்கூற்று உடன்பாட்டுமுகத்தானும் எதிர்மறை முகத்தானும் ஏது திருட்டாந்தங்களின்வைத்துத் தருக்கித்து வெறும் புலம் பலாமாறு காட்டி மறுத்து வேர்களைந்தெறியப்பட்டது. இனிப் பாசுபத்தியவரணம் சிவபிரானுக்குண் டென்றுகொண்டு அதுபற்றி இழுக்குரைப்பாரைநோக்கி எழுந்தன வருங்செய்யுட்க ளென்பது. (27)

**வரதவெப்பாசுபத்தியம்வரித்தாயென்றருணித்தியவாணி**
**யுரைதருமதுநித்தியமதுகொண்டேயுணர்குவலும்பர்கட்கெல்லாம்**
**பரவவிமுதலாம்விதிமன்னித்தியமாப்பற்றிடப்பட்டதியாததன்றன்**
**புரிதருபேறுதன்னையேவரத்தாற்புனைந்திடும்துதிப்பொருட்டே.** **28**

# பிரமதருக்கஸ்தவம்

(எ-து) "நானே பசுக்களுக்கெல்லாம் அதிபதியாகுக என்று வரத்தை வரிக்குவலென அவன் புகன்றா" னென நித்தியமாகிய சுருதிவாக்கே ருத்திரனால் வரம் வரிக்கப்பட்டது என்று சொல்லியது எனக்கொண்டு பாசுபத்தியதருமம் சிவபிரானால் இடையிற் பெறப்பட்டதென்று பொருளுணரப்படுதலால் அது அவர்க்கு நித்தியசித்தமாதல் யாண்டைய தெனக்கூறும் சிலர், அவர் அவ்வாறு கூறுதற்குக் காரணம் அச்சுருதிவசநத்தை ஊகித்துணராத, அவரது ஊகமின்மையே பிறிதில்லை. சிவபிரான் அங்ஙனம் புகன்றானென்று சொல்லப்பட்டவதனால் அச்சுருதி வாக்கியப் பிரவிர்த்திக்கு முன்புதானே வரத்தால் வரித்த அந்நிகழ்ச்சியுளதென்பது பெறப்படுத் தலானும் அல்லுழி அவன் புகன்றானென்னும் இறந்தகாலப்பொருட்பிரயோகத் திற்கு உபபத்தி பெறப்படாமையானும் அதனால் யாண்டு யாண்டு அநாதிகாலப் பிரவர்த்தங்களாகிய பூர்வபூர்வகற்பங்களிலே இது படிக்கப்பட்டுவரும் அததற்கு முந்தியே பாசுபத்தியம் சித்தமாயுள்ளதென்பது போதருதலானும் இவ்வாக்கியத் தினாற்றானே பாசுபத்திய தருமம் சிவபிரானுக்கு அநாதிசித்தமெனக் கொள்வதே பொருத்தமென்பதை அவர்நோக்கிலர். இந்தமுறைபற்றியன்றே அந்தந்தத் தேவதையால் வரம் வரித்து அடையப்பட்டதென்று பிரதிபாதிக்கப்படும் யாகம் ஓமம் முதலியனவற்றிற்கு நித்தியத்துவம் சமர்த்திக்கப்படும். அல்லுழிச் சகலவைதிக கருமங்களுக்கும் அநித்தியத்துவமுளதாமென்பது போந்து கற்பபேதத்தால் தருமாதருமமுறை பிறழ்ச்சி உளதாமென முடியுமன்றே! அதனால் நித்திய சித்தமாகிய அந்தந்தத் தேவதைக்குரிய கருமசம்பந்தத்தைப் பிரக்கியாபநம் பண்ணு முகத்தால் அவரவர் முன்னிலையிற் கேட்கப்படும் வரவரணார்த்தவாதம் கருமப் பிரசம்சார்த்தமென்பதெங்ஙனமோ இங்ஙனமே இதுவும் நித்திய சித்தமாகிய பசுபதி பாவத்தைப் பிரக்கியாபநம்பண்ணுமுகத்தால் கர்மப்பிரசம் சார்த்தமாகிய அர்த்தவாத மென்பது போதருதலினால் பாசுபத்தியத்தைச் சிவபிரான் வரித்தானென்றது புனைந்துரை மாத்திரையே யெனக் கோடலே பொருத்தமென்பதாம்.

இந்தப்பிரகாரமே கர்மப்பிரசம்சார்த்தமாகிய அர்த்தவாதத்தன்மையை ஒப்பு கொண்டு ஆண்டு விண்டுவுக்கு நேரும் அத்தியந்தாபகர்ஷமும் பரிகரிக்கப் படுமென்பது. அல்லாக்கால் "தஇஷும்" "அக்கிநியை அநீகமாகச் சோமனைச் சல்லியமாக விண்டுவைத் தேசநமாக அவர்கள் இஷவைச் செய்தார்கள்" என்று திரிபுரசங்காரத்துக்கு உபகரணமாதற்றன்மையால் உருத்திரசேடபூதமாகிய பாணத் தினது மத்தியாவயவத்தன்மையைத் தனதிச்சையாற்றானே தேவர்களால் அடைவிக்கப்பட்டானெனக் கேட்கப்பட்டவிண்டுவிற்கு நேரும் அவ்வத்தியந்தா பகர்ஷமானது நிவாரணஞ் செய்யப்படுமாறு யாண்டையதென்க. இதனால் பாசு பத்தியவரணசுருதி புனைந்துரையாமாறு காட்டி அதுபற்றி இழுக்குரைப்பார் கூற்று மறுக்கப்பட்டது. இனி அது புனைந்துரையன்று உண்மை நிகழ்ச்சி பற்றியதென்றே கோடுமென்பாரை நோக்கி எழுந்தது வருஞ்செய்யுளென்பது. (28)

**உலகிதுமோகத்துழல்வதுயாசப்சுபதிகளைமுறையுணர**
**வலியிலதன்றேமன்றுண்மாமணியேயெங்ஙனமுத்திவாய்ப்பதுவென்**
**றிலகுறவெண்ணிவரத்தினாலேனும்வெளிப்படுத்திட்டனையெனிற்றான்**
**மலைவிலோயந்தவிதுமன்றூடணத்திற்கெங்கனமாகும்வான் பொருளே. 29**

(எ-து) உயிர்கள் மோகத்திற்பிணிப்புண்டு பசுத்துவமுடையன வாய்ப் பசுக்களெனப்படுதலானும் பசுத்துவ நீக்கமே மோக்கமெனப்படு மாதலானும் அது பாசுபதவிரதாநுஷ்டானமுள்வழியன்றிப்பெறப்படுவத ன்றாதலானும் அதுதான் பதிபசுபாசரூபதிரிபதார்த்தலக்கண வுண்மைஞாநம் வாய்த்தழித் தலைப்படுவ தொன்றாதலானும் அல்லுழி உயிர்கள் மோக்க மெய்துதல் தலைக்கூடாமை திண்ணமாதலானும் எவ்வுபாயத்தும் அவ்வுண்மைஞாநாநுஷ்டாநத்தை அவ்வுயிர் களுக்குப் பயந்து அவர் முத்தராமாறருளுந் தொழில் உயிர்க்குயிராய்ச் சர்வலோகாநுக்கிரககரனாகிய சிவபிரானுக்குக்கடப்பாடாதலானும் இவற்றைத் திருவுளத்தடைத்து மனிதர் முதலியவுயிர்கள் பசுக்களாமாறும் பசுக்களுக்கெல்லாம் தான் பதியாமாறும் அவர் பாசபந்தத்தாற் பிணிப்புண்டு பிறப்பிறப்புக்கிலே சங்களுட்படுமாறும் அக்கிலேசங்களைக்கடந்த மோக்கத்தின் கண் அவாமிக் குடையார் தன் தருளை ஆச்சிரயித்து அதன் வழிநிற்கப்பெறுபவெனின் அவரால் அது ஒருதலையானெய்தப்படுமாறும் உணர்ந்து உணர்ந்தவாறொழுகி நிற்கும் பாசுபதஞாநாநுஷ்டாநத்தை அவர்க்களித்தல் வேண்டியே அருண் மேலீடு பற்றி வரவரணவியாசத்தால் தனது நித்தியசித்தமாகிய பாசு பத்தியத்தைச் சர்வலோகப் பிரசித்தியாக வெளியிட்டானென்று கொண்டமைதலும் ஈண்டு மெய்யறிவாளர்க்குச் சால்பேயாக அப்படியும் அமையாது தமக்குமநம்போனவாறு பொருள் கற்பித்துப் புறம்பழிக்கும் அப்பேதைநீரார் என்கடவரென்பதாம்.

"பாசுபத்தியம் இயற்கையாகவே சித்தம். பசுத்துவமும் உங்களுக்கு. அதனை ஈண்டு இப்போது பணபந்தவிநோதத்தால் காட்டுகின்றேன்" என்று இவ்வுண்மை இலிங்க புராணத்திலுணர்த்தப்பட்டது. இதனால் பாசுபத்தியவரணசுருதி உண்மை நிகழ்ச்சிபற்றியதென்பார் கொள்கையை மேற்கொண்டு ஆண்டும் பெரும்பயனோக்கி நிகழ்ந்தது அவ்வரணமென்றல் சாலுமென்பதினிதுகாட்டி இழுக்குரைப்பார்கூற்று மறுக்கப் பட்டது. இனி அது பயனோக்கி நிகழ்ந்தது என்று கோடற்கண் யாப்புற வென்னையென் பாரைநோக்கி எழுந்தது வருஞ்செய்யுளென்பது. (29)

**அல்லதூஉம்வரந்தான்வரித்தலின்பலத்தையாய்தலானின்றனக்கென்னே**
**மல்லமர்சூலதரவென்றுமிதுபோல்வதுநினக்கிலீலைமாத்திரமே**
**யெல்லவாம்விழைவுமடைந்ததாமுடிந்தோயடிக்கடியெப்பலங்குறித்தோ**
**மல்லன்மாஞாலந்தோற்றுகின்றாய்மன்வைக்கின்றாய்வாங்குகின்றாயே** 30

(எ-து) எல்லாரானும் விரும்பப்படும் எல்லாப்பொருளும் ஒருகாலத்தில் ஒருவர்பால் வேண்டாது எக்காலத்தும் தன்னதாகக்கொண்டு தன்னிலையில் விகாரமின்றி என்றும் ஒருபெற்றியனாய் நின்று விளங்கும் சர்வசொரூநித்திய திருப்தன் முதல்வனாதலினாலும் இப்பிரபஞ்சத்தை யடிக்கடி தோற்றுதலும் வைத்தலும் வாங்கலுமாகிய முத்தொழின்முதலியனவாய் அவன் செய்யும் வியாபாரங்களெல்லாம் நித்திய திருப்தனாகிய அவனியல் பின்வைத்து நோக்க அவற்றால் வரும்பலத்தை யுத்தேசித்துச் செய்யாத அவனுக்கு அவை லீலை மாத்திரமென்று சொல்லப்படுதலுமுண்டாதலினாலும் பாசுபத்தியத்தை வரித்தானென்று சொன்னவதுவும் அவனியல்பின் வைத்து நோக்க எவ்வாற்றானும் பலமுத்தேசிக்கப்பட்டதன்றாதலினாலும் இதுதான் இத்தகையனவாய் அவன்

செய்தானென்ற பிறவெல்லாந்தாம் அவனுக்கு லீலைமாத்திரமெனக் கொண்டமை தறான் அன்னோர்க்குச் சால்பேயாக அதுவுமின்றித் தமக்குமாம்போனவாறு வெற்றே புலம்புமவ்வியல்பு அவர்க்கு என்ன பயன் விளைக்குங்கொல்லோ தெரிகின்றில மென்பதாம்.

இதனால் அதுபயனோக்கியெழுந்ததன்றென்பார் கூற்றை மேற்கொண்டு ஆண்டும் இழுக்கின்மைகாட்டி அவருரை மறுக்கப்பட்டது. இம்மூன்று செய்யுட்களானும் பாசுபத்தியவரத்தை வரித்தான் சிவனென்று சுருதி சொல்லியது புனைந்துரை மாத்திரையேயன்றி அதுபற்றிய உண்மை நிகழ்ச்சி இல்லையென்பதும் அஃதுண்டெனக்கொள்ளினும் நித்தியசித்தமாய பாசுபத்தியதருமத்தை உயிர்கட் கறிவுறுத்தற்பயன் கருதி வரித்தானென்று கோடல் தக்கதென்பதும் அப்பயன் கொள்ளாவிடத்தும் படைத்தன் முதலிய ஏனைத்தொழில் போல லீலாமாத்திர மாகத்தான் கோடற்கிழுக்கென்னையென்பதும் முறையே விளக்கிப் பரிகரித்துப் பாசுபத்தியத்திற்கு அநாதிசித்தத்துவம் உபபாதநம் செய்யப்பட்டது. இனி இம் மூன்று திறத்துள் ஒன்றுபற்றிநின்றமையாது மாறுபடுங்காலுள தாமிழுக்கென்னையென் பாரை நோக்கி எழுந்தது வருஞ்செய்யுளென்பது. (30)

**பாசுபத்தியந்தானின்றனக்காகந்துக்கமெனப்பவித்ததேலைய**
**பேசுறுபொருளநுப்பத்தியெல்லைகடக்கின்றதிலையருட்பெரியோ**
**யாசிலோய்சமுசாரிகளனைவருமேபசுக்களென்றறைந்திடப்படுப**
**வீசருண்மேலோயப்பதித்துவந்தானாதியதாகுமெங்கனமே. 31**

(எ-து) பாசுபத்தியமென்றவதுதான் எல்லாச்சீவர்களையுஞ் சுட்டி அவர்க்கெல்லாம் மேலாய்விளங்கும் ஆதிபத்தியமெனப்படும் சர்வேசுரத்துவ மென்னும் அவ்வியல்பன்றே! "பசுக்களெனப்படுவார் சமுசாரவர்த்திகளாகிய ஆன்மாக்களனைவரும். அவருக்குப் பதியாந்தன்மையினால் தேவேசனாகிய சிவன் பசுபதியென்று நினைக்கப்படும்" என்று சைவம் லைங்கமுதலிய புராணங்கள் முழங்குவனவன்றே! சர்வேசுவரத்துவ மென்னும் அதுதான் அநாதிசித்தபதார்த்த மாகிய பரப்பிரமத்துக்குத் தருமமென்பது தேற்றமன்றே! பிரமமாகிய தருமி அநாதிசித்தமாகவே அதனின் வேறாகாத சர்வேசுவரத்துவமாகிய தருமமும் அநாதி சித்தமாமென்றல் தர்மிக்கிராக்கமாநசித்தமென அளவை நூலுணர்ந்தார்க்கெல்லாம் ஒப்பமுடியற்பாலதொன்றன்றே! அவ்வியல்பினதாகிய சர்வேசுவரத்துவமென்னும் பரப்பிரமதருமமாகிய பாசுபத்தியம் ஆதிக்கண்ணதெனத்கோடல் பொருந்துமாறு யாண்டையதென்பதாம்.

எனவே "அந்தத் தேசசைச் சிருட்டித்தான்" என்பது முதலியவற்றில் இறந்த காலப்பொருட்பிரத்தியயம் உளதாகவும் தேசசுமுதலியவற்றிற்கு நித்தியத் துவங்கொள்ளாமை எங்ஙனமோ அங்கனமே பாசுபத்தியத்திற்கும் ஆகுக என்பார்சங்கையும் இதனாற் புறம்பொழிக்கப்பட்டது. தேச சுமுதலியனவற்றிற்கு அநித்தியத்துவமுளதாகவும் இறந்தகாலப்பொருட்பிரத்தியம் பிரவாகாநாதி பூர்வகற்ப விருத்தமாகிய அப்பொழுதைச்சிருட்டியின தீதத்துவம்பற்றியெழுந்ததென்று கொள்ளப்படுதலின் அதுபற்றி ஈண்டுப் பொருந்தாமையின்மையுணர்க. இந்த முடிபு

இறப்பு நிகழ்வு எதிர்வு என்னுமுக்காலத்தும், ஒரேபெற்றியதாய்விளங்கும் சகலசீவாதிபத்தியமென்னும் பாரமேசுவரநித்தியசித்ததருமத்தில் பிரவர்த்தித்தல் எவ்வாற்றானும் பொருந்தாதென்பது. இதனால் பாசுபத்தியம் அநாதிசித்தமென்றற்கண் மாறுபடுங் காலுளதாமிழுக்குரைத்து மேலது வலியுறுத்தப்பட்டது. இனி ஈண்டுக் கூறியவாற்றால் அநாதிசித்தமென்று வலியுறுத்தப்படும் பாசுபத்தியம் பசுத்துவமாகிய எதிர்நிலைப்பொருளின்வைத்துணரப்படுவதொன்றன்றே! அப்பசுத்துவந்தான் எப்பெற்றியதாங்கொல்லோவென்பாரைநோக்கியெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (31)

**பதித்துவமிதுதானிருக்கவெந்தாய்மன்பசுத்துவமீதுமற்றெந்த**
**விதத்திநுமதுநாதநத்துவமதனைமேவுவதிலையருள்விமல**
**பதத்தினோயுளதேலங்கதன்வரணசிரவணந்தமுட்பரிகார**
**விதத்தினொன்றன்றிவேறதுவீண்டுமேவுறாதென்பதெவ்விதமே. 32**

(எ-து) பதித்துவம் வரிக்கப்பட்ட காலத்து அதனோடொப்பப் பசுத்துவமும் ஆன்மாக்களனைவர்க்கும் வரிக்கப்பட்டதென்பது லைங்கமுதலிய புராணங்களுட் பெருவழக்கன்றே! பாரதத்திலும் கர்ணபர்வத்தில் பீடிதர்களாகிய ஆன்மாக்களனைவரும் பசுத்துவமுடையராமாறும் பசுக்களுக்கெல்லாம் பதியாந்தன்மை தனக்குளதாமாறும் சிவபிரான் மொழிந்ததும் தேவ தேவனுடைய இவ்வசநத்தைக் கேட்டுத் தேவர்களனைவரும் பசுத்துவத்தை நினைந்து கவற்சி கொண்டதுமாகிய பதித்துவசக பசுத்துவவரணம் சொல்லப்பட்டதன்றே! பசுத்துவந்தான் ஆதிக்கண்ணதன்றென்பது வாதிகட்கும் ஒப்பமுடியற்பால தொன்றன்றே! அத்தகைப் பசுத்துவவரணம் கேட்குங்கால் அது ஆதிக்கண்ணதன்றென்பதற்கு எந்தப்பரிகாரம் சொல்லற்பாலதோ அது முற்கூறிப்போந்தவற்றுளொன்றாயினுமாகுக வேறாயினுமாகுக அதுவே பதித்துவவரணசிரவணமாகிய ஈண்டைக்கண்ணும் பொருந்தியமைதி பெறுதல் சாலுமெனக்கொண்டடங்காமை என்ன பயன் பற்றிக்கொல்லோவென்பதாம்.

"பீடிதர்களாகிய என் துலகர்களெல்லாருமே பசத்துவத்தை இயைக்கப்படுக, சுரோத்தமர்காள், பசுக்களுக்கு நான் பதியாகின்றேன் என்னும் பூபதியாகிய தேவதேவனது வசநத்தைத் தேவர்களெல்லாருங் கேட்டுப் பசுத்துவத்தைச் சுட்டிச் சங்கித்தோராய்க் கவலையை அடைந்தார்கள்" என்பது பாரத வசநம். இதனால் தன்னியல்பின்வைத்து நோக்குதலொன்றோ பசுத்துவமாகிய எதிர்நிலைப் பொருளியல் பின்வைத்து நோக்குங்காலும் அதுவும் அநாதி சித்தமென்னும் அப்பெற்றியதென்பது காட்டி அதனின்வைத்துப் பாசுபத்தியமும் அநாதிசித்தமாமென்பது வியவஸ்தாபித்து வலியுறுத்தப்பட்டது. இனிப் பசுத்துவந்தான் அநாதி சித்தமென்றற்கண் யாப்புறவென்னை? ஆதிக் கண்ணதாகுக என்பாரை நோக்கியெழுந்தது வருஞ் செய்யுவென்பது. (32)

**மாயைமுற்பாசதிடபந்தமதனான்மயங்கியவியல்பினராய**
**காயமாருயிர்கட்கியசாமுன்வடிவிற்றுடையவன்கருமத்தின்காண**
**மாயதேதையவீதுமற்றன்றேகௌணமாம்பசுத்துவமகில**
**நாயகவிதுதானெங்ஙனமாதிக்கண்ணதாநவிலுநம்பானே. 33**

(எ-து) சிவபிரானின்வைத்துநோக்கி உயிர்களுக்குப் பசுத்துவமேன்றது முக்கியமில்லை. என்னை? அவனை நோக்கிக் கோபரியாதிரூபத்துவம் அவற்றிற் கில்லையாதலின். மற்றென்னைகொல்லோவெனின், கோபரியாதிகள் எங்ஙனம் உடையானால் பாசங்கொண்டு கட்டப்பட்டுத் தோகாவகர முதலிய காரியங்களால் அவ்வுடையானுக்கு உபகர்த்திருகத்துவமுடையனவாகுமோ உயிர்களும் இங்ஙனமே சிவபிரானால் மாயை கர்மமுதவிய பாசங்கொண்டு திடமாகக் கட்டப்பட்டு யஞ்ஞுமுதலிய ஆராதநரூபமாகிய உடையவன் கருமகரணத்தால் அவனுக்கு உபகர்த்திருகத்துவமுடையனவாமென அதனியல்பு சொல்லற்பாலது. அதுவும் அநாதிசமுசாரப்பிரவாகமாக வந்ததென்றலே பொருத்தமாம். ஆகவே அப்பசுத்துவம் கௌணமென்பது முடிபாகலின் அது எவ்வாற்றானும் ஆதிக்கண்ணதன்றென்பது இவ்வுண்மையுணர்ந்தார்க்கு இனிது புலப்படுமென்பதாம்.

ஈண்டுக் கூறியவாறே இவரது பசுத்துவம் கௌணமென்பது சிவபுராணத் தினிது விளக்கப்பட்டது. "பிரமன் முதலியோர் தாவரமிறுதியோராகிய சமுசாரவர்த்திகளெல்லாம் தேவதேவனாகிய சூலியுடைய பசுக்களென்றெடுத் தோதப்படுவர். அவர்கட்கெல்லாம் பதியாந்தன்மையினால் தேவேசனாகிய சிவபிரான் பசுபதியென்று நினைக்கப்படும். பதியாகிய அவன் பசுக்களை மலமாயை முதலிய பாசங்களினாற் கட்டுகின்றான். பக்தியினாலினிது பாசிக்கப்படுவோனாய் அவன்றானே அவர்கட்கு மோசகனாகின்றான். இருபத்துநாலுதத்துவங்கள் மாயைகருமகுணமென்னுமிவ்விடயங்கள் சீவநிபந்தநங்களாகிய பாசங்களாகச் சொல்லப்படுகின்றன. பதியும் தேவனுமாகிய மகேசுவரன் பிரமன்முதற்றம்ப மீறாகிய பசுக்களை இந்தப் பாசங்களினாற் கட்டித் தனது காரியத்தைச் செய்விக்கின்றான்" என்பது சிவபுராணவசநம்.

இதனால் பசுத்துவந்தான் ஆதிக்கண்ணதன்று அநாதிசித்தமென்பதுகாட்டி அதனின் வைத்துணரப்படும் பாசுபத்தியமும் அங்கனமாதல் சாலுமென முடித்து மேல துவலியுறுத்தப்பட்டது. இனி இவ்வாறு செய்யுட்களாலும் நியாயமுகத்தால் விகற்பித்து மேற்கூறிப்போந்தபொருளுண்மைகளையெல்லாம் முடிந்தது முடித்த லென்னு முத்தியால் ஒருமுடியினவாகமுடித்துரைக்கின்றது வருஞ்செய்யுளென்பது.

(33)

**ஈசருட்பரமேகானெனவெந்தாயெம்பிரானெண்ணுபநினையே**
**யாசிலோய்தேவர்தம்முளும்பரமதெய்வமென்றறிகுபநினையே**
**காசுறுகளத்தோய்பதிகளுட்பரமபதியெனக்கருதுபநினையே**
**நேசமார்வாதவெவரிடை வாந்தான்வரித்ததாநம்பு துநினக்கே.** 34

(எ-து) "ஈசருட் பரமனாகிய மகேசுவரனென்னுமவனைத் தேவதைகளுட் பரமமாகிய தைவதமென்னும்வனைப் பதிகளுட் பரமனாகிய பதியென்னும்வனைத் தேவனைப் புவநேசனைத்து திக்கற்பாலனை அப்பாலனென அறிகின்றோம்". என்னும் சுவேதாச்சுவதரோபநிடதமந்திரத்தால் கொண்டாடப்பட்டு உலகறியவழங்கும் பரமேசுவரன் பரமதைவதம் பரமபதி என்னும் பெருந்தலைமைப் பெருவழக்கு டையான் சிவபிரானாகவும் அஃதுணர்ந்தும் எத்துணையும் உயர்ந்த அம்முழு

முதல்வன் எத்துணை யுமிழிந்த மற்றொருவனை ஈசன் தேவன் பதியென வழிபட்டு அவன்பால் வரம்பெறற்பாலனென்று சிறிதுமோராது சொல்லுவார் சொல்லினும் கேட்பார்க்கு மதியென்னையென்பதாம்.

**ஈசர்கள் சகத்தைநியமிப்போர்.**
**தேவதைகள் சகத்தாலாராதிக்கப்படுவோர்.**
**பதிகள் சகத்தைப்பாலிப்போர்.**

இதனால் பரமேசுரனைச்சுட்டி வரமளிப்போனவனும் யாண்டுமில்லை யென்பது சுருதிகொண்டு தெளிவித்து வரம்வரித்தானென்ற இழுக்குரைகளைத் துச்சீகரித்து மேற்கோள் வலியுறுத்தி முடிக்கப்பட்டது. இனிக் கங்காதாரணம்பற்றி இழிவரவுளதாய்த்தென்று புலம்பும் வாலிசர்களைக் கொளுத்தற்கெழுந்தன வருஞ்செய்யுட்களென்பது. (34)

**கங்கைதானின்னாற்பாவநியென்றுகண்ணுதாறரிக்கப்பட்டிலளான்**
**மங்கலமுதல்வகாளகூடந்தான்மதுரமென்றுணப்பட்டதன்றா**
**லங்கணவருண்மேலீட்டினாலுலகையளித்தற்கேயந்நியாரவோர்**
**தங்களான் முடியாவிவ்விருதொழிலுஞ்சாதிக்கப்பட்டனவன்றே. 35**

(எ-து) கங்கை பாவநியென்று கருதி அவ்வியல்பு தனக்கெய்தவேண்டியே அவளைத் தரித்தான் சிவபிரானென்று மங்கலமுதல்வனாகிய அவனியல்போராது இழுக்குரைப்பாரைநோக்கிக் காளகூடந்தான் மதுரமென்றெண்ணிக்கொல்லோ அதனுகர்ச்சி தனக்கெய்தவேண்டி அதனையுட்கொண்டான் சிவபிரானென்றுகடாவி மறுத்து உலகம் ஏதப்பட்ட நிலைமையும் அதனைத் தடுக்கமுடியாது பிறரெல்லாம் தன்பாற் சரண்புகுந்தநிலைமையுங் கண்டு உலகங் காக்க வேண்டியே அருண்மேலீடு பற்றி அவ்விரு தொழிலு நிகழ்த்தினான் அச்சிவபிரானென்பது முன்னூலாராய்ச்சி பற்றி இனிது துணியப்படுமென்பதாம்.

கங்காதாரணம் அந்நியரர்வோர் தங்களான் முடியத்தக்க தன்றென்பது மகாபாரதத்தில் பகீர்தனை நோக்கிக் கங்கை உரைத்த வசந்த்தால் அறியப்படும். என்னை? "மஹாபாக, "நினது வசநத்தைச் செய்கின்றேன். ஈண்டுச் சமுசயமில்லை. ஆகாயத்தினின்றும் விழுகின்ற எனது வீழ்ச்சி வேகம் தரிக்கத்தக்கதன்று. நிருப, விபுதசிரேட்டன் நீலகண்டனாகிய மகேசுவரனைத் தவிர மற்றெவனும் மூன்றுலகங்களினும் தரித்தற்கு வலியனல்லன்" என்றதனாலெனக. ராமாயணத்தும் அவனை நோக்கிப் பிரமா உரைத்த வசத்தால் அறியப்படும். என்னை? "அரச, கங்கையினது பதநத்தைப் பிருதிவி தாங்கவல்லதன்று. வீர, அவளைத் தரித்தற்குச் சூலியின்வேறாவோனைக் காண்கின்றிலன்" என்றதனாலெனக. பாகவதத்தும் "விழுகின்ற எனது வேகத்தைத் தரித்தற்குப் பூமியில் எவனுமில்லையேல், அரச, பூமியைப் பிளந்து ரசாதலத்தைச் செல்லுவேன்" என்று கேட்ட கங்கையை நோக்கிப் பகீரதனுரைத்த வசந்த்தாலும் அறியப்படும்: என்னை? "தந்துக்களில் சாடிபோல எவனிடத்தில் ஓதம் புரோதமாகிய இந்த விசுவம் நிலைபெறும் சரீரிகளுக்கு ஆன்மாவாகிய அந்த ருத்திரன் நினது வேகத்தைத் தரிப்பன்" என்றதனாலெனக.

# பிரமதருக்கஸ்தவம்

இந்தக் கங்காதாரணந்தான் கேவலம் பகீரதனது பிதாமகர்களை உத்தாரணஞ் செய்தற்பொருட்டன்று. மற்றுக் கங்காவேகத்தால் பூமி பிளக்கப்படுத்தலைப் பரிகரித்தலினால் எல்லார்க்கு முபகாரகமாயதும் அகத்தியனாற் பாநம் பண்ணப் பட்டதுமாகிய சமுத்திரத்தினது பரிபூரணத்தினால் சகத்தைக் காத்தற்பொருட்டு ந்தான் என்று பாரதத்தில் இனிதுரைக்கப்பட்டது. என்னை? ஆண்டு ஆரண்ணி. பருவத்தில் அகத்தியனாற் பாகஞ்செய்யப்பட்டதும் லோகபாவகத்தன்மையால் எல்லார்க்கும் உபகாரகமுமாகிய சமுத்திரத்தினது பரிபூரணத்திற்கு உபாயம் வினாவும் பொருட்டுத் தன்பால் வந்த தேவர்களை நோக்கிப் 'பகீரதன் தனது பிதா மகர்களை உத்தாரணம்பண்ணும் பொருட்டுக் கங்கையை வருவிக்க விரும்புகின்றான். அவளால் சமுத்திரத்திற்குப் பரிபூரணமுளதாம். கவலையின்றி வதிக' என்று பிரமா சொல்லியமை விரித்துரைக்கப்பட்டமையாலென்க. ஆதலால் கங்காதாரணம் அந்நியரால் முடியத்தக்கதன்றென உலகைப் பாதுகாக்கும்பொருட்டே சிவபிரான் அதனைச் செய்தான், அதுவன்றிக் கங்கை தனக்கும் பாவநி என்று கருதிச் செய்தானல்லன் என்பது தேற்றமாயிற்று. எப்படிக் காளகூடவிடம் மதுரமென்றுண்ணப்பட்டதாகாது மற்று உலகைப் பாதுகாக்கும் பொருட்டென்பதோ அப்படியே இக்கங்காதாரணமுமென ஈண்டுத் திருட்டாந்தமுறையிற் சம்பிரதி பந்தமாயது காளகூடபதோதாகரணமென்க. அதுதான் உலகைப் பாதுகாக்கும் பொருட்டென்பது சிவபுராணாதிகளிற் பிரசித்தமன்றே! பாகவதத்தும் அவ்வாறே சொல்லப்பட்டது. ஆண்டுக் காளகூடவிடம் வெளிப்பட்ட அநந்தரம் "அது உக்கிரவீரியத்தது, திசை திசைகளில் மேலும் கீழும் பரம்புவது, மேலெழுவது, தாங்கலாற்றாத வீரியத்தது. பிரசைகள் தலைவர்களோடியைந்தோர் பயந்தோர்களாய்க் காக்கப்படாதோர்களாய்ச் சதாசிவனைச் சரணமாக ஓடினார்கள்" என்று சொல்லி, அதன்பின், மூவர்க்கு முதலாய் முக்குணமுங்கடந்த சிவாபிதாநபரப்பிரமரூப்பரமான்மதத்துவவியல் பின்வைத்துக் கைலாசவாசியாய்ச் சிவ்விபூதிவிசேடமாயுள்ள ஸ்ரீகண்ட ருத்திரனை அவன். கருணை பாலிக்கவேண்டிப் பிரசாபதிகளாற் செய்யப்பட்ட தோத்திரங்களால் காளகூடத்தை ஒடுக்குதலாகிய இது பிரமாதிகளுக்கும் அசாத்தியம் ஆதலால் நின்னொருவனையே நாமெல்லாம் சரணம் புகுந்தோம் என்றுரைத்தார்களென்பதைத் தெரிவிக்கும் பொருட்டுக்" கிரித்திர, எவனுக்கு ரஜசு தமசு சத்துவமில்லை. எது பேதங்கடந்த பிரமம் (அப்படிப்பட்ட) நினது பரஞ்சோதி அகிலலோகபாலவிரிஞ்சிவைகுண்டசுரேந்திரர்களால் அடையத் தக்கதன்று" என்று சொல்லப்பட்டது. ஈண்டுப் பேதங்கடந்ததென்று சொல்லியவிதனால் குணவிசேடோபாதிகமாயுள்ளது பிரபவிட்டுணுருத்திரபோரூபம் அவரது சமட்டிரூபம் பரமசிவான்மகமென்னும்யல்புணர்த்தப்பட்டது. ஈண்டுக்கூறிய முறையால் சிவபிரான் கங்கையைப் பாவநி என்று கருதித் தரித்தானென்று பரபக்கவாலீசர் கூறுமது அறிஞரவைக்களத்தெட்டுணையும் பொருந்தாமை துணியப்படும். இன்னும் வெண்ணீற்றை அங்கராகமென்று தான் வெற்றெலும்பைப் பன்றிக்கொம்பைச் சிரமாலையை ஆமையோட்டைச் சர்ப்பத்தை ஆபரணமென்று தான் புலித்தோலை ஆடை என்றுதான் இன்னுமிவைபோல்வன வற்றை அவ்வவ் வியல்பின வாகக்கருதித்தான் தரித்தான்கொல்லோ சிவபிரானென்று இவற்றை உற்றுணருமுறுதியில்லார்க்கு என்ன சொல்லியும் பயனின்றென்க. இவையெல்லாம் எம்பெருமானுக்கு வைராக்கிய சிந்நங்களும் அருட்குறிகளுமென்று உண்மை

நூல்கள் முழங்குமென்க. இதனால் கங்காதாரணம் பாவகத்துவம் வேண்டிச் செய்யப்பட்டதென்று சிவபிரானுக்கிழுக்குரைப்பார் கூற்றை மறுத்து அது லோகோப காரத்தின் பொருட்டு நிகழ்ந்ததென்பதுணர்த்தப் பட்டது. அங்ஙனமாயினும் சிவபிரானால் தரிக்கப்பட்டதென்றுரைத்த கங்கை விண்டுபதத் தினின்றும் போந்த தெனக்கோடல் சாலுமென்பாரை நோக்கி அதனை மறுத்தற் செழுந்தது வருஞ் செய்யுளென்பது. (35)

**கரியுரிபோர்த்தோய்விண்டுதன்காலிற்கழிந்திடுகங்கையென்றதுதான்**
**சிரமதினின்னாற்றரிக்கப்பட்டிலதேதீர்த்தமற்றியாதுகொலென்னிற்**
**பரசிவபிரசாதநபரனாயபகீரதற்கருவரமளித்துப்**
**பிரமலோகத்தின்விழுந்ததாமதுவேபிஞ்ஞகாபிறைமுடித்தவனே.** **36**

(எ-து) கரியுரி போர்த்த கண்ணுதன் முதல்வன் விண்டுவின்காலிற் கழிந்த கங்கையைச் சிரமிசையேற்றானென்று கூச்சலிமென்னோர் சிவனை வழிபட்டுப் பிரீதி செய்தலின் மேம்பாடுடைய பகீரதற்களித்தபெருவரத்தானே பிரமலோகத் தினின்றும் விழுந்த ஹைமவதியைத் தரித்தான் சிவபிரானென்று வழங்கும் புராணவி திகாசாதிபெருவழக்கை இதுகாறும் கேட்டிலர் போலும். அவரறிவவ் வளவினதே ஒன்றிருக்க மற்றொன்றுதேடி மாறுபடக்கூறுமவர தியற்கையுமத் தகையதே. அவர் எவருரைத்தும் தேறுநரல்லராதலின் எம்பிரானுக்கது பற்றிவரு மிழுக்கொரு சிறிதுமில்லை யென்பதாம்.

கங்கைதானிரண்டுவகைப்படும். ஒன்று இமவானுக்குப் புத்திரியாயிருந்து பிரமலோகத்திற் பெருகுவது, அது ஓரமிசமாத்திரத்தாற் பிரமலோகத்தினின்றும் பூலோகத்திற் பகீரதனால் வருவிக்கப்பட்டது. மற்றொன்று திரிவிக்கிரமாவதார மெடுத்த விண்டுவினது ஊர்த்துவலோகத்திற் சென்ற பாதத்தினின்றும் தோற்றிய தாய்க் கீழே விழுந்து ஒரமிசமாத்திரத்தால் ஆகாசத்தில் வதிந்து தேவர்களுடைய கிரீடைக்குபயோகிநியாயது. மற்றொரு அமிசத்தால் மகாமேருவின் மேல் பிரமபுரியினின்றும் நான்கு திக்குக்களிலும் பாய்ந்து வாயுவினால் நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு விழுந்து கீழைச்சமுத்திர முதலியனவற்றிற் பிரவேசித்தது. அங்ஙனமன்றே! வாமாபுராணத்தில் "சுவேதாங்கி தாமரைக் கண்ணுடையாள் நீலகுஞ்சிதமாகிய அளகமுடையாள் சுவேதமாலை வஸ்திரங்களைத் தரித்தவள் குடிலையெனப்படுவாள் மற்றொருத்தி" என்று உமைக்கு முன்வந்தவளாகிய, ஹிமவான்மகளை எடுத்துச்சொல்லப்பட்டது. "திவாகரர்களாலுமுருத்திரர்களாலும் வசுக்களாலும் மெல்லியவாகிய சந்திரப் பிரபையுடைய குடிலை பிரமலோகத்தை அடைவிக்கப்பட்டாள். அதன்பின் தேவர்களெல்லாரும், பெரியோய், தாரகனைக் கொல்பவன் பிரியனாகிய புத்திரனைத் தோற்றுவிப்பளோ சொல்லுக என்று கேட்டார்கள். அதன் பின் மெல்லியலாகிய இவள் சிவனது வீரியத்தைத் தரிப்பதற்கு வலியளல்லள். இவள் வராகி விடப்படட்டும் என்று சுரபதி சொன்னான். நாரதர் அதன்பின் குடிலை. கோபமுடையளாய்ப் பிரமாவை நோக்கித் தரித்தற்கரிய சிவனது வீரியத்தை நான் எப்படித்தாங்கல் வேண்டுகின்றேன், பகவ, அப்படியே முயல்கின்றேன். சத்துக்களு ளுயர்ந்தோய், அப்படியே கேள், தபிக்கின்ற தபசினால் சநார்த்தனை வழிபட்டு

# பிரமதருக்கஸ்தவம்

அரனது அந்த வீரியத்தை நான் எப்படித் தரித்தல் வேண்டுகின்றேன், பிதாமக, தேவ, அப்படியே செய்கின்றேன். என்னாற் சொல்லப்பட்டது சத்தியம் சத்தியம் என்று சொன்னாள். அதன் பின், மகாமுநியே, பிதாமகன் பகவான் சர்வேசனாகிய அந்தப் பிரமா கோபமுடையனாய்ப் பாபையாகிய குடிலாய், எதனால் எனது வசந்த்தில் நீ நிற்கவில்லை அதனால் எனது சாபத்தினால் ததிக்கப்பட்டவளாய் நீ இப்போது சலமாகுதி என்று அதிதாருணையாகிய குடிலையை நோக்கிக் கட்டளையிட்டான் என்றிந்தப்பிரகாரம் பிரமாவினாற் சபிக்கப்பட்ட ஹிமவான்மகள் சல்ரூபையாய் நதியாய்ப் பிரமலோகத்தை முழுகுவித்தாள். முனியே, மேலெழுந்த சலரூபையாகிய அவளைப் பிதாமகன் பார்த்து இருக்கு சாமும் அதர்வம் யசுர்களாய் வாக்கு மயங்களாகிய பந்தங்களால் திடமாகக்கட்டினான். பெரியோய், சலமயியாகிய அந்தத்திரிகந்நிகை அப்படியே கட்டுண்டு நிலைபெற்றாள். பிரமாவினது விமல மாகிய சடைகளைப் பாவநஞ்செய்பவளாய்" என்பது வாமாபுராணவசநம். ஈண்டுக் குடிலையென்று நாமாந்தரத்தாற் சொல்லப்பட்டாள். கங்கையேயென்க. என்னை? நதிகளுள் சிரேட்டையாகிய கங்கையும் உமாதேவியுமென்னுமிவர்கள் சைலராசனது புத்திரிகள், உலகத்தால் நமஸ்கரிக்கப்படுவோர்" என்று ராமாயணத்தில் உமைக்கு முன்வந்தாளாகிய ஹிமவான்மகளுக்குக் குடிலையென்னும் பெயர் கிளக்கவேண்டிய விடத்துக் கங்கையென்னும் பெயர் காணப்படுதலானும் "பின் சுரர்களெல்லாரும் தேவகாரிய முடிக்குமிச்சையால் முன்வந்தாளும் திரிபதகையும் நதியுமாகிய கங்கையை சைலேந்திரனை நோக்கி வரித்தார்கள். ஹிமவாந்லோகபாவநியாகிய புத்திரிபைத் தருமத்தால் அளித்தான். மும்மையுலகிற்குமிதஞ்செய்பவர்களாகிய தேவர்கள் அதன்பின் மும்மையுலகிற்குமிதஞ்செய்யுமிச்சையினால் தான் விரும்பிய வழியிற் செல்பவளாகிய கங்கையை வாங்கிக் கிருதார்த்தமாகிய மநசோடு அந்தக் கங்கையை எடுத்துச்சென்றார்கள்" என்று உதாகரித்த வாமந புராணத்திற் சொல்லப்பட்ட குடிலை விருத்தாந்தத்தைக் கங்கையின்பாற்றானே ராமாயணத்தில் சுருக்கிப் பிரதிபாதித்திருத்தலானுமென்க. ஈண்டுத் தேவகாரியம் முடிக்குமிச்சை யினாலென்றும் வரித்தார்களென்றும் தருமத்தினாலென்றும் சொல்லியதனால் தாரகாதிகளை வதைத்தல் முதலிய தேவகாரிய முடிக்குமிச்சையினால் தேவசேநா பதியினது உற்பத்தியின் பொருட்டுச் சிவபிரானுக்குப் பாரியாதல்வேண்டியே அந்தக்கந்நியையைச் சிவபிரானுக்குத் தர்மப்பிரசையின்பொருட்டு வரிக்கின்றோ மென்று வாசம்பந்திகளாற் செய்யற்பாலதாகிய கந்நியாவரணப் பிரகாரத்தால் வரித்தார்கள். மலையரசனும் கங்கியாதாந தருமமாகக் கொண்டளித்தானென்று பொருள் பெறப்படுகின்றது. அதனால் வாமாபுராணத்திற் சொல்லப்பட்ட பொருளினது சாயாபத்தி காணப்படுதலால் அவளைப் பெற்றுக்கொண்டு போய்ப் பிரமாவுக்குச் சமீபத்தில் சேர்த்தார்களென்று பொருள் கொள்ளத்தக்கது. அதன்பின் பிரமசாபத்தால் நதிரூபம் வந்தமை 'திரிபதகை' 'நதி' என்றவிதனால் குறிப்பிக்கப்பட்டது. இந்த விசேடணமோ கங்கையினது பழைய வடிவத்தை விளக்கவெழுந்ததன்று. என்னை? "பகவ, திரிபதகையும் நதியுமாகிய கங்கையைக் கேட்பான் விரும்புகின்றேன். அவள் எப்படி மூவுலகத்தையும் ஆக்கிரமித்துச் சமுத்திரத்தையடைந்தாள்" என்று ரகுநாதன் கேட்பத் திரிபதகாரூபமடைந்தமையை விரித்துரைத்தற்கு உபோற்காதமா மாத்திரை க்கே அவளது கதை விசுவாமித்திரனால் எடுத்துரைக்கப்பட்டது பிறிதில்லையாக லானும் அதுவன்றி முந்தித்தானே திரிபதகாரூபமவட்கிருந்ததுண்டெனின்

# பிரமதருக்கஸ்தவம்

இப்பொழுது தேவர்களால் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டாளென்றுரைத்தமைக்கட் பொருந்தாமைவருதலானுமென்க. மற்று இனிவரற்பாலதாகிய 'சம்ஜ்ஞைபைப் பற்றி யெழுந்தது இந்த விசேடணமென்பது தெளிவு. “சைலேந்திரன் ஹிமவாநென்பான் தாதுக்களுக்கெல்லாம் ஆகரம் மகாந் அவனுக்கு உலகத்தில் ரூபத்தால் ஒப்பில்லாத கந்நியரிருவருளர்” என்னும் உபக்கிரமத்தால் அதிசௌந்தரியசாலித்தன்மை பற்றிச் சிவவீரியத்தைத் தரிக்கும் வலியுடையளெனநினைந்து கந்நியை வடிவினளாகவே பிரமலோகத்தில் கொண்டு போய்ச் சேர்க்கப்பட்டாளென்னும் பொருள் இனிது கொள்ளத்தக்கதாகின்றது. ஆகவே திரிபதகையென்பது போலவே "நதி" என்றுரைத்த இதுவும் இனிவரற்பாலதாகிய சம்ஜ்ஞையைப் பற்றியெழுந்ததென்க. நதிரூபம் வாமந புராணத்திற் சொல்லப்பட்ட பிரமசாபத்தாலாயது. திரிபதகாரூபம் நதி ரூபத்தை யடைந்து பிரமலோகத்திலிருந்தவளாகிய அவளே பகீரதனது அநுரோதத்தால் பூமியி லிறங்கியமையானும் பாதலத்திற் பிரவேசித்தமையானுமாயது என்ப்து உட்கோளாக வைத்துத் திரிபதகாரூபம் வந்ததெங்ஙனமென்று அதுமாத்திரமே கேட்கப்பட்ட மையால் அதுதான் ஒன்பது சருக்கங்களால் விரித்துரைக்கப்பட்டது. நதிரூபத்தை யடைந்து பிரமலோகத்திருந்தமை கேட்கப்படாமையால் அது விரிக்கப்பட்டிலது என்பது முடிந்ததாகக்கொண்டு ஆண்டாண்டுக் குறிப்பிக்கப்பட்டது. வந்நியினால் சிவவீரியம் பாநஞ்செய்யப்பட்ட காலையில் சேநாநியினது உற்பத்தியையடையாத வர்களாய்ப் பிரமசமீபத்தில் தேவர்கள் சென்றார்களாக அவர்களை நோக்கி “எவளுக்கு உதாசநன் தேவசேநாபதியும் அரிந்தமனுமாகிய புத்திரனைப் பிறப்பிப்பான் சைலேந்திரன் மகளும் முன்வந்தாளும் ஆகாசகையுமாகிய இந்தக் கங்கை அந்தப் புத்திரனைத் தோற்றுவிப்பள். அது உமைக்கு உளப்பாடாக்நேரும். சமுசய்மில்லை” என்று பிரமாவுரைத்தவசந்த்தில் இந்த ஆகாசகையாகிய கங்கையென்று தனது உலகத்தைத்தானே அணுகிய ஆகாசச்செலவுடையவளாகக் கங்கை சுட்டிச் சொல்லப்பட்டாள் - என்பது யாது - பகீரதனால் கங்கையினது அவதாரத்தின் பொருட்டுப் பிரமாவை நோக்கித் தவஞ்செய்யப்பட்டது என்று சொல்லப்பட்டது யாது - ஆண்டு வரமளிக்கும் பொருட்டுப் பிரசந்தனாய் வந்த பிரமாவினால் ஹைமவதி ஹிமவானுக்கு மகள் முன்வந்தவள் இந்தக் கங்கையென்று சுட்டப்பட்டாள் என்பது யாது - இந்தலிங்கங்களால் நதிருபப்பிராப்தியும் பிரமலோகத்திருப்பும் கங்கைக்கு உண்டென்பது குறிப்பிக்கப்பட்டது. ஈண்டுக்கூறியவாற்றால் வாமநபுராணத்திற் சொல்லப்பட்ட குடிலை கங்கையே யென்பது ராமாயணத்தை அநுசரித்து உணரப்படுமென்பது பெறப்பட்டது. அல்லது உம் வாமநபுராணத்திற்றானே அக்கிரிமோபாக்கியாநத்தை அநுசரித்தும் இது உணரப்படும். முதலிற்றானே சிவவீரியத்தைப் பாநம்பண்ணிய வந்நியை யெடுத்துக்கொண்டு இவ்வாறு சொல்லப்பட்டது. "பெரியோய், நழுவிய தாகிய பிநாகியினது எந்த அந்தச் சுக்கிலம் அக்கிநியினால் பாநம் பண்ணப்பட்டது அதனால் உதாசநன் மந்தவீரியமுடையனாய் வருத்தத்தையடைந்தவனாயினான். அதன்பின் அந்த அக்கிநி பிரமலோகத்திற்கு விரைந்து போனான். போனவன் அந்த அக்கிநி வழியில் குடிலாதேவியைக்கண்டான். அந்தக் குடிலையைக் கண்டு, வராநந முடையோய், இந்த வீரியம் தாங்கத்தக்கதன்று. மகேசுவரனால் விடப்பட்டது. நான் தகிக்கப்படுகின்றேன். அதனால் விரும்பிக்கொள். இவன் உனக்குரிய புத்திரனாய்த் தோன்றுவான் என்று சொன்னான். இப்படி அக்கிநியினாற் சொல்லப்பட்ட மகாநதி

யானவள் சிரித்துத் தனது சரீரத்தை உந்நதமாகச் செய்து, அறிஞ, ஜலத்தில் விடு என்று இப்படிச் சொன்னாள். அதன்பின் விடப்பட்டதாகிய சிவனது அந்த வீரியத்தைத் தேவி பூரித்தாள். பகவானாகிய அந்த அக்கிநியும் காமசாரியாய்ச் சென்றான். ஐயாயிர வருஷமுடிவில் அக்கிநிக்கொத்தவளாகிய குடிலை கர்ப்பத்தைத் தரித்தவ ளாய் அப்போது பிரமாவினது இடத்திற்கு வந்தாள். மகாகீர்த்திமானாகிய பிரமா அவளைப்பார்த்து அவள் கருப்பவதியாதலைக் கண்டு உனக்கு இந்தக் கர்ப்பம் எவராலுண்டாக்கப்பட்டது என்று கேட்டான். அவளும் சாங்கரமாகிய எந்த அந்தச் சுக்கிலம் வந்நியினால் பாநம்பண்ணப்பட்டது, சத்தம, வலியிலனாகிய அவனால் இப்பொழுது அது என்பால் விடப்பட்டிருக்கின்றது. பிதாமக, ஐயாயிரம் வருடம் தரித்த எனக்கு எதுவோ கர்ப்பத்திற்குரிய காலமாயிருக்கிறது, பிரசவிக்கப் படவில்லையென்று சொன்னாள். பகவான் அதனைக் கேட்டு நீ உதயகிரிக்குச் செல்லு. அங்கே நூறுயோசநை கொண்ட மகத்தாகிய ரௌத்திரமாகிய சரவண மிருக்கின்றது. மலையின்றாழ்வரையிலுள்ள விஸ்தீரணமாகிய அவ்விடத்து இதனை விடக்கடவாய். நல்ல நிதம்பிநீ, பின் பதினாயிரவருட முடிவில் பாலன் உண்டாவன் என்று சொன்னான். பிரமாவினது. வாக்கியத்தை அந்தக் குடிலை கேட்டு மலையை அடைந்தாள். அடைந்து, மகாமுநியே. சுகமாகவே கருப்பத்தை விட்டாள். அந்தப் பாலனை விட்டுப் பிரமசாப்த்தினால் சலவடிவினளாய் வந்த அந்தக் குடிலையாகிய பதிவிரதை பிரமாவை நோக்கி விரைந்து வந்தாள்" என. இப்படியே வந்நியினால் விடப்பட்ட சிவவீரியத்தைத் தரித்தமை சொல்லப்பட்டமை யினாலும் குடிலை கங்கையென்றே நிச்சயிக்கப்பட்டது. என்னை? ராமாயணத்தும் மற்றைப்புராணங்களிலும் கங்கையிற்றானே வந்நியினால் சிவவீரியம் விடப்பட்ட தென்று ஐககண்டியமாகப் பிரதிபாதிக்கப்படுதலாலென்க. இங்ஙனம் கூறியவாற்றால் முன் ஹைமவதியாகிய கங்கை பிரமசாபத்தால் நதித்துவத்தையடைந்து பகீரதனது அநுரோகத்தால் பூமியையும் பாதலத்தையுஞ் சேர்ந்தவளாய்த் திரிபதகையாயினா ளென்பது பிரமாணங்கொண்டு உபபாதநம் செய்யப்பட்டது. மற்று விஷ்ணுபதியாகிய கங்கையோவெனின் ஓரிடத்து மேலே பரப்பப்பட்ட திரிவிக்கிரமசரணாம்புயத்தினது சம்க்ஷாளநத்தின் பொருட்டுச் சத்தியலோகத்திருந்த பிரமகமண்டலுவினின்றும் வெளிவந்த நீர்வடிவினதாகச் சொல்லப்படும். மற்றோரிடத்து அந்தச் சரணத்தினால் போதிக்கப்பட்ட மேலண்டத்துளையினின்றும் வெளிவந்த புறத்ததாகிய நீர் வடிவினதாகப் பிரதிபாதிக்கப்பட்டது. வாமநபுராணத்தில் “பரந்த விஷ்ணு பாதத்தினால் கடாகம் பேதிக்கப்பட்ட காலையில் விஷ்ணுபாதாந்தமாய் அம்பரமாகிய முழையினின்றும் கோபமுடையவளாய் விழுந்தாள். பின் அதனால் விஷ்ணுபதியென்னும் இப்பெயரால் கியாதியுள்ளதாயிற்று. முநியே" யென்று சொல்லப்பட்டது. ஆண்டு மேலண்டகபாலபரியந்தம் பரம்பிய விஷ்ணுபாதாக் கிரத்தால் பேதிக்கப்பட்டு ஆகுலித்ததாகிய பிரமலோகத்தில் பெருகுவதாகிய குடிலா ஜலபை சொல்லப்பட்டாள். எல்லாவற்றது முபசங்காரத்தில் மூன்று விதமாகிய ஜலரூபையாக இவள் முடிபெய்துகின்றாள். விஷ்ணுபாதத்தில் நின்று வெளி வந்த இவளோவெனின் மேருவின் மேல் விழுந்து அப்பொழுது தானே சமுத்திரத்தை யடைந்தாளென்று பிரதிபாதிக்கப்பட்டது. என்னை? மகாபாரதத்தில் சபாபருவத்தில் "அந்தத் துளையினின்றும் சொரிந்தவளாய் ஆண்டுப்பாதத்தில் நின்று நழுவினவளாய்ப் பின் சமுசாரசாகரத்தைப் பாவநஞ் செய்பவளாகிய நதி சீக்கிரம்

சாகரத்தை அடைந்தாள்" என்று சொல்லப்பட்டமையானென்க. கூர்மபுராணத்தில் அந்த விஷ்ணுபதி வியோமகங்கையானாளென்று சொல்லப்பட்டது. என்னை? "பின் அண்டப்பிளவினின்றும் சீதளமும் புண்ணியச் செயலினர்களால் சேவிக்கப்படுவது மாகிய அந்த மகாஜலம் விழுந்தது. அப்பொழுது வியோமத்தின்கண் நிலை பெறுபவளாகிய கங்கையென்று பிரமாவினாற் சொல்லப்பட்டவளாய் நதிகளுட் சிறந்தாள் ஒழுகுவள்" என்று வசநமிருத்தலாலென்க. ஈண்டுத் தேவர்களது கிரீடை யின் பொருட்டு ஓரமிசத்தால் ஆகாசத்திலிருப்பதாக எஞ்சியபாகம் சாகரத்தில் விழுந்ததென்பது இரண்டனது அநுரோதத்தால் யோசிக்கத்தக்கது. மகாபாரதத்தில் சாகரப்பிரவேசமும் கூர்மபுராணத்தில் வியோமத்திருப்பும் சொல்லியதற்குப் பொருத்தமுண்மை போதரவேண்டியமையாலென்க. இதுகாறுங் கூறியவாற்றால் ஹைமவதியாகிய கங்கை எவள் அவளே பகீரதனுக்கு அநுக்கிரசஞ்செய்ய வேண்டிச் சிவபிரானால் சிரசிற்றரிக்கப்பட்டாள், விஷ்ணுபதியல்லள் என்பது பெறப்பட்டமை யால் இஃதுணராத வாலிசர் சங்கைக்கு ஈண்டு அவகாசமில்லையென்க. அற்றேல், சிவனாற் சிரசில் தரிக்கப்பட்டாள் விஷ்ணுபதியென்பதும் மற்றைப் மற்றை புராணவசநங்களாற்றானே உணரப்படுமன்றே? அப்படியே விஷ்ணுபுராணத்திற் படிக்கப்பட்டது. என்னை? "இருடிகளுக்கு மேலே உத்தரத்தில் துருவன் யாண்டு நியமிக்கப்பட்டிருப்பன் இது திவ்வியம் மூன்றாவது வியோமத்தில் விளங்குவதாகிய விஷ்ணுபதம்" என்று தொடங்கிச் சொல்லப்பட்டது. "பின், பெரியோய், சர்வபாபங் களையும் தொலைப்பவள் தெய்வப்பெண்களது அங்கங்களிலுள்ள அநுலேபநத்தால் பிசங்கநிறமுடையவளாகிய கங்காநதி விண்டுவினது வாமபாதாம் புசத்தினது அங்குட்டநகத்தினின்றும் பெருகி வெளிவந்தவளாய்ப் பிரவகிக்கின்றாள். எவளை இராப்பகல் பக்தியினால் சிரசில் நிச்சயமாகத் தரிக்கின்றான். அதனால் எதனது, நீரில் திரைவரிசைகளால் வகிக்கப்பட்ட சடையையுடையர்களாய்ப் பிராணாயாம பராயணர்களாய்ச் சத்தவிருடிகள் நிற்கின்றார்கள், எவளது என்றுமுள்ளனவாகிய நீர்வெள்ளங்களால் இந்தச் சந்திரமண்டலம் நனைக்கப்படுவதாய் இரவுகளில் மேலும் அதிகம் அதிகமாகக் காந்தியை வகிக்கின்றது, உந்நதமாகிய சந்திரமண்டலத் தினின்றும் வெளிவந்தாளாய் மேருபிருட்டத்தில் விழுந்து சகத்தினது பாவநத்தின் பொருட்டு எவள் நாற்றிசைகளினும் செல்லுவள், சிதை, அயை, அளகநந்தை, சதுர்ப்பத்திரை என்றிந்த நாலுபேதங்களையுடையளாயிருப்பவள் ஒருத்தியே திக்குபேதங்களிற் செல்லுமிலக்கணமுற்ற நாலு பேதங் களையுடையவளா யிருப்பவள், எவளது அளகநந்தையென்னும் தக்கிணபேதத்தைச் சிவனும் நூறுநூறு வருடங்களாகச் சிரசின் கண்ணே பிரீதியினால்தரித்தான்; எவள் சங்கரமாகிய சம்புவினது சடாகலாபத்தினின்றும் வெளிவந்து பின் பாபர்களாகிய சசரபுத்திரர்களை நனைத்துச் சுவர்க்கத்தில் சேர்த்தாள்" என்பது விஷ்ணுபுராணவசநம். மார்க்கண்டேய புராணத்தும் "துருவனுக்கு ஆதாரமும் சகத்துக்குப் பிறப்பிடமுமாகிய நாராயணனது பதம் யாது, அதனினின்றும் திரிபதகாமிநியாகிய எந்தக் கங்காதேவி ஒழுகுவள், அவள் அமிர்தயோநி சலங்களுக்கு ஆதாரமாகிய சோமன்பாற்புகுந்து, உலாபாவநியாய்ச் சூரியகிரணசந்ததியிலிருப்பவளாய், மேரு பிருட்டத்தில் விழுந்தாள். அதினின்றும் நான்கு பிரகாரமாகச் சென்றாள்" என்று தொடங்கிச் சிதைக்குக் கீழைச்சமுத்திரத்தடைந்தமை சொல்லி அப்படியே தக்கிணையாகிய அளகநந்தையென்பாள் கந்தமாநத்தில் தேவருந்தநமாகிய மேரு பாதவமென்னும்

# பிரமதருக்கஸ்தவம்

நந்தநத்தையடைந்து வாவிகளுளுயர்ந்த மாநசத்தை மகாவேகத்தோடு முழுகுவித்து மாநசத்தினின்றும் ரம்மியாத் திரிசிகரமாகிய சைலராஜனையடைந்து அதினின்றும் தக்கிணத்தின்கணுள்ளனவாக எவைகள் கிரமமாகச் சொல்லப்படுவன அந்தப் பருப்பதங்களையெல்லாம் முழுகுவித்து ஹிமவாநாகிய மகாகிரியை அடைந்தாள். இடபக்கொடியுடையனாகிய சம்பு அங்கே அவளைத் தரித்தான். பகீரதனால் உபவாசங்களினாலும் துதியினாலும் ஆராதிக்கப்பட்டவனாகிய விபு விட்டான். அங்கே சிவனால் விடப்பட்டவள் ஏழுபிரகாரமாக லவணசமுத்திரத்தில் புகுந்தாள். அப்போது அந்தமகாநதி கிழக்கே மூன்றுவிதமாகப் புகுந்தாள். பகீரதனது ரதத்தின் பின்னே ஒரு பிரவாகத்தினால் தக்கிணையாய்" என்று சொல்லப்பட்டது. ஸ்காந்தத்திற் கேதாரகண்டத்தில் "பகவான், அஜனாகிய வாமநன் சங்கற்பத்தி னாற்றானே வளர்ந்தான். தலைவனாகிய விஷ்ணுவினால் ஓர்பாதத்தால் நிலவுலகம் வியாபிக்கப்பட்டது. அந்த மகான்மாவினால் சுவர்க்கலோகமும் இரண்டாவது பாதத்தால் வியாபிக்கப்பட்டது. சத்தியலோகத்திலிருக்கும் பரமேட்டியாகிய பிரமாவினாலே கமண்டலுவினின்றும் வந்த நீரினால் அலம்பப்பட்டபோது எவளால் மூன்றுலகமும் பவித்திரமாக்கப்பட்டது எவளால் சகரர்களெல்லாம் எழுப்பப்பட்டார்கள் எவளால் அப்போது பகீரதனால் சம்புவினது கபர்த்தமானது நிறைக்கப்பட்டது பாபத்தைப் போக்குபவள் மங்களங்களுள் மங்களையாகிய அவள் அவனது பாதத்திற் சேர்ந்த நீரினின்றும் தோன்றினாளாயினள்" என்று சொல்லப்பட்டது. மகாபாரதத்தில் "விஷ்ணுபாதத்தினின்றும் சிஞ்சுமாரத்தினின்றும் துருவனினின்றும் சோமனினின்றும் சூரியனினின்றும் மேருவடிவினின்றும் சிவசிரசினின்றும் ஹிமயமலையை யடைந்தாள்" என்று சொல்லப்பட்டது. இவற்றால் சிவபிரானால் தரிக்கப்பட்டது விண்டுபதியாகிய கங்கையேயென்று சொல்லப்பட்டதன்றோவெனின், நன்று சொன்னாய், வாமந புராண ராமாயண வசந சுவாரசியாநு ரோதத்தால் பிரமலோகத்திருந்த ஐமவதியாகிய கங்கையே பகீரதனால் வருவித்துச் சிவபிரானால் தரிக்கப்பட்டாள் என்பது போந்தது. விண்டுபதத் தினின்றும் வந்த அவள் ஐமவதிநீரொடு கலப்புடையவளாயினாள் என்னும் இத்துணை மாத்திரையே அவலம்பித்து அவள் பால் அபேதோபசாரத்தால் விண்டுபதி சிவபிரானால் தரிக்கப்பட்டுச் சாகரர்களையும் பரிசுத்தி செய்தாள் என்று மேற்கூறிய விண்டு புராண வசந முதலியன யோசிக்கற்பாலனவென்க. என்று கொள்ளாக்கால் திரிவிக்கிரமாவதாரகாலத்திற்றானே மேருவில் விழுந்து பூமியிற்பிரவகிப்பவளாய் விண்டு பாதியிருக்கவும் பகீரதனால் ஆகாயத்தினின்றும் கங்காநயநம் செய்யப்பட்டதென்று விண்டு புராணத்திற்றானே சொல்லியது பொருந்துமாறெ ங்ஙனமென்பது. இனி, அங்ஙனமன்று, திரிவிக்கிரமாவதார காலத்தில் வெளிவந்த விண்டுபதி துருவலோகத்திற்றானே யிருந்தாள், அவள் பகீரதனது வழிபாட்டினால் மேருவில் விழுந்து தக்கிணதிக்கிற் பிரவகித்துச் சிவனாற்றரிக்கப்பட்டு இமவானையடைந்து எழுபிரகாரமாகப் பெருகினாள் என்று கொள்ளத்தகும். பிரமசேவையின் பொருட்டு விண்டுபதி பிரமலோகத்தில் வந்த காலத்தில் அந்த அணிமை பற்றியே இந்த ஆகாசகையாகிய கங்கை என்று பிரமாவினால் இவளென்று சுட்டப்பட்டாளெனக்கொள்ளுதல் தக்கதென்றும் சிறிது அமிசத்தைவிட்டு ராமாயணத்தில் கதை வருணிக்கப்பட்டதென்றும் கொள்ளலாகாதோ வெனின், ஆகாது, என்னை? "அந்த அண்டத்துளையினின்றுஞ் சொரிந்து" என்று மேலே

# பிரமதருக்கஸ்தவம்

உதாகரித்த பாரதசுலோகத்தில் விண்டுபதத்தினின்றும் வெளிவந்த அநந்தரமே விண்டுபதி சீக்கிரம் சாகரத்தில் பிரவேசித்தாளென்று சொல்லப்பட்டமையால் பகீரதகாலபரியந்தம் துருவலோகத்தில் அவளிருந்தாளென்பது பொருந்தாமையா னென்க. அங்ஙனமன்று, அப்பொழுது ஒரு அமிசத்தினால் பூமியில் விழுந்து சாகரத்திற் பிரவேசித்தாள் பூலோகத்திற் பிரவகித்திருந்ததில்லை அதன்பின் ஆகாயத் தினின்றும் பகீரதனால் வருவிக்கப்பட்டாள் என்று கொள்ளலாமெனின், அதுவும் பொருந்தாது, பகீரதன்பொருட்டுக் கீழ்வந்து மேருவில் விழுந்தாள், ஆண்டு விழுந்து தானாகவே திசைகளிற் பிரவகித்தாள் என்று சொன்ன கங்கையினது பதநவேகத்தைத் தடுக்கும் பொருட்டுப் பகீரதன் சிவபெருமானை வழிபட வேண்டியதில்லை யாகலினென்க. சிவசிரசிற்றானே நேரேவிழுந்ததென்று கொள்ளலாமெனின் மேருவில் விழுந்து தக்கிணதிக்கில் சிவனாற்றரிக் கப்பட்டாள் என்னும் விண்டு புராண முதலியவற்றிற்குப் பொருத்தமின்மை போதருதலால் அதுவும் பொருந்தாதென்பது. எமது கொள்கையில் மேருவில் விழுந்ததென்றது திரிவிக்கிரமாவதாரகாலவிருத்தாந்த விடயத்தைச் சுட்டியது. அதனால் மேருவில் விழுந்தவள் அதுதொட்டு இன்று பரியந்தம் பூமியிற் பிரவகிப்பவளாயே யிருக்கின்றாள் என்பது. "சகத்தினது பாவநத்தின்பொருட்டு அவள் நாலு திசைக ளினுஞ் செல்லும்" என்றுதாகரிக்கப்பட்ட விண்டுபுராண வசநத்தாலுணரப் படுமென்புழி அவள் ஈண்டேயிருக்கவும் ஆகாயத்தினின்றும் அவளது ஆநயநத்தின் பொருட்டு ஈண்டுப் பகீரதனால் யத்திநஞ் செய்யப்பட்டதன்கட் பொருத்தமின்மை போதருதலானென்க. அதனால் அதனது பொருத்தமுண்மை போதரும் பொருட்டுத் தான் இந்த ஆகாசகையாகிய கங்கை என்பது முதலிய ராமாயண வசநத்தில் சுவாரசியலாபத்தின் பொருட்டுத்தான் பிரமலோகத் திருந்த ஐமவதியே பகீரதனால் தவங்கள் செய்து வருவித்துச் சிவபிரானால் தரிக்கப்பட்டுச் சாகரர்களையும் பரிசுத்தி செய்தாள்; அவளிடத்துக்கொண்ட அபேதோபசாரத்தால் அவள் விருத்தாந்தமே விண்டுபதி பால்வைத்து விண்டுபுராண முதலியவற்றில் வருணிக்கப்படுமென்று கோடலே பொருத்தமென்பது. துருவலோகத்தினின்றும் விண்டுபதியே பகீரதனால் வருவிக்கப்பட்டாள் என்றுகொண்டவிடத்தும் திரிவிக்கிரமாவதாரகாலந்தொடுத்து மேருவில் விழுந்து பூமியில் பிரவகிப்பவளாகிய அவள்பால் சிவனாற்றரிக்கப் பட்டமை முதலிய அவ்விருத்தாந்த வருணநத்திற்கு அவ்வபேதோபசாரமூலகத்துவ கற்பகம் அவசியம் போதருதலானென்க. இதனுண்மை இன்னும் விரிப்பிற் பெருகும். ஈண்டுக்கூறியவாற்றாலும் பிறவாற்றாலும் சிவபிரானாற்றரிக்கப்பட்டது ஐமவதியெனக்கோடலே துணிபென்க. இதனால் லோகோபகாரத்தின் பொருட்டுச் சிவபிரானாற் செய்யப்பட்ட கங்காதாரணமும் விண் பதியினதேயாமென்று திரித்து “எதனது சௌசத்தின் வந்த நதிகளுட்சிறந்த தனுதகமும் சிரசிற்றரிக்கப்பட்டதுமாகிய தீர்த்தத்தினால் சிவன் சிவனானான். திபாதாவினது மநசில் மலசைலத்தைச் சேதிக்கும் வச்சிரமாகிய பகவானது சரணாரவிந்தத்தை நீடுதியாநிக்க” என்பது முதலிய ஐந்தாறக்கரக் கேள்வி மாத்திரத்தானே மகிழும் நாட்டு வழக்கமறியா ஓட்டை வாய்க்கூபமண்கேங்களது வெறும் புலம்பலுக்கு எவ்வளவுதானவகாச முளதாமென்று ஒதுக்கி இந்தத் தாரணந்தான் பகீரதனால் வழிபடப்பட்ட பிரமலோகத்துள்ள ஐமவதியாகிய கங்கையினதேயென்னுமிவ்வுண்மை தெற்றன விளக்கப்பட்டது. அற்றேல் அஃதங்ஙனமாகுக. விண்டுபதி புறப்பட்ட காலத்து அவள்

வரும் மார்க்கத் திருந்த ஐமவதி அவளிடைக் கலந்தாளாயினள். அதனால் பாவநி என்று அவள் சிவனாற் சிரசின் கண்ணே தரிக்கப்பட்டாள் என்று தான் கோடல் சாலாதோவெனின் அதனை மறுத்தற்கன்றே எழுந்தது வருஞ்செய்யுளென்பது. (36)

**அவளுநின்னருளாருருவினிற்போந்தாங்கையசாலப்பவித்திரையாய்ச்**
**சிவணினளதனானினதபிடேகதீர்த்தத்தோடொத்தனளென்றே**
**யெவர்சிவநினதுபதத்துறுவதனைச்சிரங்களினேற்குபசுரரா**
**மவர்தமாலாதரித்திடப்படுவளாயினளநந்தரமன்றே.** **37**

(எ-து.) அக்கங்கையும் அதிபரிசுத்தரூபத்திகாரியசிவதநுவினின்றும் போந்து அதனால் அதிபவித் திரையானாள் எனக்கருதியன்றோ அதன்பின் சிவாபிடேக திவ்வியதீர்த்தமாகக்கொண்டு சிவசரணத்துறுவனவற்றைச் சிரமேற்கொள்ளும் சுவர் லோகவாசிகளால் அக்கங்கை பெரிதுமன்பு செய்து பூசிக்கப்படுவாளாயினளென்பது ராமாயணத்தில் விசுவாமித்திர ராமசல்லாபாதிகளாற்றெரிந்தும் தேறவுடன்படாதார் விண்டு தான் வெளி வந்துரையாடினும் தேறுநரல்லரென்பதாம்.

ராமாயணத்தில் விசுவாமித்திரவசநம்: "ராம, சிவமாகிய சிவசிரசின்கண்ணே ஆகாயத்தினின்றும் விழுந்தாள். எவ்வாற்றானும் எவராலும் தரிக்க முடியாத அந்தக் கங்காதேவி சங்கரனைக் கிரகித்துக்கொண்டு பெருக்கினால் நான் பாதலத்திற் புகுவேன் என்று சிந்தித்தாள். அவளது கருவத்தை அரனும் முக்கண்ணனுமாகிய அந்தப் பகவான் அறிந்து கோபமுடையனாய்த் திரோபவித்தற்குத் திருவுளங் கொண்டான். ராம, அப்போது புண்ணிபையாகிய அவள் ஹிமவானுக்கு நிகராய்ச் சடாமண்டலமாகிய குகையையுடைத்தாய்ப் புண்ணியமாகிய அந்தச் சிவசிரசின்கண் விழுந்தாள்" என்பது முதலியனவாகச்சொல்லி "எவர்வள் சாபத்தினால் சுவர்க்கத்தி னின்றும் மண்ணுலகின் விழுந்தோர் அப்படிப்பட்ட தேவர்கள் இருடிகள் கந்தர்வர்கள் பூலோக வாசிகளாக அங்கே நீராடல் செய்து அவர்கள் கல்மஷம் நீங்கினோரா னார்கள். இனிது பிரகாசிக்கின்ற அந்த நீரினால் பாவந்தொலைந்தோராகிய அவர்கள் பின் ஆகாயத்திற்புகுந்து தங்களுலகங்களை யடைந்தார்கள்" என்று சொல்லப்பட்டது. ஆண்டுத்தானே 'சிவமாகிய சிவசிரசு' என்றும் 'புண்ணியமாகிய ருத்திரசிரசு' என்றும் சிவ புண்ணிய சப்தங்களால் சிவமௌலிக்குப் பரமமங்களத்துவமும் பரம்பவித்திரத் துவமுஞ் சொல்லி அதனது சம்பந்தத்தாற்றானே கங்கைக்குப் பாவித் திரியாதி சயமுண்டாய்தென்பது "பவனது அங்கத்தினின்றும் விழுந்த நீர் பவித்திரமென்று பரிசித்தார்கள். சாபத்தால் அடிக்கப்பட்டவர்கள் எவர்கள்" என்று வெளிப்படையாகவே உரைக்கப்பட்டது. இந்தப்பொருளே கூர்மபுராணத்தில் வெகுவிதமாகிய கங்கைகளது மாசாத்மியத்தைப் பிரதிபாதித்த அநந்தரம் "பவித்திரங்களுள்ளே பவித்திரம் மங்களங்களுள்ளே மங்களம் மகேசுவரனிடத்தினின்றும் நழுவியது. சர்வபாபங்க ளையும் போக்குவது. சுபமாயது" என்று சுருக்கியுரைக்கப்பட்டது. "எவர் சிவ நினது பதத்துறுவதனைச் சிரங்களினேற்குப்" என்றவிதனால் பாகவதத்திற் சொல்லட்பட்ட இப்பெற்றியதோர் முடிபு குறிப்பிக்கப்பட்டமை யுணர்க. ஆண்டுச் "சிவனென்பது அபதேசமாக அசிவனாயினோன் மத்தோந்மத்தசநப்பிரியன்" என்பது முதலிய கொடிய வசநத்தால் சிவபிரானை யிகழ்ந்துரைத்த தக்கனை நோக்கித் தாக்ஷாயணி யுரைத்த சோல்லுண்டநமாகிய வசநமிது. "சிவனென்னும் பெயருடையானை

அசிவனாக உனக்கு வேறாகியபிரமாதிகள் அறியவில்லையோ? மயாநத்தில் விரித்த சடைகள் அதன்கண் மாலியபற்பதிருக்பாலங்களைத் தரித்துப் பிசாசுகளோடு வசிப்போன். அவனது பதத்துறுவதனை எவர்கள் சிரங்களிற்றரிப்பர்களோ" என்பது. சிவன் மயாநத்தில் வசிப்பவனாப் ஆண்டுச் சிந்திக்கிடக்கின்ற மாலியவற்பகிருக பாலங்களைத் தரித்துப் பிசாசுகளோடு கூடவசிப்போன் நாமமாத்திரத்தாற் சிவன் சாரித்திரத்தாலோ அசிவனென்னுமிதனை நீ யொருவன்றானேயறிகின்றாய். எந்தப் பிரமாதிகள் சிவசரணத்தினின்றும் வருவதாய் அதன்றொடர்புடைய தூளி முதலிய வற்றையும் பரமமங்களமென்றும் பரம்பவித்திரமென்றும் சிரசில் வகிப்பார்கள் அந்தப் பிரமாதிகள் அறியவில்லையோ என்பது ஈண்டுச் சுலோகத்தின் பொருள். சிவபிரானது பாதத்தின்றொடர்புடைய தூளி முதலியவற்றிற்கும் பரம்பாவித்திரிய முணர்த்திப்பாகவதத்திற்றானேவருமிந்த வசநத்தினாற்றானே அவனது சிரசிற்கு அதினுமதிகமாகிய பாவித் திரியமுண்மை குறிப்பிக்கப்பட்டமையுணர்க. இதனால் ராமாயண முதலிய வசநந்திற்குச் சிவனது சிரசம்சர்க்கத்தாற்றானே கங்கைக்குப் பரமபாவித் திரியமுண்மை அபிமதமாக விண்டுபதத்திற்போந்த கங்கையைத் தரித்துச் சிவன் சிவனானானென்பது முதலியவாக ஒரு சிறிது ஆண்டுக்கூறியவது பிரதாரப்பிரதிபாத்தியனாகிய விண்டுவினதும கிமஸ்துதியின் பொருட்டென்பதை உய்த்துணராது அறிவிலார் தமக்கு மநம் போனவாறு பிதற்றினும் மெய்யறிவுப் பெருவாழ்வுடையார் அதன்கண் ஆதரஞ் செய்யுமாறில்லையென்க. பாகவதத் திலோவெனின் கேட்போனது பக்திபை யநுசரித்துக் கண்ணனவதாரமகிமையையே பிராதாந்நியத்தாற் பிரக்கியாபகம்பண்ணுதலை உட்கொண்டு அவதாரா நுக்கிரமத்தால் "இவர்கள் புருடன்றனது அமிசகலைகள், கண்ணனோ சுவயம் பகவான்" என்று ராம்ன் முதலிய அவதாரங்கட்கெல்லாம் பகவானது அமிசலே சத்துவம் சொல்லிக் கண்ணனுக்குப் பரிபூரணபவதவதாரத்துவம் சொல்லப்பட்டது. உயர்காந்மகம். அல்ல தூஉம் பாரதவிண்டு புராணா திவசாவிருத்தமாம். பிராமணபுத் திரனை வருவித்த பிரஸ்தாவத்தைச் சொன்ன பாகவதவிருத்தமுமாம். அதனால் அதுசொல்லும்படி எடுத்துக்கொண்ட கண்ணனவதாரத்தினது துதியின் பொருட் டென்றே எவ்வாற்றனுமியைவிக்கற்பாலது. இதுவும் இம்முறையே கொள்ளற்பாலது. இன்னும் பாகவதத்திற்றானே அந்தந்தப் பிரதேசபரியாலோசகையினால் சிவபிரானுக்கும் விண்டுவுக்கும் பராபரபாவம் தர்மிக்கிராககமாநசித்தமாயிருக் கின்றது. அங்ஙனமன்றே! பாகவதோபக்கிரமத்தில் "அதனால் சாத்துவான்களுக்குப் பதியாகிய பகவான் ஒரேமநசாற் கேட்கற்பாலன், புகழற்பாலன், தியாநிக்கற்பாலன், என்றும் பூசிக்கற்பாலன்?" என்பது முதலியவாகச் சொல்லி இந்தப் பகவான் யார்? என்று ஆசங்கித்துச், "சத்துவம் ரஜசு தமசு என்பன பிரகிருதியின் குணங்கள், அவற்றோடியைந்தோன் பரனாகிய புருடன் அவனொருவனே இதனது ஸ்திதி முதலியவற்றின் பொருட்டு அரி விரிஞ்சி அரன் என்னும் பெயர்களை ஈண்டுத் தரிக்கின்றான். ஆண்டுச் சத்துவத நுவுடையான்பால் நரர்களுக்குச் செல்வங்கள் உளவாகின்றன" என்னும் சுலோகத்தால் திரிமூர்த்தியந்தர்க்கதனாகிய விஷ்ணு வையே செல்வங்களை விளைவிப்போனென்றுரைத்து அதனால் மேற்கூறிய நியத வழிபாட்டை உபபாதநம்பண்ணு முகத்தால் பகவானெனவைத்து "முநிகள் அதோக்ஷசனாகிய பகவானை முதலில் அடைந்தார்கள். விசுத்தமாகிய சத்துவம் ஈண்டு க்ஷேமத்தின் பொருட்டுக்கற்பிக்கிறது. மற்றையனவல்ல" என்று சாத்துவிகத்

தினாற்றானே அவன்முன்னையோராலும் உபாசிக்கப்படுவனென்று சொல்லி, அதனது விவிதப்பிரசம்சையை முன்னிட்டு "நீரின்கண்ணே சயநமுடையோனாய் யோகநித்திரை செய்பவனாகிய எவனது நாபிப்பொய்கையம்புயத்தினின்றும் விசுவ சிருட்டாக்களுக்குப் பதியாகிய பிரமா தோன்றினான். எவனது அவயவசம்ஸ் தாநங்களாலே லோகவிஸ்தரம் கற்பிக்கப்படும், அந்தப் பகவான் முதலில் உலகத்தைச்சிருட்டிக்குமிச்சையினாற் பதினாறு கலையோடு கூடிய பௌருட ரூபத்தை மசாந்முதலியவற்றால் கிரகித்தான் பகவானது அந்த ரூபம் விசுத்தம் சத்துவம் ஊர்ச்சிதம்" என்று சத்துவப்பிரதாநரூபத்தைச் சொல்லி "எதனது அமிசாமிசத்தால் தேவதிரியக்குநரர் முதலியோர் ஆக்கப்படுவர் இது நாநாவதாரங் கட்கும் ஆதிகாரணம் பீசம் அவ்வியயம் என்று அதுவே வைணவமூலரூபமாகச் சொல்லப்பட்டது. இதனால் திரிமூர்த்தியந்தர்க்கதனாகிய விண்டுவே பரமாகிய விண்டுதத்துவம். அவனே பாகவதவிண்டுபுராணத்தில் சுவப்பிராதாந்தியத்தால் பிரதிபாதிக்கப்படுவனென்பது வெளிப்படவுணர்த் தப்பட்டது. ஈண்டுக்கூறியவாற்றால் சத்துவமுதலிய ஒவ்வோர்குணத்தினது பிராதாந்நியராகித்தியத்தால் சாத்துவிகாதி பேதங்களைக் கடந்ததாய்மாயோபகிதமாய் அவற்றது சமஷ்டிரூபசகுணப்பிரமம் உண்டென்பது பெறப்பட்டது. "இவனது ராஜசாம்சம் ஏவன்றான் எந்த இந்த அவன் இந்தப்பிரமா இனி இவனது தாமசாம்சன் எவன்றான் எந்த இந்த அவன் இந்த உருத்திரன் இவனது சாத்துவிகாம்சம் எவன்றான் எந்த இந்த அவன் இந்த விஷ்ணு" என்று மைத்திரேயோபநிஷத்தில் எதனது அமிசபூதங்களாக இவர்கள் கொள்ளப்படுவார்கள் அதினின்றூம் அவரம் விண்டுதத்துவம் என்பது அங்கீகரிக்கப் படுவதாகின்றது. அதனாற்றானே எதனது பிரபஞ்சத்தின் பொருட்டுப் பாகவதம் எழுந்தது அந்த விண்டு புராணத்தில் புராணப்பிரதிபாத்தியமாகிய விண்டு தத்துவத்திற்குப் பரப்பிரமாவரத்துவம் சொல்லப்பட்டது. ஆண்டுத்தானே "பெரியோய், பிரம விஷ்ணு ருத்திரர்கள் பிரதாநப்பிரமசத்திகள், மைத்திரேய, அதனால் தக்கன் முதலிய தேவர்கள் அவரினின்றும் நூநர்கள்" என்பது முதலியவசநங்களால் பிரமாமுதல் தாவரமீறாகிய சகல பிராணிசமூகத்திற்கும் உயர்வு தாழ்வு பற்றிய பரப்பிரமசத்திவிசேடத்துவம் சொல்லி, அதன்பின்," சர்வசத்திகளுள்ளும் அவன் வரன், பிரமத்திற்குப்பிந்தினோன்" என்று புராணப்பிரதிபாத்தியனாகிய விண்டுவுக்குப் பிரமசாத்திகளனைத்தினும் உயர்வுடைமையை ஒப்புக்கொண்டு பிரமாவரத்துவம் சொல்லப்பட்டது. இம்முறையே மூவர்க்கும் பிரமசத்தித்துவத்தைக் சொல்லியமை யாலும், விட்டுணுவிற்குப் பிரமாவரத்துவம் சொல்லியமையாலும், மூவரையுங் கடந்த பிரமம் உளதென்று எது சூசிப்பிக்கப்பட்டது அது தான் சிவபிரானே என்னும் விண்டுபுராணத்தினது உட்கோள் "சத்திகள் பிரமவிஷ்ணுவீசர்கள் புத்திமுத்திபலப் பிரதர்கள் சர்வேசுவரர்கள் சர்வவந்தியர்கள் சாசுவதாநந்த போகிகள் அங்கே வேறு திவ்வியசத்திகள் ஆயிரவராக உளர். சுக்கிரன் ஆதித்தன் முதலிய அமரர்கள் விவிதங்களாகிய யஞ்ஞங்களினாலே யசிக்கப்படுகின்றார்கள். சத்திகள் எல்லாவற்றுள்ளும் பிரமவிட்டுணு சிவாந்மிகங்களாகிய தேவர்கள் பரமாத்பாவினது பிரதாநசத்திகளாகக் கொள்ளப்படுகின்றார்கள். இவர்க்கெல்லாம் மேலாகப் பகவான் பரமான்மா சநாதநன் மகேசுவரன் சர்வசக்தியான்மாவென்று சூலபாணி சொல்லப்படுவன்" என்னும் கூர்மபுராணத்தின் ஐசார்த்தியத்தால் அறியப்படும். விண்டுபத்தியினது உற்கருஷப்பிரசித்தியின் பொருட்டு எழுந்ததாகலின் ஆண்டு அது

வலியுறுத்தியுரைக்கப்பட்டிலதென்க. அதனாலன்றே அமிர்தமதநம் பகீரத்தசரிதம் முதலிய பிரஸ்தாவங்களில் சிவபிரான் செய்தருளிய காளகூடக்கிரசநம் கங்கரதாரணம் முதலியனவுமாக ஆண்டுச் சொல்லியது அநந்நியசாத்தியமென்று சொல்லப்பட்டது. திரிமூர்த்தியுத் தீர்ணமாய்ச் சாத்துவிகாதிபெதரகிதமாய் மாயோபகிதமாயுள்ள பரப்பிரம ரூபத்துவம் சிவபிரானுக்குண்டென்றே பாகவதத்தும் ஆண்டாண்டுக் கூறப்பட்டது. எங்கனம்? அட்டமஸ்கந்தத்தில் "நதேகிரித்திர" என்று முன்னுதாகரிக்கப்பட்ட சுலோகத்தில். ஆக, "சுவதிருக்காகிய பெரியோய், பிரபூ, குணமயியாகிய எந்தச் சுவசத்தியினால் இதனது சிருட்டி திதிமுதலியவற்றையும் பிரம விட்டுணு சிவநாமத்தையும் தரிக்கின்றாய், நீ பரமமாகிய குஃகியம், சதசத்பாவநமாகிய பிரமம், நீ நாநாசத்திகளாலும் பிரகாசிக்கின்றாய், நீ ஆன்மா சகதீசுவரன்" என்பது முதலிய பாகவதவசநங்களாயுள்ளனவும் சிவுவிபூதி பூதங்களாகிய நீலலோகிதருத்திராதிகளை உத்தேசித்துப் பிரவர்த்தித்தனவாமாயினும் ஆண்டும் பிரத்தியாசத்தியதிசயத்தால் சிவாபேத்திருட்டியிற் பிரவர்த்தித்தனவென்றே யோசிக்கத்தக்கனவாம். இவ்வியல்பினவாய் விண்டுவின்பாற் காணப்படுவன இம்முறையே யோசிக்கத்தக்கனவென்க. பாரதத்தும் சிவபுராண முதலியவற்றினும் சிவபிரானுக்கே திரிமூர்த்தியுத்தீர்ணத்துவம் ஐக்கண்டியமாகச் சுப்பிரசித்தமாதலானும் பராசரபுரா ணத்தில் புராணங்களனைத்திற்கும் அங்கங்கே பொருந்துமாறு சாக்ஷாத்தாகத்தான் பரம்பரையாற்றான் சிவபரியவசாநக் கொள்கையும் சைவபுராணங்களுக்கு சாக்ஷாத் சிவப்பிரதிபாதகத்துவமும், சங்கார ருத்திரவர்ணகமுகத்தால் சிவபரியவசாகமுஞ் சொல்லி "மகாமுநியே, வைணவ புராணங்களெல்லாம் திரிமூர்த்திகளுள்ளே அரியினது நாமத்தால் அவனது மூர்த்தியால் பரபதத்தையே எடுத்துரைக்கின்றன. பிரமபுராணமிரண்டினும் இந்தப் பிரகாரமே" என்று சொல்லப்பட்டமையாலுமென்க. இனித் திரி மூர்த்தியுத் தீர்ணமாகிய பரப்பிரமம் உண்டென்று அங்கீகரிப்பதில் அதர்வ சிரசு சிகை தைவல்லி யோபநிஷத்து முதலிய சுருதிகளையும் அவற்றினும் பிருங்கணங்களாகிய புராண வசநங்களையும் அநுசரித்து அந்தச் சகுணப்பிரமம் சிவபிரானென்றே பரியவசா நமாம் என்னும் அச்சத்தால் திரிமூர்த்தியந்தர்க்கசனாய சாத்துவிகனாகிய விட்டுணுவே பரப்பிரமம் திரிமூர்த்தி புத்திர்ணமாகிப் பரப்பிரமம் இல்லையென்று அதனைப் பிரதிபாதிக்கும் சுருதிபுராணங்களை வைணவர்கள் மாறுபடுத்துரைக்க முயலுவரேவ் அதற்கு "மும்மையினுமிக்கதாகிய தத்துவமொன்றே மூன்றாப்பிரிக்கப்படும், அம்மூவரும் ஈசராவார்கள், விட்டுணுவாதிமூர்த்தி இட்டதின்கணுளதாம், மூவரது நியமம் கற்பபேதத்தாலாம், சுவர்க்கத்தில் இந்திரன் முதலிய ஈசுவரர்களது பிரவாகம் அவரவர் புண்ணியவசத்தாலுள்ளதாம், என்பது முதலியன பிரதிபலகம் போல இங்ஙனம் பராத்தம் ஏகனது ஈசுவரத்துவம்" என்று அதனது சங்கிரகசுலோகமும் காணப்படுதலானுமென்க. ஈண்டு கூறியவாற்றால் பாரதவிண்டுபுராணங்களில் தர்மிக்கிராககமாந சித்தமாகிய பராபரபாவத்திற்கு மாறுபடுகோள் செய்தல் பொருந் தாமையால் அதற்கு மாறுபட்டுவருவனவெல்லாம் துதியின் பொருட்டென்றியைவித்தலே பொருத்தமென்க. இப்படியே மற்றைப் புராணங்களினும் கண்டுகொள்க. அல்லதூஉம் அதிதியினிடத்தில் ஆவிர்ப்பூதனாய் எந்தப்பகவான் திரிவிக்கிரம ரூபத்தைக்காட்டினான் அந்த விட்டுணு புராணேதிகாசங்களெல்லாவற்றினும் பன்னிரண்டு ஆதித்தர்களுள் வைத்து விபாகமின்றி எண்ணப்படுவன். சிவசூரிய

கலாவேசத்தாற்றான் அவரவர்மாசாதிகாரத்தை நிர்வகிக்குந்தன்மை அப்பன்னிரு வர்க்கு முண்டாமென்று கூர்மபுராணத்தில் வருணிக்கப்பட்டது. "சர்வான்மா. சர்வலோகேசன் மகாதேவன் பிரசாபதியாகிய சூரியனே மூவுலகிற்கும் மூலமாகிய பரமதைவதம். மற்றுப் பன்னிரண்டு ஆதித்தர்களாகிய அந்தத் தேவர்கள் அதிகாரிகளாமாறு, மாகமாசத்தில் சூரியன் வருணன், பாற்குகத்தில் பூஷா, சைத்திரமாசத்தில் வேதாங்கன், வைசாகதாபான் தாதா, சேஷ்ட மாசத்தில் தேவேந்திரன், ஆஷாடமாசத்தில் ரவி சவிதா, கிராவண மாசத்தில் விவச்சுவாந், புரோஷ்டபதிமாசத்தில் புதன் கொள்ளப்படுவன், அச்சுவிநியில் சூரியன் துவஷ்டா, கார்த்திகை மாசத்தில் பாஸ்கரன், மார்க்கசீரிடதில் மித்திரனுளன், பௌஷமாசத்தில் சநாதநனாகிய விஷ்ணு" என்றதனாலென்க. ஆண்டு மாசாதிகாரிகளாகிய சூரியர்க ளுள்ளே சீவரூபப்பிரதாநசூரியனது அமிசாவேசம் கொள்ளப்பட்டிலது. விண்டுவிற்கு அவனது அமிசாவேசத்தால் காரியசர்த்திருத்துவம் சொல்லுதல் பொருந்தாமையால், மற்றெதுகொல்லெனின் அவன தந்தரியாமியாகிய சிவரூப சூரியாவேசமேமென்க. அதனாலன்றே "மகாதேவன் பிரசாபதி" என்று தொடங்கப்பட்டது. "இந்தத் தேவன் மகாதேவன் சாக்ஷாத் மகேசுவரன் நீலக்கிரீவன் சநாதநன் பாஸ்வானாக வேத வித்துக்களுக்கு விளங்குகின்றான்" என்று முடிக்கப்பட்டது. மற்றிடங்களிலும் "இவன் ருத்திரன் மகாதேவன் சபர்த்தி கிரிணிமாந் அரி ஆதித்திபன் பகவான் சூரியன். நிலக்கிரீவன் திரிலோசான் ஆயிரங்கதிரோன் சாமயசுரிருக் குடையோர்களினால் ஆராதிக்கப்பிகின்றான்" என்பது முதலாக ஆண்டு வருணிக்கப்பட்டது. ஆண்டுச் சூரியோபஸ்தாநத்தின் பொருட்டு உபதேசிக்கப்பட்ட சூரியஹிருதய ஸ்தோத்திரத்தி லும் மூலச்சுரு தியை யநுசரித்துச் சிவரூபத்தன்மையினாற்றானே சூரியஸ்துதி செய்யப்பட்டது. "பூர்ப் புவம் சுவம் ஓங்காரம் சர்வம் ருத்திரன் சநாதநன் புருடன் சத்து மசோஜன் அப்படிப்பட்ட கபர்த்தியாகிய நின்னை நமஸ்கரிக்கின்றேன். எது வெகுவிதமாகப் பிறந்தது எது பிறப்பது அந்த விசுவம் நீயே. நிஜனாகிய உருத்திரன் பொருட்டு நம. நின்னை நான் சரணமடைந்தேன். பிரசேதசாகிய நின்பொருட்டு நம. சுகிப்பிப்பவருட் சிறந்தோனாகிய நின்பொருட்டு நம. உருத்திரனாகிய நின்பொருட்டு நமோநம. நின்னை நான் சரணடைகின்றேன். ஹிரண்ணிபவாகு ஹிரண்ணியபதி யாகிய நின்பொருட்டு நம. அம்பிகாபதியாகிய நின்பொருட்டு நம். உமையினது பதியின்பொருட்டு நம. நீலக்கிரீவன்பொருட்டு நம ஆகுக. பிநாகியாகிய நின்பொருட்டு நம. விலோகிதன் பர்க்கன் சகத்திராக்ஷனாகிய நின்பொருட்டு நம. பரஞ்சோதி பிரமம் பராமிர்தம் விசுவம் பசுபதி பீமன் நரநாரிசரீரியாகிய நின்னை நமஸ்கரிக்கின்றேன்" என்று சொல்லப்பட்டது. இனி விண்டு புராணத்தில் ஆதித்திய இருடிகந்தர்ல அப்சரச முதலிய எழுவிதமாசாதிகாரிகளை " மைத்திரயே, பாநுவினது சியந்தநத்தில் எழுமாசாதிகாரிகள்" என்று தொடங்கி "மைத்திரேய, பெரியோய், அந்த இவர்களுள்ளே இவர்கள் எழுவர் சூரிய மண்டலத்தில் விண்டுசத்தியினால் மேலிடப்பட்டோராய் வசிக்கின்றார்கள்" என்று சொல்லப்பட்டது யாது அது அவர்களுள் விட்டுணு அமிசாவேசத்தினது அபிப்பிராயத்தையுடையதன்று, மற்றெங்கன மெனின் "ஆதித்தியோ வா எஷ ஏதந் மண்டலம்" என்பது முதலிய சுருதியில் மண்டல புருடார்ச்சி ரூபத்தன்மையினாலும் "ருக்பி: பூர்வாஹ்ணே திவி த்வே ஈசதே" என்பது முதலிய மந்திரத்தில் பூர்வாந்ந முதலியவற்றில் தபநகாரணத் தன்மையினாலும் எந்த வேதத்திரயி வருணிக்கப்பட்டதோ அதனாற் செய்யப்பட்ட

சாகாயகாபிப்பிராயத்தை யுடையதென்க. “திதியின்கணிருப்போன் சகத்தினது பாலநத்தில் முயற்சியுடையோன் இருக்கு யசுர் சாமபூதனாகிய அந்த விண்டுவும் சூரியனுள்ளே நிலை பெறும்; துவிச, மாசந்தோறும் மாசந்தோறும் எந்தெந்தச் சூரியன் ஆண்டாண்டு மிக மேலாகிய திரயீமயியாகிய விட்டுணுசத்தி இருத்தல் செய்கின்றது” என்று ஆண்டுத்தானே முதலில் அப்படியே விளக்கியமையாலென்க. “சூரியனுள்ளே ஹிரண்மயனாகிய இந்தப் புருடன் எவன்" என்று தொடங்கி "நம ஹிரண்யவாகு ஹிரண்யதி அம்பிகாபதி உமாபதியின் பொருட்டு, பசுபதியின் பொருட்டு நமோநம" என்று முடிக்கின்ற தைத்திரியோபநிஷத்தாலும், “இவன் எவன் தாம்பிரன் அருணன்” என்பது மு.ரலிய சுருதி கணங்களினாலும் அவற்றை யநுசரித்த உபப்பிருங்கணங்களினாலும், இது சித்தமென்க. இங்ஙனம் சிவபிரானுக்குச் சூரியாந்தரியாமித்தன்மையிருத்தலான் அவன் மாசாதிகாரிக ளுள்ளே ஆவேசமுடையனென்பதை மறுத்தல்யாண்டையதென்க. எனவே எவனது ஆவேசத்தால் எவனுக்குச் சுவயம் காரியகாரணசாமர்த்தியமுண்மை அறியப்படும் அவனுக்கு அவனின் வைத்து உற்கருஷம் உண்டாவதெங்கன்மென்க. எனவே அதற்கு விருத்தமாய்வருவனவெல்லாம் அவனது துதியின் பொருட்டு. எழுந்தனவென்றே எவ்வாற்றானும் பொருந்து மாறியை விக்கற்பாலதென்பது முடியாயிற்று. இனி வாணன்யுத்தத்தில் கண்ணற்ப ஜயமடைந்தான் சிவபிரானெனப் புலம்பும்வரை மறுக்கவெழுந்தன வருஞ்செய்யுட்களென்பது. (37)

**யாதவர்க்கிறையுச்சிரும்பணத்தன்றேயிளம்பிறைமுடித்தசேகரமெய்ப்**
**போதபூரணமுன்வாணயுத்தத்திற்புண்ணியாவுதாசிநம்புரிந்தாய்**
**நாதவித்துணையேந்லிவிலாநினதுவலிமைக்குநலிவதாவுலகிற்**
**காதுகக்கயவர்சிலர்வெறுவார்த்தைகட்டுபவெனதிருகண்ணே. 38**

(எ-து) யதுகுலாதிபனாகிய கண்ணற்குறுதுணையாய்நின்று அவற்குவேண்டுழி வேண்டுழி வேண்டுநவேண்டுநவுதவும் கருணைவெள்ளம் சிவபிரானன்றே! அக்கண்ணற்குத்தான் அவனைப்பற்றி நின்ற அவன் தமர்களுக்குத்தான் ஆபத்து வந்துழிவந்துழியெல்லாம் அவர் தம்மை வழிபட்டுநிற்கும் உரிமைப் பாட்டிற்கிரங்கி நேரேதான் பிறிது முன்னிலைபாற்றான் எளிவந்து நின்று அவரை அவ்வாபத்தி னின்றும் தவிர்த்து அவர் விரும்பியநிலையின் வாழுமாறுவைத்து வாழ்விக்கும் ஆபற்சகாயன் அச்சிவபிரானன்றே! கண்ணன் இதனை இவ்வண்ணம் முடிப்பலென்று மநம்பற்றிவகித்துக்கொண்ட செயல்களையெல்லாம் தன்செயலாகக்கொண்டு நிர்வகித்து அவனது செயன்முடிவுபேற்றிற்கு எக்காலத்து எவ்விடத்து எவ்வண்ணமுடையனாய்த் தான் இயைந்துநிற்றல் வேண்டுமோ அங்ஙனம் நின்று எண்ணுக்கும் சொல்லுக்கு மடங்காத் தனது தேசோலேசத்தை அவற்களித்து அவனியற்றும் லீலைகளையெல்லாம் சிறுமகார்விளையாட்டைக்கண்டு களிக்கும் தாதையரோடொப்பத் தான் கண்டு களித்து அவன் அவ்வண்ணம் லீலை செய்து மகிழுமாறு உபகரித்து நிற்கும் உள்ளுறுதுணை அச்சிவபிரானன்றே! இனி எல்லாத் திறந்தும் எல்லாரினு மிக்க எல்லாவலிமையுமுடையான் தானேயாயும் அவ்வியல்புடைய தான் தன்பெருமைதோன்றாது தன்ன நுசரனாகிய வாணன் விரும்பிய விரும்பிய நெறியே சென்று நின்று அவனது தவத்தின் செயலால்

# பிரமதருக்கஸ்தவம்

ஒவ்வோர் திறத்து ஒவ்வோர் செயலின்மிக்க ஒவ்வோர்வலியை அவற்கிரங்கிய அளித்து உரிபைபாராட்டி அவற்கு எதநிசழாதுபாதுசாத்தலுஞ் செய்தான் அச்சிவபிரானன்றே! செயற்கையான்வாய்ந்த அவ்வொவ்வோர்வலியைச் சிவபிரான்பாற் பெற்ற வாணன் பிறரையெல்லாம்வென்ற பெருவலிபடைத்து வாழ்ந்து வருவோன் அதனை இயற்கையான் வாய்ந்த அச்சிவபிரானது எல்லா வலிமையோடு வைத்து நோக்கி அடங்கியொழுகுதல் தனக்கு என்றும் முறைமையேயாகவும் அவன் அங்ஙனமுறைப்பட்டு அடங்காது சிவபிரானைத்தான் அவன்வழிவந்த கண்ணன் முதலிய பிறரைத்தான் எதிரிட்டுநின்று மிகையுடை யனாக, அவ்வாணனைத் தன்வழிநிற்போனும் அவ்வாணனால் எள்ளப்பட்டோனு மாகிய கண்ணன் முன்னிலையால் தோல்வி பெறச்செய்து அவ்வாணனது கர்வத்தையும் அவ்வாணன்பால் வெல்விபெறச்செய்து அக்கண்ணனது எள்ளற் பாட்டையும் தவிர்த்துத் தான் நடுநிலைக்கணின்று அவ்விருதிறத்தாரையும் அவரவர்க்குரிய உயர்நிலைக் கண்வைத்து வாழ்விக்கத் திருவுளங்கொண்டோன் சிவபிரானாதலால் ஈண்டு வாணன்யுத்தத்தில் கண்ணன் நேர்ந்தகாலையில் தான் அன்பர்க் கெளிவந்த பேரருளுடையோனாதலில் அக்கண்ணன் விடயத்தில் தனக்கு ஆண்னடக்குரிய வியவகாரவேகதேசவுரிமைபற்றிய வெல்வியை விழைந்து அவனைப் புறங்கொதிப்பித்தலுஞ் செய்யாது, எவராலும் வெல்லப்படாத இயற்கைப் பெருவலியுடையோன் தானாகலின் அவற்குப் புறங்கொடுத்தலும் தனக்குளதாகாது, இடைநிலைக்களத்ததாகிய உதாசீந்நிலைக்கணெம் பெருமானின்றது ஒரு சார்பற்றி நோக்குங்கால் கண்ணற்கும் அவன் தமர்கட்கும்வந்த எள்ளற்பாட்டையும் ஆபத்தையும் தவிர்த்தருளுதலாகிய அக்கண்ணனது உச்சிரும்பணத்தின் பொருட்டேயென்பது வாதிகடமக்கே ஒப்பற்பாலதாகவும், அக்கண்ணன் விடயத்தும் அவன் தமர்விடயத்தும் கருணைவெள்ளமென்றும் ஆபற்சகாயனென்றும் உள்ளுறு துணையென்றும் மேற்கூறிப்போந்த அருளியல்புகளையுடைய எம்பெருமான் அங்ஙனம் உதாசீந்நிலைக்கணின்றது கண்ணனைப் புறங்கொடுப்பிக்காமையால் அவனது பேரருட்கும் கண்ணனுக்குப் புறங்கொடாமையால் அவனது பெருவலிக்கும் தக்கசான்றேயாகவும் இவற்றை இம்முறையின் வைத்துப்பிரித்துணராது அறிஞர் பிறர் பாற்கேட்டு முணராது அவ்வுதாசீமாந் திரையே அபஜயமடைந்து புறங் கொடுத்ததாகக்கொண்டு சிவபிரானது நலிவில்லாவலிக்கு நலிவுளதாய்த்தென உலகிற் கதைகட்டி வெறும் போது போக்குவார் சிலர். அப்படி வெறும்போதுபோக்கும் அத்தொழிலை அவர் மேற்கொண்டது அறிஞாவைக்கண் அவர்க்குப் பெரிதும் இழிவரவுறுத்தற்பால்தொன்றென்பதை அவர் சிறிதுமறிந்திலர். அவரங்ஙனம் செய்தற்குக்காரணம் அவர்தங்கயமையே பிறிதில்லையென்பதாம்.

இதனால் வாணன்யுத்தத்திற் கண்ணன் முன்னிலையிற் சிவபிரான் புரிந்தது ஔதாசீந்நியமாத்திரையேயாக அதனால் அபஜயமுளதாய்த்தென்று வெறுங்கதை கட்டும் அக்கயவரை நோக்கி அது அபஜயமாகாமை காட்டி ஔதாசீந்நியம் புரிந்தமைக்கு எதுவும் விளக்கி அவர் வெற்றுரை கழிக்கப்பட்டது. உச்சிரும்பணம் - ஆக்கம். இனிச் சிவ்பிரான் புரிந்தது ஔதாசீந்நியமாத்திரமே அபஜயமன்றென்பது ஏற்றால் வலியுறுத்துணரப்படுமென ஆசங்கித்து அதனை அருத்தாபத்தியில்வைத் துணர்த்துமாறெழுந்தன வருஞ்செய்யுட்களென்பது. (38)

**வலியர்தம்முள்ளும்வலியைவான்பொருளேவான்வவல்விலோனாதி**
**யுலகெவற்றினுக்கும்பீமனேயாதியுயாகிலேச்சுரனாதி**
**யிலகவிப்படிநீசுருதிநூறுகளாலிசைத்திடப்படவுமற்றறிவில்**
**கலனெனுமற்பமாநுடனொருவனென்னைகொல்கத்திடுமாறே.** **39**

(எ-து) வலியர்தம்முள்ளும் வலியனென்றும் வல்விலோனென்றும் பீமனென்றும் அகிலேச்சுரனென்றும் இத்திறங்களாற் சுருதிகள் பலவுமிசைத்தது சிவபிரானையேயாகவும் இஃதுணராது மநம்போனவாமாறு பிதற்றும் பேதை யொருவன் என்ன பயன் பற்றிக்கொல்லோ தெரிகின்றில மென்பதாம்.

“ருத்திர, நின்னின் வலியோனில்லை" என்று எல்லாரினுமிக்க வலிமை சிவபிரானுக்குக் கேட்கப்பட்டது. “உக்கிரன் பொருட்டுப் பீமன்பொருட்டு நம.” என்பது முதலியன்வற்றுள் நிருப்பதமாகிய பீமநாமத்தால் சகலசகத் பயங்கரத்துவம் கேட்கப்பட்டது. எல்லாரினுமிக்கவலி உளதாகாக்கால் அது நிகழத்தக்கதன்று. அப்படியே "சர்வைசுவரியசம்பங்கன் சர்வேசுவரன்” என்பது முதலியவற்றுள் கேட்கப்பட்ட சர்வநியந் திருத்துவமும் அதை யின்றியமையாதென்பது. (39)

**கற்பங்கடோறுங்கழித்திடுபிரமகோடியின்கரோடிமாலைகளும்**
**பற்பமாமங்கராகமுங்கமடவங்கமும்பன்றியின்கொம்புஞ்**
**சொற்படுமிவற்றாலாகியநினதுசோபநவுருவணியேநின்**
**விற்படவெவரின்மிக்கதாம்வலியைவிரித்திடவில்லையோவெளியே.** **40**

(எ-து) அப்போதப்போது நிகழ்ந்த அநந்தகற்பங்கடோறும் பிரம கோடிகள் தன்னாற் சங்கரிக்கப்பட அவரது கபாலமாலைகளைத் தரித்தலும் அவர்களது பற்பத்தை யணிதலும் விண்டு கூர்மாவதாரமெடுத்தகாலத்து அதைக்கொன்று அதனது ஓட்டைத் தரித்தலும் வராகாவதாரமெடுத்த காலத்து அதைக் கொன்று அதனது கொம்பைப் பிடுங்கித்தரித்தலும் அவ்வவற்றின்மிக்க வலிமை உளதாகாக் கால் நிகழமாட்டாவென்பது தேற்றமன்றே! ஆகலின் இவற்றாலாகிய சிவபிரானது மங்கள விக்கிரகத்தில் அணிகலங்களே அவனது தடுக்கப்படாத பெருவலியை அறிவுறுத்தற்குத் தக்கசான்றுகளென்பதாம்.

'விற்படவெவரின்மிக்கதாம்வலி’ என்பது ஒரு சொன்னீர்மைத்தாய் நின் என்னும் ஆறாவதற்கு முடிப்பாயிற்று. (40)

**எவனமிசங்களாகியசரபவைாவவுக்கிரரிவரா**
**லவமிலோய்நெடுமானான்முகன்மகவானாதியாரொறுத்திடப்பட்டார்**
**புவநநாயகவவ்வுனதுவிக்கிரமபூரிபாவத்திடையவரே**
**தவமுதால்கரியாந்தன்மைமேற்கொள்பசாற்றலென்பிறவற்றாற்றானே.** **41**

(எ-து) நெடுமால் விரிஞ்சன் புரந்தரன் முதலிய தேவர்களெல்லாரும் சிவகலாவிர்ப்பாவத்தன்மையினால் சிவாமிசபூதங்களாகிய சரபர் வைரவர் வீரபத்திரர் என்னுமிவரால் முறையே நரசிம்மாவதாரத்தில் உபசங்காரமும், ஐந்தாவதுசிரசு கிள்ளப்படுதலும், தக்கன்யாகத்திலே கர்வபங்கமும் எய்தியது

புராணங்களில் ஆண்டாண்டுப் பெருவழக்காகவும் அவரே லோக நாயகனாகிய எம்பெருமானது விக்கிரமபூரிபாவத்தை உலகறிய விளக்கும் கரிகளாந்தன்மையை மேற்கொள்குநராகவும் இவற்றை ஓர்ந்துணர்ந்தடங்கு முறுதியில்லாதார்க்கு வேறெத்தனை எடுத்துச் சொல்லியும் உணர்ச்சியுளதாமாறில்லையென்பதாம்.

ஈண்டுக்கூறிய வியல்புகளெல்லாம் கைமுதிகநியாயத்தால் எல்லாரினுமிக்க தடுக்கப்படாத பெருவலி சிவபிரானுக்குளதென்பதை நன்கு வெளிப்பட அறிவுறுத்தல்செய்வனவன்றே! ஆகலின் இங்ஙனம் கூறியதென்க. (41)

**கற்பகதருவைக்கொணர்ந்ததுமாறுகடிநகாழித்ததுமுதல**
**தற்பரவெவராலளித்திடப்பட்டவலிகொண்டேகண்ணன்சாதித்தா**
**னற்பகத்தமர்ந்தோயவனிடைநினதுவலிமைக்கோரழிவதாமூர்க்க**
**வற்பரான்மொழியப்படுவதையந்தோவெங்ஙனமவன்சகித்திடுமே.** **42**

(எ-து) கண்ணன் சிவாராதகஞ்செய்து அதன் வலியினாற்றானே கற்பகதருவை க் கொணர்ந்ததும் சட்புரவதத்தில் நிகும்பயுத்தத்தில் மறைந்துபோர்புரிந்த நிகும்பனைக் கண்டு எதிரிட்டுநின்று போர்புரியலாற்றாத கண்ணன் தன்னால் பிர திட்டிக்கப்பட்ட வில்வோதகேசுவரரென்னும் சிவபிரானது தியாகத்தினாற்றானே மாயாவியாகிய அந்நிகும்பனைக்கண்டு எதிர்நின்று போர்புரிந்தமை முதலியவும் அரிவம்சத்தில் விரித்துரைக்கப்படவும் இஃதுணராது கண்ணனாற் சிவபிரானது பெருவலிக்கு நலிவுளதாக அவன் அபஜயமடைந்தானென்று வாய்கூசாதுரைத்துச் சிவாபராதிகளாகின்ற அவ்வாலிசர்கொள்கை அந்தோ! அவராலிறைவனென்று கொள்ளப்படும் அக்கண்ணன்றன்னாலும் சகிக்கலாற்றாத நீசவியல் புடைத்தாய் அக்கண்ணனது முனிவையே அவர்க்குப்பலனாகவளிக்கவல்ல பெரியதோர் அநர்த்தமாய் முடிந்ததென்பதாம்.

ஈண்டுக் கூறியவாற்றால் கண்ணற்குச் சிவபிரான் அபஜயமடைந்தானென்று அறிவுவறியராய வாலிசர் கூறுமது அத்தியந்தம் எள்ளற்கிடமே பிறிதில்லை யென்பது தெளிவிக்கப்பட்டது. இதனை வலியுறுத்தும் உபாக்கியாநங்கள் பலவுள. அவை ஈண்டு விரிவஞ்சி விடுக்கப்பட்டன. சிவபுராணங்களில் முழங்கப்படும். ஆண்டுக் காண்க. இந்நான்கு செய்யுட்களானும் வாணன்யுத்தத்திற் கண்ணன் முன்னிலையிற் சிவபிரான் புரிந்தது ஔதாசீந்நியமாத்திரமே அபஜயமன்றென்பது அருத்தாபத்தியில் வைத்து விளக்கப்பட்டது. அற்றேல் அஃதங்ஙனமாகுக, சிவபிரான் வந்தது யுத்தத்தின் பொருட்டென்பது ஒப்பப்பட்டதாகவும் வந்து ஆண்டு ஔதாசீந் நியம்பற்றி யமைக்குக் காரணமென்னையென்பாரை நோக்கி அவை யுணர்த்தற் கெழுந்தன வருஞ்செய்யுட்களென்பது. (42)

**சதமகரிபுவாமவன்சமர்வேண்டிச்சங்காரவசுரபாவத்தின்**
**சிதைவினின்பொருட்டேசமரிடையெனக்குச்சமமெனச்சிறப்பவன்றானே**
**கதமுறுநினதுவன்புயங்களிற்கண்டூதியின்கதிப்பினாலெழுந்த**
**மதமதுகடிதிற்களைவனென்றுன்னாற்சபித்திடப்பட்டனன்மாதோ** **43**

# பிரமதருக்கஸ்தவம்

(எ-து) வாணன் சிவப்பிரசாதபலத்தால் அனைவரையும் வென்று தன்னோடெ திர்ப்பாவொருவருமின்றிப் பெருந்திறலோனாய் அரசியற் செல்வத்து வாழுங்காலத்துப் போர்த்தொழிலொழிந்து வெகுநாளாயினமையால் தனது வழிபடு கடவுளாகிய சிவபிரான்பாற்றானே போர்வரம்வேட்டுநின்றதும் கந்தசுவாமிக்கு அநுசனென்று சிவபிரானால் உமைபாற் சமர்ப்பிக்கப்பட்டும் கந்தசுவாமியால் அப்படியே உபசரிக்கப்பட்டும் வந்த அவ்வாணன் சர்வ சாந்தபதிபாற் போர்வரம் வேட்டமைக்குக் காரணம் அவனது ஆயிரம் புயபலத்தோடு கூடிய கர்வரூபமாகிய அசுரபாவமென்பதும் அதனைச்சுத்திசெய்யும் சமயமிது வெனவோர்ந்தே எம் பெருமான் நகை செய்து கொண்டு அவற்குப் போர்வரமளித்தவியாசத்தானே மயூரத்துவசமொடிதல் உதிரமழைபொழிதல் முதலிய உற்பாதங்கள் கூறி அவை அவன் புரத்தில் நிகழு நாளில் தனக்குச்சமமெனச் சிறப்பானொருவனால் அவன் தோள்கள் வெட்டப்பட்டுக் கடிதில் தோல்வி யெய்துமென்று சபித்ததும் என்னுமிவ்வரலாறுகளை அரிவம்சம் விண்டு புராணம் பாகவதம் இவற்றால் தெரிந்துற்று நோக்கவல்லார்க்குக் கண்ணன் முன்னிலையின் எம்பெருமான் உதாசீநம்புரிந்தமைக்கு இஃதோர்காரணமாதலினிது புலப்படுமென்பதாம்.

அரிவம்சத்தில் ஆயிரம்புயங்களின் தினவுமிகுதியினால் யுத்தத்தைப் பெரிதும் வேண்டினோனாய் அத்தியந்தகர்வமுடையனாகிய வாணன் அந்தக் கர்வசாந்தியின் பொருட்டுச் சிவபிரானால் வரமளித்தவியாசத்தால் சபிக்கப்பட்டானென்று சூசிக்கப்பட்டது. "அதன்பின் பகவானாகிய ஏற்றுக்கொடியோன் சிரித்துக்கொண்டு சொன்னான். வாண, உனக்கு யுத்தம் உண்டாம். எப்பொழுது அதனைக் கேள். தாநவ, உன்னுடைய சுவஸ்தாநத்தில் தாபிக்கப்பட்ட இந்தத் துவசத்தின்து பங்கம் எப்போதுளதாம், தாத, அப்போது யுத்தமுளதாம்" என்பது அரிவம்சவசநம். ஈண்டுச் சிரித்துக்கொண்டு என்றவதனால் யுத்தப் பிரார்த்தகத்திற்குச் சிரிக்கப்படுந்தன்மை சொன்னமையாலும் சுவகிருகத்தில் தாபிக்கப்பட்ட மயூரத்துவசபதகரூபமாகிய துர் நிமித்தமெழுந்த அநந்தரம் யுத்தமுளதாமென்று சொன்னமையாலும் மேல் வரும் யுத்தத்தில் அவனுக்கு அவசியம் அபஜயமுளதாமென்று சூசிக்கப்பட்டது. பாகவதத்திலோ இப்பொருள் வெளிப்படையாகவே சொல்லப்பட்டது. "மகான்மா வாகிய பலியினது புத்திரர் நூற்றுவருள் முன்னவனாகி வாணனுளனாயினான். சகத்திரவாகு. தாண்டவத்தில் வாத்தியத்தினால் மிரிடனை மகிழ்வித்தான். சர்வ பூதேசன் சரண்ணியன் பக்தவற்சலனாகிய பகவான் வரத்தினால் மகிழ்வித்தான். புராதிபன் வரத்தை வரித்தான். அவன் ஒருகாலத்துத் துர்ப்புத்தியுடையனாய் சூரியவர்ணமுள்ள கிரீடத்தால் அவனது பதாம்புயத்தைப் பரிசித்துப் பக்கத்தில் வதிந்து கொண்டிருந்த கிரிசனை நோக்கிச் சொல்லுவானாயினான். மகாதேவ, லோகங்களுக்குக் குருவும் ஈசுவரனும் அபூர்ணகாமர்களாகிய புருடர்களுக்குக் காமரூபதெய்வத்தருவுமாகிய நின்னை வணங்குகின்றேன். ஆயிரம் புயம் நின்னால் அளிக்கப்பட்டது எனக்குப் பாரமாத்திரத்திற்கேயாயிற்று. சமமாக எதிர்நின்று பொர வல்லவனை நின்னைத்தவிர மூவுலகினும் பெறுகின்றிலேன். தினவினால் நெருங்கிய புயங்களினால் திக்குயானைகளைப் பொருமிச்சையுடையனாய் மலை களைப் பொடிபடுத்திக்கொண்டு சென்றேன். அவைகள், பயந்தனவாய் விரைந் தோடின. பகவான் அதைக்கேட்டுக் குரோதமுடையனாய் 'உனது துவசம் எப்போது

ஒடியும், மூட, எனக்குச் சமமானவனால் உனது கர்வத்தை நாசம் பண்ணுவதாகிய யுத்தம் உனக்கு உண்டாகும்" என்பது பாகவதவசகம். விட்டுணுபுராணத்தும் "மைத்திரேய, வாணன் திரிலோசகன் முன்னே வணங்கிச் சொல்லுவானாயினன். தேவ, ஆயிரம் புயங்களினால் யுத்தமின்றி வருந்துகின்றேன். எனது இந்தப் புயங்களுக்குச் சாபல்லியத்தை விளைவிக்கும் யுத்தம் உளதாமோ? யுத்தமின்றிப் பாரத்திற்கே. எனது புயங்களினால் என்னை?" என்று கேட்ட வாணனை நோக்கிச் சிவவசநம். "வாண, என்று உனக்கு மயூரத்துவசபங்கமுண்டாம் அன்று அத்தியந்த பயங்கரமாகிய யுத்தத்தை அடைவாய். அதன்பின் மகிழ்ச்சியனாய்ச் சம்புவை வணங்கிக் கிருகங்களிற் போயினான். ஒடிந்த துவசத்தை மகிழ்ச்சியனாகிய அவன் கண்டு மிகுமகிழ்ச்சி அடைந்தான்" என்றுரைக்கப்பட்டது. அற்றேல், இப்படியானக் கால் "சையநுசிதமாம் விடயத்தெத்துணையுங் கிரௌரியங்கண்டிடத்தகாதே" என்று பின் சொல்லியதற்கு விரோதமன்றே? வாணன் சபிக்கப்பட்டானென்பது யாது இதைக்காட்டினும் அதிகம் கிரௌரியம் மற்றியாது? அவனது பிறவிதொட்டுக் கைவந்த சிவபத்தி பரிபூரணமாகிய தபசினால் பிரீதி செய்யப்பட்ட சிவனால் புத்திரத்தன்மையால் கிரகிக்கப்பட்டு இவன் கந்தனுக்கு அநுசனென்று தேவியின் பொருட்டுச் சமர்ப்பிக்கப்பட்டான். கந்தசுவாமியினாலும் அநுசமுறையில் வைத்துக் கொண்டாடப்பட்டானென்று அரிவம்சத்திற்றானே சொல்லப்பட்டது. ஈண்டு யுத்தப்பிரார்த்தகம் அநுசிதமெனின் அப்போது இது தகாது. வரம் பயனற்றது என்று புத்தியை உபதேசித்தலே பொருத்தம். முன்னே வணங்கி யுத்தப்பிரார்த்தகம் செய்த சமயத்தில் சாபத்தை அளித்தல் உசிதமன்று. ஆதலால் தான் வேண்டியதை அளித்தவனாய்த் தனக்கு அன்பனாயிருந்த பலியை விட்டுணு கபடத்தினாற் சிறைப்படுத்தியது எது அதின்வைத்து இதற்கு யாதும் விசேடமில்லை. இதுபோலவே பலிக்கும் அந்தந்தக் கர்மாநுசாரிகளுக்கும் தேவனால் இங்ஙனம் செய்யப்பட்டது என்று இந்தப்பரிகாரமே சொல்லப்படுமென்று சங்கித்து அதினின்றும் இதற்கு விசேடத்தை யெடுத்துணர்த்தும் பொருட்டு "அசுரபாவத்தின் சிதைவினின் பொருட்டே" என்று சாபப்பிரயோசநம் சொல்லப்பட்டது. ஈண்டுத் தாற்பரியமிது: சிவபிரானால் எவர்களுக்குக் காணாபத்தியமாத்திரந்தான் அளிக்கப்பட்டது அவர்களுக்கு அவரவர் சௌரியமுதலியவற்றால் ஆச்சரியசீலத்துவமேனும் சந்நிதியில் கர்வமேனுமுளதாகாதென்பது மரியாதை. அதனாலன்றே சௌழுத்திக பருவத்தில் கோரசாந்தர்களாயும் பலவேறுவகைப்பட்ட ஆகாரங்களையுடையர்க ளாயும் அதிபீடணர்களாயும் பலவேறுவகைப்பட்ட ஆயுத்தாரிகளாயுமுள்ள சிவபாரிடர்களையெடுத்து 'காமகாரகரர்கள், சித்தர்கள், திரைலோக்கியத்திற்கும் ஈசுவரேசுவார்கள், நித்தியாகந்தர்கள், மிகு மகிழ்ச்சியர்கள், வாகீசர்கள், விமற்சரர்கள், அட்டகுணமாகிய ஐசுவரியத்தைப் பெற்றும் எவர்கள் ஆச்சரியத்தை அடைகின்றிலர், எவரது கருமங்களால் பகவானாகிய பவன் என்றும் ஆச்சரியமடைவன், மநோ வாக்காய நிரதர்களை ஔரசர்களாகிய புத்திரர்கள் போலப் பாதுகாக்கின்றான், சுருதத்தாலும் பிரமசரியத்தாலும் தபசினாலும் தமத்தாலும் எவர்கள் சூலாங்கனை இனிது வழிபட்டு அவனது சாயுச்சியத்தைப்பெற்றார்கள், பகவானும் இறந்தன எதிர்வன நிகழ்வனவற்றிற்குப் பிரபுவுமாகிய சங்கரன் பார்வதியோடு ஆத்மபூதர்களும் சர்வபூதகணங்களுமாகிய எவர்களோடியைந்தோன்" என்று அவ்வியல்பு சொல்லப்பட்டது. ஈண்டுக் கூறியவாற்றால் சாக்ஷாத்புத்திரன்றான்

அநுசிதவிஷயத்தில் தொழிற்பட்டோன் புத்தியுபதேசத்தை என்று கொள்வனென்பது நிச்சயமாயின் அப்பேர்தன்றே அதற்குசிதமாகிய நிக்கிரகத்தினாலேனும் அவன் அதினின்றும் விடுவிக்கற்பாலனென்பது நீதியாம். இந்த வாணனோவெனின் கேவலம் புத்தியுபதேசத்தால் அதினின்றும் விடுவிக்கப்படற்குரி யானல்லனென்பது சிவபிரான்பால் வாணன்வசநங்களாற்றானேயறியப்பட்டது. எங்ஙனம்? "தேவர்கள் சித்தர்கள் மருத்கணங்கள் பலமுறை வெல்லப்பட்டார்கள். நினது பற்றுக் கோட்டினால் சைந்நியங்களோடுகூடிய என்னால் வலிமதமிகுதியினால் அவர்கள் தோல்வி செய்து பயமுறுத்தப்பட்டார்கள். எனது அபஜயத்தில் ஆசையிலர், நாகபிருட்டத்தையடைந்து சுகமாக வசிக்கின்றார்கள். அந்த நான் யுத்தத்தினிராசை யுடையோனாய் இப்போது உயிர்வாழ்க்கையை வேண்டுவேனல்லேன். யுத்தம் செய்யப் பெறாத எனக்கு இந்தப் புயங்களினது தாரணம் விருதா. யுத்தத்தினது வரவு உளதாமோ? அதனைச்சொல்லுக. தேவ, யுத்தமின்றி எனக்குப் பிரீதியில்லை. எனக்கு அருள்குதி" என்பது வாணன் வசநம். இப்படியே சிவபிரான்பால் வராபாசமாகிய சாபத்தை அடைந்து தனது நகரத்தைச் சேர்ந்தவன் "அநுக, உனக்கு மநசினது பிரியத்தைத் தெரிவிக்கின்றேன்" என்று கும்பாண்டனை நோக்கிச் சொல்லினானாக "விட்டுணுவினாற் பந்திக்கப்பட்ட பலிக்கு வீட்டுபாயமும் திரை லோக்கியராச்சியப்பேற்றுபாயமும் சிவப்பிரசாதத்தால் அடைந்தவனாகின்றான்" என்று கும்பாண்டனாகிய அம்மந்திரி கழற, வெகுகாலமாக யுத்தத்தை விரும்பியிருந்த நான் வரற்பாலதாகிய பெரிய யுத்தத்தை அடைந்தவனாகின்றேன்" என்று வாணன் சொல்லினானாகக் கும்பாண்டனாகிய அம்மந்திரியினால் எப்படிப்பட்ட வரம் பிரார்த்திக்கப்பட்டதென்று வருத்தத்தோடுரைக்கப் பட்டோன் அத்தகைய சுவகிருகத்தில் தாபிக்கப்பட்ட மயூரத்துவசத்தினது பதநாநந்தரமே நிகழ்ந்த உதிரவருடம் முதலிய மகோற்பாதத்தையும் கண்டும் இனிவரும் யுத்தநிச்சயத்தால் மகிழ்ந்தோனாயிருந்தானென்று விரித்துரைக்கப்பட்டமையாலும் புத்தியுபதேசத்திற்குரியனல்லனென்பது வெளி பெறவுரைக்கப்பட்டது. வாணனும் புத்திரமுறைமையால் என்றுகொள்ளப்பட்டோன் ஆயிரம் புயபலத்ததாகிய அசுரபாவத்தினின்றும் நழுவிச் சிவ பாரிடமரியாதையில் வைக்கப்படத் தக்கவனென்க. அதனால் அதன் பொருட்டு வரமளித்த வியாசத்தால் சாபமளிக் கப்பட்டதென இங்ஙனம் ஔதாசீந்தியத்தில் சாபந்தான் ஒரு காரணமாத றெளிக்கப்பட்டது. (43)

**தேவவாசகத்தைப்போற்றுதல்புரிந்ததேவியாலுடைநிமித்தமதா**
**யாவயின்விளைக்கப்பட்டதுசமரசம்பத்தாங்கிறைவவீசாந**
**வாவயினின்னாற்கண்ணன்முன்னிலையாற்புயவபலேயத்தினின்று**
**மோவியவ்விவனுங்கணாதிபத்தியத்தினுய்க்கப்பட்டனனுயிர்க்குயிரே** 44

(எ-து) ஒருநாள் சிவபிரான் நதி தீரத்தில் திவ்வியகந்நியைகளாற் சூழப்பட்ட உமைசகிதமாகக் கிரீடித்திருந்தானாக அங்கே வந்த வாணன்மகளாகிய உஷை உமைபாற்சென்று வழிபட்டுத் தனக்குமிவ்வியல்பினனாகிய நாயகனுளனாவனோ வென்றுட்கொண்டு நின்றாளாகக் கருணாநிதியாகிய சிவ பிராட்டியார் அதனைத் திருவுளங்கொண்டு அவளை நோக்கிக் "குழந்தாய் உனக்கு மநோகரனாகிய நாயகன்

வருவான், வைகாசிமர்சத்திற் சுத்தத்துவாதசியில் நீ அவனைச் சொப்பநத்திற் கண்டின்பநுகர்வாய். அவனே கண்கூடாகவந்து உனக்கு நாயகனாவானென்று வரங் கொடுத்தாளாக அவளு மநநாளிலப்படியே சொப்பநத்திற்கண்டு உடனே யெழுந்து தன் சகியாகிய சித்திரலே கைக்கு அதனைத் தெரிவித்து அநேகம் இளைஞர் வடிவங்களையெல்லாம் அவளைக்கொண்டு சித்திரிப்பித்துப்பார்த்து அவற்றுள் அநிருத்தன் வடிவமெழுதப்பட்ட அவசரத்தில் இவனே தனது பிரியநாயகனென்று தெரிவித்தாளாதாற் பிறரை மறைத்து அத்துவாதசிதிதியிற்றானே உஷையைச் சொப்பநத்திற்கண்ட அவ்வநிருத்தனுக்கு நிகழ்ந்த வரலாறுகளைத் தெரிவித்து அவனுடன்பட உடனே அவனை வாணபுரத்தில் உஷைமருங்கிற்சேர்ப்ப உஷை நேரே அவன்பாற்கலந்தின்பநுகர்ந்திருந்தாளாக இந்நிகழ்ச்சிகளெல்லாம் சிலசிந்நங்க ளால் வாணன் தெரிந்து அநிருத்தனை நாகபாசத்தாற் கட்டிவைத்தானாக, அப்பொழுது அநிருத்தன் தேவியைத் துதிப்ப அவள் துர்க்காரூபங்கொண்டு பிரசந்தையாய்த் தனது கைந்துதிச்சுண்டுதல்மாத்திரத்தால் மிக இறுகிய நாக்பாசக் கட்டை நெகிழ்வித்து வேதநையைத் தீர்த்துக் கண்ணன் விரைவில் வந்து வாணனுடைய புயங்களைக் கொய்து அவனது கருவத்தைத் தொலைத்து நாகபாசத்தைப் புறம்பொழித்து உன்னைத் துவாரகைக்குக் கொண்டு போவானென்று வரங்கொடுத்துச்சென்றாளாதலால் சிவபிரான் முன் சொல்லிய பிரகாரம் உஷைநிமித்தமாக அந்தத் தேவிவாசகத்தாலே போர் விளைந்தமையால் அவளது அநுக்கிரகவசந்சாபல்லியத்தின் பொருட்டுத்தான், அப்பொழுது கண்ணன் முன்னிலையால் புயகருவத்தினின்றும் நீக்கிச் சுராசுர பதங்களுக்கெல்லாமேலதா யெத்துணையுமுயர்ந்த சிவகணாதிபத்தியத்தில் வைக்கப்படும் சிவனருள் வாணனுக்கு வந்துகைகூடியமையினாற்றான் கண்ணன் முன்னிலையிற் சிவபிரான் ஔதாசீந்நியம் புரிந்தானென இதுவுமதற்கோர் காரணமாதல் தெளியப்படுமென்ப தாம்.

மேற்கூறிப்போந்த வரலாற்றை அநுசரித்ததாய் இனிவரற்பாலதாகிய யுத்தத்தினது அவசியநிகழ்ச்சிக்குக் காரணமாகிய தேவிவசமும் ஆண்டுப் பிறிது மோர்காரணமென்பது முடிபு. இங்ஙனம் அரிவம்சத்திற்றானே வாணசாபாநந்தரம் விரித்துரைக்கப்பட்டது. "ஒருகாற் பகவானாகிய இந்துபூடணன் திவ்வியகந்நியைகள் முதலியோராற் சூழப்பட்டோனாய் உமையோடு கூடி நதிதீரத்தில் விளையாடல் புரிந்தான். ஆண்டு வாணபுத்திரியாகிய உஷை மகேசுவரியைச் சேவிப்பவளாய் "எனக்கும் இப்படிப்பட்டபர்த்தா உளனாவனோ" என்று இவ்வண்ணம் சிந்தித்தாள். கருணாநிதியாகிய பவாநி அவளது அபிப்பிராயத்தை அறிந்து, கல்யாணி, மநசிற்கியைந்தோனாகிய பர்த்தா உனக்குளனாவன். வைசாகசுத்தத்துவாதசியில் எவன் சொப்பநத்தில் உன்னோடு இன்பநுகர்வான் அவனே பின்பு உனக்கு நெடுகப் பர்த்தாவாயிருப்பான்" என்று சொன்னாள். அவள் அப்படியே அந்தத் திதியில் சொப்பநத்தில் கிரீடிப்பவனாக அழகனைக் கண்டு தானே யெழுந்து விரகத்தின்மிக்க வளாயினள். அவளது சகியாகிய சித்திரலேகை அவளால் சொப்பநம் தெரியப்பெற்று மூவுலகத்தும் புகழ்படைத்த இளைஞர்களை எழுதிக்காட்டினாள். அநிருத்தன் எழுதப்பட்ட பொழுது வாணனது கந்நியை கண்டு இவனே இரவில் என்னாற் காணப்பட்டான் என்று அவளுக்குச் சொன்னாள். அந்தத் தெய்வப்பெண் அப்போதே

துவாரகைக்குப் போய் ஆண்டு நாரதனால் தாமசிவித்தையைப்பெற்று அவனது கோயிலை யடைந்தாள். அவளே எல்லா மகளிர்களையும் அந்த வித்தையினாற்றானே மறைத்தாள். உத்தம மகளிர் நூற்றுவரோடு கிரீடித்திருந்தவனும் அந்தத் திதியிற்றானே உஷையினது இன்ப நுகர்ச்சியைச் சொப்பநத்திற் கண்டவனும் அவளிடத்திலேபற்றிய மனசுடையவனுமாகிய அந்த அநிருத்தனுக்கு அந்த விருத்தாந்தத்தைத் தெரிவித்தாள். அதன்பின் அவனது அநுமதியினால் அவள் அவனைக் கிரகித்துக்கொண்டு கணத்தில் வாணநகரத்தையடைந்து உஷைக்குச் சமீபத்தில் விட்டாள். உஷை அதிமகிழ்ச்சியளாய்க் காக்கப்பட்டுக் கந்நியர்களது அந்தப்புரத்தில் வசிக்கின்ற அவனோடுதானே இன்பநுகர்வாளாய்க் காவலர்களால் சிந்தங்களால் அறியப்பட்டாள். அதன்பின் குரோதமுடையனாகிய வாணனால் ஏவப்பட்ட அசுநசைந்நியங்களை அவர்களது ஆயுதங்களையே பிடுங்கிக்கொண்டு பிரத்தியும்நதநயனாகிய அநிருத்தன் கொன்றான். அதன் பின் வாணன் தானே யுத்தஞ் செய்து பின்.மாயையைப் பற்றி நின்று நாகபாசங்களாற் கட்டினான். ஆண்டு அவனைக் கொல்லப்படுவானாமாறு தெரிவித்தான். அரிநாரதனால் இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுச் சேநைகள் பிரத்தியும் நனோடியைந்து பொருதற்கு வாணபுரத்தைச் சீக்கிரமடைந்தான்" என. ஈண்டு உஷாமூலமாகிய யுத்தத்திலே தேவிவசநசாபல்லியத்தின் பொருட்டுத் தான், நாகபாசத்தாற் கட்டுப்பட்ட அநந்தரம் அநிருத்தனால் துதிக்கப்பட்டு அங்கே வெளிவந்து கைந்நுதிச்சுண்டுதலால் வேதநையைப் பரிகரிக்கும் பொருட்டுத் திடமாயிருந்த நாகபாசக்கட்டை நெகிழ்வித்து இப்போது கண்ணன் வந்து வாணனது புயத்தைச் சேதித்துக் கருவத்தை ஒழித்து நாகபாசங்களைப் புறம்பொழிவனவாகச் செய்து உன்னையும் துவாரகையிற் சேர்ப்பான் என்று துர்க்காரூபத்தினின்றுரைத்த அந்தத் தேவியினது அநுக்கிரகவசந சாபல்லியத்தின் பொருட்டுத்தான் அந்த யுத்தத்தில் சிவபிரானால் ஔதாசீந்நியம் செய்யப்பட்டதென இது பிறிதோர்காரணமாதலறிக. (44)

**அன்பர்பானின்னினதிகமாந்தன்மையருள்வள்ளால்கருதுகின்றாய்மற்**
**றென்பதியாதம்மெவெதனைத்தானந்தயதுப்பிர்வீரனுமெந்தாய்**
**கொன்பொருகங்கைதநயன்முன்பரிதிகைக்கொளீஇயநுசரித்திட்டா**
**னின்பமேயன்பேயதுவுநின்றனக்கோரியல்பதாவிசைத்திடப்படுமே.** **45**

(எ-து) தன்னின்வைத்துத் தனது அன்பர்களது உயர்ச்சியைச் சிறப்பிக்குமியற்கை சிவபிரானுக்குண்மை குபேரன் முதலியோரிடத்துக் காணப்படுதலினாலும் அக்குணத்தையே தானுமதுசரித்தன்றே கண்ணனும் பாரதயுத்தத்தைப் பாண்டவ ஜயம்வரை அநாயுதனாயிருந்தே முடிப்பேனென்று பிரதிஞ்ஞையை யளித்த தானே தனது பிரதிஞ்ஞையைக் கைவிட்டு உன்னைப் போரிற் படைக்கலமெடுக்கச் செய்கிறேனென்று மொழிந்த தன்னன்பனாகிய வீட்மெனது பிரதிஞ்ஞையை முடித்தலே பெரிதாக மதித்துச் சக்கரப்படை கையிற்கொண்டு அவனது பிரதிஞ்ஞையைப் பாதுகாத்தானாதலினாலும் அன்பர்களது அபிவிருத்திக்குப் பாங்குபட நின்று அவரது உயர்ச்சியைச் சிறப்பிக்குமிவ்வியற்கைக்குணமும் ஈண்டுச் சிவபிரான் கண்ணன் முன்னிலையில் ஔதாசீந்நியம்புரிந்தமைக்கு ஓர்காரணமாதல் தெளியப்படுமென்பதாம். (45)

**வள்ளலேயவற்குச்சௌரியமதிகம்வழங்கப்பட்டதுநின்னாலன்றே**
**யெள்ளறீரிசையோய்கலையினாலேனுங்காத்திடாயங்கதையென்னி**
**னுள்ளுறுபொருளேநின்னுரைமுழுதும்பொய்யெனவாசங்கித்துலகோர்**
**விள்ளுமெய்வேதாகமங்களினிடத்தும்விமுகராகுபமெய்யர்மெய்யே.** 46

(எ-து) மைநாக பருவதத்தில் கண்ணன் பூர்வரூபத்தில் சிவபிரானை நோக்கித் தவமிருந்து பிரீதிசெய்தானாக அவனுக்குப் பிறர்க்கெல்லாமரிய அநேகவரங்களைப் பிரசாதித்தபின்பு "நீ போர்நேருங்கால் நம்மினும திகனாவை" யென்று சொல்லப் பட்டதும் வரமளிக்கப்பட்டபின் துரோணபருவத்துப் பிரதிபாதிக்கப்பட்டதும் கற்பக தருவைக்கொணருஞ் சாமர்த்தியம் வேண்டிக் கண்ணன் சிவபிரானைப் பிரார்த்திக்க அவன் அக்கண்ணனைநோக்கி "கண்ண, நீ முன் மைநாகத்தை யடைந்து என்று தவஞ்செய்தாயோ அன்றே நிகழ்ந்த எனது வசநத்தைச் சிந்தித்துத் தீரவியலை அடை

குதி. கொல்லப்படாதோனும் வெல்லப்படாதோனுமாகுதி. என்னினும் சூரதரனா குதி என்று எது சொன்னேன் அப்படியே பிறிதில்லை" யென்றற்றொடக்கத்து வசநங்களால் அரிவமிசத்தில் திடஞ்செய்யப்பட்டதுமாகிய இவற்றால் சிவபிரான் ஒருகால் ஒருவாற்றால் தன்னினும் அதிகத்தன்மை தன்னன்பனாகிய கண்ணனுக்கு அளித்தானென்பது புலப்படுதலினாலும் அப்படிப்பட்ட கண்ணனது சௌரியத்தைக் கலைமாத்திரத்தேனும் சிவபிரான் பாதுகாவாது எதிரிட்டுநிற்பனெனின் கண்ணன் தோற்றுப்புறங்கொடுப்ப அதனால் அச்சிவபிரான் கண்ணற்கு முன்னுரைத்த வசநம் பொய் பட்டுப்போமாதலினாலும் ஆப்தருள் அதிபரமாப்தன் சிவபிரானென்பது உலகிற் பெருவழக்காதலினாலும் அதுபற்றியன்றே அவனுரைத்த வேதாகமங்களை அதிபரமாப்தபாரமார்த்திகவாக்கியமென்று உலகம் கொண்டாடுமாதலினாலும் ஈண்டுக் கண்ணன்விடயத்தில் சிவபிரானுரைத்தவசகம் பொய்படுமெனின் அவன் வசநமாகிய வேதாகமங்களினிடத்தும் பொய்மை உளதாங்கொல்லெனக்கொண்டு உலகர்கள் பராமுகஞ்செய்ய நேர்ந்து ஏதப்பாடு நிகழ்தற்குப் பெரிதுமிடமுண்டா மாதலிமாலும் வேதாகமங்களை யுரைத்து உலகிற்குப் பொய்யுணர்வுகளைந்து மெய்யுணர்வளித்து மெய்யருண்மெய்யனென விளங்கும் அதிபரமாப்தவியல்பாகிய அது ஈண்டுச் சிவபிரானை ஔதாசீந்நியம் புரியச்செய்ததென இதுவும் அதற்கோர் காரணமாதல் தெளியப்படுமென்பதாம். (46)

**இன்னகாரணங்கடம்மினாலன்றேயெதனிடைச்சிறிதுகாட்டிடவே**
**முன்னவகாமனந்தகன் மும்மையெயிலுளோர்சலந்தராதிகளான்**
**மன்னவவடையப்பட்டதுசலபத்துவநின்னாலவனிடைமதியிற்**
**றுன்னினோயந்தச்சகசதேசத்தெத்துணையதுந்தோற்றப்பட்டிலதே.** 47

(எ-து) ஈண்டுக்கூறிய இந்தக் காரணங்களினாலன்றே சிவபிரான் ஔதாசீந் நியம் புரிந்தான் அதுவன்றிக் கண்ணன் முன் எதிர்நின்று அவனை வெல்ல முடியாமை பற்றியன்றென்பது தேற்றம். இவ்வுண்மை முன் அவனது வலியை யோர்ந்து அஞ்சி ஒதுங்காது எதிர்த்த காமன் அந்தகன் முப்புரவாசிகள் சலந்தரன் முதலியோர் அவன் ஒன்றமெடுத்து முயலாதிருப்ப அவனது தேசோலேசமாத்திரத் தினாற்றானே விளக்கில் விட்டிலோடொப்ப உயிர்மடிந்தார்களெனின் அன்னோர்க்

கெல்லாம் அவ்வக்காலங்களில் எதிர்நிற்கலாற்றாத நாராயணன்றானே தனது அமிச மாத்திரத்தாற் கண்ணனாயவதரித்ததுண்மையெனின் அவ்வியல்பினனாகிய கண்ணன் பால் அன்னோர்பாற் காட்டியதேச்சு எத்துணை யேனும் எம்பெருமான் காட்டுவனெனின் அப்பொழுது அவனடையுங்கதி எப்படியாமோவென முன்பினொத்து ஆராயுமேதகையோர்க்கினிது புலப்படுமென்பதாம்.

இவற்றால் அகத்தனவும் புறத்தனவுமாகிய சிவனியல்புகளாற் கண்ணன் முன்னிலையிற் சிவபிரான் புரிந்த ஔதாசீந்நியம் அவனது பெருமையை விளக்குவ தோர்பேரருட்செயலாமாறுகாட்டி மூர்க்கனும் முதலையுங் கொண்டது விடாவென் னுமிலக்கணத்தராய. விழிதகையோர் தமதுவல்வினைவயத்தாற் சிவபிரானை யிகழ்ந்து வெறுங்கதைகட்டி இம்மையிற் றமது கயமையை வெளியிட்டு மறுமையில் எரிவாய் நரகத்துக்கிரையாகுவோர் சிவபிரான் கண்ணற்கபசயப் பட்டானென்று புலம்பும்புலம்பல்கள் சத்துக்களவைக்கட்கத்துக்களாய்க் கழியு மென்பது வியவகரித்து விளக்கப்பட்டது. இனி மயாநவாசம்பற்றி இழுக்குரைப்பார் கூற்று மறுக்கப்படுமாறு. (47)

**அருண்முதாலிந்தச்சராசரநின்கணங்கியாற்றகிக்கப்பட்டளவின்**
**மருவியபுவநப்பரப்பனைத்தையுமேமகாமயாநம்மெனமதித்தே**
**யொருவனேயாண்டைநின்றனியிருப்பையுணர்வுசான்றுலகைவாழ்விக்கும்**
**பெரியவர்மயாநவாசமென்றெடுத்துப்பேசுபபிறைமுடித்தவனே.** **48**

(எ-து) சரம் அசரமாய் அண்டசம் சுவேதசம் உற்பிச்சம் சராயுசமாய்த் தேவர் மனிதர் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரங்களாய் எண்பத்து நான்கு நூறாயிரம் யோநிபேதங்களாய் விரிந்த சீவகோடிகெளெல்லாம் வினைகளைச் செய்தும் வினைப்பயன்களை நுகர்ந்தும் வரும் சகலாவஸ்தையில் வந்த முயற்சி மிகுதியாலாகிய இளைப்பொழித்தற்பொருட்டு அவர்களைக் கேவலாவஸ்தையில் வைத்து முயற்சியின்றி வாளாவிருக்கு மாறுசெய்தலும், அவருட்பக்குவமலராய் முத்திவேட்டு அதனை அப்போ தெய்துதற்குரியராய்நின்றோரை அம்முத்திநிலத்தின் கண் முளைப்பித்து வாழ்வித்தலும் சிவபிரானுக்கோர் முக்கிய கிருத்திய மன்றே! அதன் பொருட்டுக் கர்மபோகோப யோகிகளாகிய தநுகரணபுவந போக மென்னும் இத்திறத்துப்பிரபஞ்சத் தொகுதியை அச்சீவர்களுக்கு வேறாக்கி யொடுக்கு தலாகிய சங்காரம் அவசியம் வேண்டப்படுவதொன்றன்றே அதுதான் அரிதின் முயல வேண்டாது ஒருகாற் சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றும் போதரும் ஒரு சிறு பொறி மாத்திரத்தாற்றானே நிகழ்த்தப்பட்டு அவற்கோர் லீலைமாத்திரமாய் முடிவதொன்றன்றே! அங்ஙனம் எல்லாம் தன்பாலொடுங்கிய அவ்வவசரத்துத் தானொருவன்பாலொடுங்குவதும் ஒருவன் தன்னையொடுக்குவதுமென்னும் இந்நிகழ்ச்சிக்குரியவினைமுதல் தன்னைவிட வேறொருவனின்றி ஒப்பாருமிக்காரு மில்லாத தன்னந்தனித்தலைமைப்பழம் பொருள் தானோருவனேயாய் ஒரு பெற்றிய னாய்ச் சேடித்து நிற்போன் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய அச்சிவபிரானன்றே! அவ்வவசரத்தில் எல்லாமொடுங்கிய அத்தனி வெளியே மகாமயாகமென்றும் ஆண்டுத் தனியனாய் முதல்வனொருவனேயாயிருக்கும் இருப்பையே மயாநவாசமென்றும் இருக்குமவனையே மயாநவாசியென்றும்

# பிரமதருக்கஸ்தவம்

உண்மையுணர்ந்தோர் கூறுபவாதலின் அக்கூற்றுப் பொய்யாகிய ஈண்டை இவ்வுலகியல் வாழ்வைப் பொய்யெனத் தம்மறிவின்கட்கண்டு அழித்து மெய்யாகிய வீட்டியல்வாழ்வை வேட்டுநின்ற முத்திகாமிகளுக்கு அவர் கருத்தை முடிப்பதோ ருறுதி மொழியாமாதலினாலும், இவ்வுறுதிமொழியைக் கடைப்பிடித்துத் தனி முதலாகிய சிவபிரானைச் சரண்புகுவோர் சாதலும் பிறத்தலுமுதலிய சகல கிலே சங்கட்குமிருப்பிடமாய் அமங்களமாய இப்பிரபஞ்சத்தொடர்கணீங்கி அவ்வெவ் வகைக்கிலேசமுநுழையாது மங்களமாயமைந்த பிரபஞ்சாதீதமாகிய சிவபுவநத் தொடர்புடையராய்ச் சகலசமுசாரதுக்கவிநிர்முக்தபதிகளாய்ச் சிவமேயாய் வாழ்தல்'ஒருதலையாதலின் அம்மங்களவாழ்க்கைக்கிருப்பிடமாய்ப் பரமசிவகை வல்லிய நாயகனுக்கியற்கையானமைந்த அத்திவ்வியஸ்தலத்தை அடைதற்குப் பிரபஞ்சத் தொகுதி முழுதும் சூநியப்பட்ட அவசரத்தின் விளங்கப்பெறும் மயாநவாசம் இன்றியமையாப்பெருஞ்சிறப்பினதாகிய மகாசாதகமாமாதலினாலும், அதனால் அது மங்களங்களெல்லாவற்றுள்ளும் பரமமங்களமென்று முமுட்சுக்களாற் பெரிதுமாதரிக்கப்படுமாதலினாலும், அதனையடைதற்குரியோர் அதன் பெருமையை யறிந்து ஆதரிக்கும் உத்தமர்களாகிய அம்முமுட்சுக்களே தவிர இப்பொய்யுலக நீச வாழ்க்கையுட்பிணிப்புண்டு அதன்கட்பொய்பலநினைந்து பொய்பலபேசிப் பொய்பல செய்து பொய் பல நுகர்ந்து பொய்யிடைப்புரண்டு பொய்யினும் பொய்யாகிய இவ்வுடலை மெய்யெனக் கருதிப் பொய்யிடைமடியும் புபுட்சுக்களாகிய இச்சமுசாரிகள்ல்லராதலினாலும், பொய்யராகிய இவர்க்கு மெய்யதாகிய அப்பிரபஞ் சாதீதபரமமங்கள சிவஸ்தலம் பெரிதும் மாறுபடத்தோன்றி அத்தியநுசிதமென்றி வராலெள்ளப்படுதல் பற்றி அதற்கு வருவதோரிழுக்கில்லையாதலினாலும், வலியருள் வலியராய முமூட்சுக்களுக்குரியதென்றே அநாதிசித்தமுத்தபதியினாற் சாதநம்பண்ணப்பட்ட அச்சிவஸ்தலம் மெலியருண்மெலியராகிய புபுட்சுக்களுக்கு நுழைதற்கும் நினைத்தற்கும் இடங்கொடுப்பதன்றாதலினாலும், அவரெல்லாம் அம்முத்திபுவநவிரோதியாகிய இம்மாயாபுவநத்தின்கட்டிரிந்து இதனைப் படைப்போரும் காப்போருமாகிய அயனரியென்னுமிருவர் கிருத்தியத்திற் கட்டுண்டு மோகவசத்தராய்க் கொள்ளிவட்டமும் காற்றாடியும் போல மும்மையுலகினும் மாறிமாறிச் சென்று யோநிபேதங்களிலெல்லாம் நுழைதலும் நழுவுதலுமாகிய பிறப் பிறப்பினெருங்கி யுருவழிந்து போகம் புசித்துழல்வதேதவிர அவர்கதி வேறில்லை யாதலினாலும், அக்கதியினன்னோர் சிவபிரான் மயாநவாசமுடையானென்றிகழ்ந்து கூறும் கூற்றுக்கள் அவரறிவின் பருவமட்டில் அவர்க்கியையு மேதவிரத் "தாயினு நல்ல சங்கரனுக்கன்பராயவின்னமுதமருந்தப்பெறாராய்ப் பேயராய்ப் பேய் முலை யுண்டுயிர்போக்கிய மாயன் மாயத்துட்பட்ட மநத்த" ராகிய அன்னோர்போலாகாது வீடு காதலித்துக் குறித்தடியினின்றட்ட குணமெட்டுச்சித்தி கோகநதன் முதல்வாழ்வு குலவுபதமெல்லாம் வெறுத்து நெறியறுவகையு மேலொடு கீழடங்க வெறும் பொயென நினைந்திருந்து மேலொடுகீழில்லானிறுத்துவதோர்குணமில்லான் றன்னையொருவருக்கு நினைப்பரியானொன்றுமிலானேர்பட வந்துள்ளே பொறுப் பரிய பேரன்பையருளியதன் வழியே யெங்குமிலாப் போகத்தைப் புரிந்து புகுந்தி மொறு பெற்ற அம்மெய்யுணர்ந்தாரவைக்கட் சிறிதும் பயன்படுவனவல்லவென்ப தாம்.

"அந்தியகாலத்தில் இது நின்னால் நீ செய்த நினது நேத்திராக்கிரியினது பொறியின் சிகையினால் நசிப்பிக்கப்படுமன்றே! அநேக பூதங்களை நசிப்பித்துத் தொலைக்கின்ற அப்படிப்பட்ட நினக்குக் காமன் யாகம் முப்புரம் காலன் முதலிய இவரது வெல்விமுதலியது புகழற்பாற்றன்று" என இது பாகவதத்திற் சொல்லப்படு மாறுணர்க. இதனால் சிவபிரானுக்கு மயாநவாசம் உண்டெனப்துபற்றி அதனுள்ளுறு பொருளை ஊகிக்காது மேலிட்டுநோக்கி இழுக்குமைப்பார்கூற்று, மறுக்கப்பட்டது. அற்றேல், இங்ஙனம் கூறியவாற்றால் மயாநவாசம் பற்றி இழுக்கில்லையென்ப தமைக. இழிந்தனவாகிய மயாநங்களில் சந்தியாநிருத்தஞ்செய்தல் பெருவழக்காத லின் அது பெரிதும் இழிவரவன்றேயென்பாரைநோக்கி அதனை மறுக்கவெழுந்தது வருஞ் செய்யுளென்பது. (48)

**சந்திகடம்மிற்பூதமெய்க்கணஞ்சார்பயிரவர்பத்திரைதமது**
**முந்தெழுச்சியினால்விளைந்திடுமுலகாபத்தினைமுருக்குதற்பொருட்டே**
**யெந்தையாங்கவர்கட்கிருப்பிடமாயமயாகபூமிகளிடையிறைவ**
**நந்துமத்தகையதாண்டவநீமன்னயக்குதிநெல்லைநாயகமே. 49**

(எ-து) மூன்னொரு நாள் அபுருடவத்தியனாகிய தாருகாசுரனை வதைக்கும் பொருட்டுச் சிவபிரானால் பத்திரகாளி ஆஞ்ஞாபிக்கப்பட்டவள் அத்தாருகன் திரைலோக்கியகண்டகனாயிருப்பினும் தான் லோகமாதாவாய் எல்லாரிடத்துந் தயையுடையளாதலால் அவனைக் கொல்லுதற்கண்ணிச்சைபெறாது ஓரமிசத்தினால் சிவகண்டத்துட் புகுந்து ஆண்டுள்ள காளகூடத்தின் ஆயிரத்தோரமிச மாத்திர முட்கொண்டு வெளிவந்து அதிவன்கண்மையுடையவளாய்த் தாருகாசுரனை வதைத்துப் பூதகணங்களோடு, மயாநங்களில் வசித்து அவ்வன்கண்மை மிகுதியால் உலகங்களை அழிக்கத்தொடங்கினாளாதலினாலும் அப்பொழுது சிவபிரான் ஓரமிசத்தினால் வடுகவயிரவனாய் அவள் சமீபத்தில் தோன்றி மிகுந்த பசியினாலே தந்நியார்த்தியாயழுது சயனிப்ப அவன் பாற்றயையினால் அப்பத்திரகாளி தந்நியத் தையளிப்ப அவன் அதனோடு அவளாலுட்கொள்ளப்பட்ட காளகூடத்தை வெளி செய்துண்பே னென்றெண்ணி அதிற் பாதியுண்டமாத்திரத்தே தானுமதிகுரூரனாய் அவளோடியைந்து உலகையழிக்கத்தொடங்கினானாதலினாலும் அவர்பாற்றோன்றிய பூதகணங்களும் அவ்விருவரும் மயாநத்தில் வசிப்பவராதலால் அவர் வசிக்கின்ற மயாநங்களில் அவர் முன்னிலையிற்றானே ஆநந்தமிருத்தஞ்செய்து தரிசிப்பித்து அவர் தம்மினின்று உலகம் காக்கப்படுவதென்றுட்கொண்டு சிவபிரான் சந்தியை களில் நிருத்தஞ்செய்வனென அதன்காரணம் லிங்கபுராணத்துச் சொல்லப்படவும் மகாபாரதம், வாமநபுராணம், பாகவதம் முதலியனவற்றிலும் மயாநவாசத்தின் பெருமை அதனோடொத்துவியவகரிக்கப்படவும் இவ்வுண்மைகளை உணராது இழிந்தமியாநங்களில் சந்தியைகளில் நிருத்தஞ்செய்வன் சிவபிரானென இழுக்குரைப்ப அறிவிலோர் சிலர். அவருரை மேற் கூறிய உண்மைகளை உணர்ந் தாரவைக்கட் பயன்படுமாறியாண்டையதென்பதாம்.

ஆநுசாசநிகத்தில் "மயாநவாசம் உமக்கு எதன்பொருட்டு" என்று உமையினால் வினாவப்பட்ட சிவபிரானால் "சகலபிரசைகளையும் இடர்ப்படுத்தி மயாநங்களில் வசிக்கின்ற பூதங்களை அங்கே போய் நான் வதஞ்செய்கின்றேன். அது நான்

இருத்தலினால் மோக்கவிச்சையுடையோர்க்கு மேத்தியமே" என்று சொல்லப்பட்டது. “முன் பிரமா கோரர்கள் வலியின்மிக்கோர்களாகிய பூதசங்கங்களைப் படைத்தான். அவனாற் படைக்கப்பட்ட அந்தப் பூதசங்கங்கள் பிரசைகளையெல்லாம் கொன்றன. 'உக்கிரர்களாகிய அவர்களைக் கோறலில் அவன் வலியிலனாய் என்னைச் செலுத்தினான். கோரர்கள் அங்கே என்னாற் கொல்லப்பட்டார்கள். பிரசைகளெல்லாம் காக்கப்பட்டன. எனக்கு இருப்பிடம் மயாநத்தைப் பார்க்கிலும் பூமியில் மேத்திய மிக்கது வேறில்லை. எங்கே நான் வசிக்கின்றேன் அந்த இடம் மூநிகளால் மேத்திய மென்று சொல்லப்பட்டது. ரௌத்திரவிரதத்தை ஆசாரிக்கும் மோக்ககாமர்களால் சேவிக்கப்படும். மத்தியாந்நத்திலும் சந்திகளிலும் ருத்திரனைத்தெய்வமாகவுடைய நட்சத்திரத்திலும் அங்கே ஆயுட்காமர்களாலும் அசுத்தர்களாலும் செல்லத்தக்கதன்று என்பது அதனிலைமை. எல்லாவுலகத்தினது இகத்தின் பொருட்டு மயாநத்தில் நான் வசிக்கின்றேன்" என்று இவ்வாறு சொல்லப்பட்டது. ஈண்டுக் கூறியவாறு மயாநம் சிவபிரானுக்கு இருப்பிடமாயிருத்தலினாலன்றே அதிபவித்திரமென்று கருதி நரசிம் மப் பிரீதியின் பொருட்டுத் தீர்த்தயாத்திரை செய்த பிரகிலாதன் மயர்நத்திற் சென்று அங்கே எழுந்தருளியிருக்கின்ற மகாகாலராகிய சிவபிரானை அருச்சித்தானென்று சொல்லப்பட்டது. இது வாமந புராணத்தில் "மகாகாலன், காலன், காலந்தகாரி, யமனுக்கு யமன், மிருத்தியுவுக்கு மிருத்தியு, சித்திரசரித்திரகன், மயாந்நிலயன், சம்பு, பூதநாதன், சகற்பதி, சூலதரனாகிய அவனை அவன் தரிசித்து அருச்சித்து நிடதங்களை நோக்கிச் சென்றான்" என்று சொல்லப்பட்டது. பாகவதத்திலும் நிரதிசயமாகிய சுவான்மாநந்தத்தை நுகர்ந்து நித்தியதிருப்தனாய்ச் சகலவிடய போகங்களையும் துச்சஞ்செய்து இருப்பிடம். அதுலேபநம் முதலியன எத்திறத்தவற் றினும் துல்லிய திருட்டியுடையனாகிய சிவபிரானுக்குக் கைலாசம் முதலியவற்றிற்போல மயாநத்தில் வசித்தலும் துல்லியமே என்பதை உணர்த்தும் பொருட்டு மேல்வருமாறு நிரூபிக்கப்பட்டது. ஆண்டுத்தானே, "நல்லோய், இந்தச் சந்தியிலே பகவாந் பூதபாவநன் எத்திசையினும் பூதபாரிடர்களால் சூழப்படுவோன் நடிக்கின்றான். பூதராட்டு மயாநத்தில் வரும் சுழல்காற்றினாலெழும் தூளியினால் தூசரன் பரப்பப்பட்டுப் பிரகாசிக்கின்ற சடாகலாபமுடையோன் சாம்பற்பூச்சினால் அமலமாகிய செம்மேனியுடையோன் தேவனாகிய உனது தேவரன் மூன்றினால் பார்க்கின்றான்” என்று திதியை நோக்கிக் காசிபர் சொன்னாராகப் பரமேசுவரனும் சத்துமாகிய சிவபிரானுக்கு மயாநவாசம் அங்குள்ள சாம்பற்பூச்சு முதலியன எதன் பொருட்டு என்று ஆசங்கையாக “எவனுக்கு உலகத்தில் சுவசநம், அதவா, பரனில்லை, மிகவிரும்பப்பட்டோனில்லை, வெறுக்கப்பட்டோனில்லை, நாம் விரதங்களால் அவனது சரணத்தினால் பரிசிக்கப்பட்டதை, அம்ம, புசித்து முடித்த போகத்ததாக விரும்புகின்றோம்; எவனது குற்றமில்லாத சரிதத்தைப் புத்திமான்கள் அவித்திய படலத்தைப் பேதிக்குமிச்சையுடையவர்களாய்த் துதிக்கின்றார்கள்; எவன் ஒப்புயர்வொழிந்தோனாயும் சத்துக்களுக்குக் கதி தானே பிசாசசரியையை ஆசரித்தான்; எவர்களால் நாயுண்டி வஸ்திரம் மாலை ஆபரணம் அநுலேபநங்களால் தானென்னுமியல்பிற் கொண்டாடப்பட்டிருக்கின்றது அப்படிப்பட்ட துர்ப்பகர்கள் சுவான்மாவில் ரதனாகிய எவனது அபிப்பிராயத்தையறியாதோராய் அவனது ஆசரிதத்தைச் சிரிக்கின்றார்கள்; இந்த விசுவமும் மாயையும் எவனைக் காரணமாகவுடையன; பிரமாதிகள் எவனாற் செய்யப்பட்ட சேதுவைப் பாலநம்

பண்ணுபவர்கள்; அவனுக்குப் பிசாசசரியை. ஆஞ்ஞாகரி. அகோ!! பெரியோனது சரிதம் வேடிக்கை" என்று சொல்லப்பட்டது. இதனால் சந்தியா நிருத்தம் பற்றி இழுக்குரைப் பார்கூட்ற்றுப் பயன்மேல்வைத்து மறுக்கப்பட்டது. (49)

**கறைமிடற்றிறைவவிவ்வியற்றாநின்சரிதையின்கருதுமுள்ளீட்டின்**
**முறையினையீண்டு நான் சானெவன்றானறிகுவன் மூதறிவாளர்க்**
**கறைவரியோய் நின்பெய்ருருக்குணசிந்தரத்தினாம்பெருங்தவமதுவே**
**யிறைவவெவ்வியாசத்தினுங்கிடைத்திடுவானியைந்ததுமுயற்சியீண்டெனக்கே.**

(எ-து) சிவபிரானது திவ்விய சரிதங்களினது ரகசிய முறை அவனருள் வழிப்பட்டு நின்று சேவை செய்யும் வித்தகர்களறிவின்கண் விளங்கித் தோன்றுவ தன்றி அதனையுரையின் வைத்துச் சொல்லி இத்துணைத்தென அளவு செய்து முடித்தல் அன்னோர் தமக்கும் இயலாதென்னும் அப்பெருந்தகைய தொன்றன்றே! அப்பெருந்தகையவதனை அறிதலில் சுரர் நரர் எவரும் வல்லுநரல்லரென்பது பெரு வழக்காதலின் மெய்யுணர்ச்சிக்கு எத்துணையும் அருகரல்லாத பரபக்கத்தார் அதனை அறியவல்லுநரல்லராபவென்பதீண்டைக்கண்வியப்பன்று. அன்னோர் தமது அஞ்ஞாந முதிர்ச்சி பற்றித் தமக்கு மநம் போனவாறு எப்படிக் கூறினும்கூறுக, கூறி எப்படிக் கழியினும் கழிக், அவர்க்கு முன்னமைந்த ஊழ் அவரை எந்நெறிக்கணுய்க்கினு முய்க்க, அதனால் அவர் எப்பலத்தை நுகரினும் நுகருக, ஈண்டு இதுகாறும் கூறிப்போந்த இவையெல்லாம் அவருள் நல்லூழ்வந்து கைகூடப் பெறுவாரெவர்க் கேனும் புலனாங்கால் அவர் முதல்வன் வகுத்த அருணெறிபற்றி உய்யினுமுய்க வென்றுதான், அவ்வருணெறிச்சார்பின்கண் முன்னமைந்துநின்ற சாதகராயினோர் ஒருகால் அஞ்ஞாநமுதிர்ச்சியராய அப்பரபக்கத்தார் பொய்யுரையை மெய்யுரையென நம்பி நெறிதப்பாது தாம் முன்னேபற்றிநின்ற அவ்வருணெறிக்கண்ணுறைத்து நின்று ய்கவென்றுதான் எம்பெருமான் சரிதத்துளீண்டுவேண்டுவன சிலவற்றை அவனருளுண்ணின்றெடுத்துபகரிப்ப அவ்வருட்சார்பினொதுங்கி நின்று. ஒருவாறெடு த்துரைப்ப இந்நூன் முடிந்தது. அத்தகைய இந்நூற்கண் மநம்பற்றியாராயுமாராய்ச்சி யுடையார் அளவிடப்படாத முதல்வன் சரிதத்துள் 'எள! எத்துணை மாத்திரம் எடுத்துக்கிளந்தது' வென்றெள்ளாது. இதனைச் -சிரமேற்கொண்டு ஆதரித்து ஓதப் பெறுவரெனின், இது அளவிடப்படாத பெரியோனாகிய அம்முதல்வனது நாம ரூபகுணசிந்தாமாகிய பெருந்தவத்தையளித்தற்கொருவாயின் மாத்திரமாயேனு முடிந்து முதல்வனருள் தலைக்கூடச்செய்யவல்லதென்பது இதனிய ல்பையாராயுங் காலினிது விளங்குமாதலின் இது அம்முதல்வனது பிரீதிக்கு இலக்காயதொன்றென மெய்யுணர்ந்தோரவைக்களத்துப் பெரிதும் பாராட்டப்படுமென்பதாம்.

ஈண்டு "இவ்வியற்றாநின்சரிதை" என்றவிதனால் சங்கைக்கு இடனாயுள்ள மற்றைத்தோஷங்களும் ஈண்டுக்கூறியவாறே பரிகரிக்கப்படுமென்பது சூசிக்கப் பட்டது. எங்ஙனம்? சிவபாரிடர்கள் அதிகுரூரங்களாகிய நிந்திக்கத்தக்க விர்த்தி யுடையர்களாகவும் பூதப்பிரேதபிசாச அசுரராக்கத்திரியக்குச்சாதி முதலியவற்றது வடிவினர்களாகவும் அதிபயங்கரமாகிய விகாரப்பட்ட முகம் முதலிய ஆகாரங்களையுடையர்களாகவும் என்றும் மாமிசவுண்டிமுதலிய அதிகம் நிந்திக்க த்தக்கவிர்த்தியுடையர்களாகவும் பெரும்பாலார் ஆண்டாண்டுப் பெரிதும்

வர்ணிக்கப்படுவர்கள். அரிவம்மிசத்தில் கைலாசயாத்திரையில் தவஞ்செய்திருந்த ஸ்ரீகண்ணனுக்கு வரமளிக்கும் பொருட்டுச் சிவபிரான் பிரஸ்தாநமானகாலையில் அவனது பாரிடர்கள் அப்படியே வருணிக்கப்பட்டார்கள். பரமமங்களத்துக்கு இடனாவோன் சிவனேயாகவும் ஈண்டுக்கூறியநிலைமை எங்ஙனம் பொருந்தும் என்று சங்கைக்டெனாகிய அந்தத் தோஷத்துவத்திற்குப் பரிகாரமாமாறிது. கூர்ம புராணத்தில் "பகவ, பூதபவ்வியங்களுக்கு ஈச, மகாதேவ, அம்பிகாபதி நின்னையே புத்திரனாக இச்சிக்கின்றேன். நினக்குாத்தபுத்திரனையாவது" என்று பிரார்த்தித்த பிரமாவை நோக்கிப் "பகவானாகிய நின்னால் எது பிரார்த்திக்கப்பட்டது, புத்திரக, அதனைச் செய்கின்றேன். நினக்குக் குற்றமில்லதும் ஐசுவரமும் திவ்வியமுமாகிய விஞ்ஞாநம் உளதாம்" என்று அப்படியே வரமளித்துச் சிவபிரான் அவனது முகத்தினின்றும் நீலலோகிதருத்திரமூர்த்தியை இடமாகக்கொண்டு தோன்றினான். "பிரசைகளைப் படைக்குதி" என்று அவனால் செலுத்தப்பட்டான். நிர்மலர்கள் நீலலோகிதர்கள் நரைமரணங்களற்றவர்கலாய்த் தனக்கு ஒத்தவர்களாகிய ருத்திரர்களைப் பரமேசுவரன் படைத்தான்". அதன்பின் மிருத்தியுவில்லாதவர்க ளாகிய இப்படிப்பட்ட பிரசைகளையே படைக்காதொழிக. பூதேச, சநநமரணங்க ளோடியைந்தவர்களாகிய பிறரைப் படைக்கும்" என்று பிரமா பிரார்த்தித்தான். "அப்படிப்பட்டபடைப்பு எனக்குளதாகாது. விவிதர்களாகிய பிரசைகளை நீபடை "என்று அவனையே படைத்தற்றொழிலில் நியோகித்து அதுதொடங்கிப் படைப்புத் தொழிலை யொழிந்து நிச்சலனாயிருந்தான். அதனால் தாணு என்னும் பெயருடைய னாயினானென்று சொல்லப்பட்டது. சைவம் லைங்கம் ஆதித்தியபுராணம் முதலிய வற்றினும் ஆண்டாண்டு இப்படியே உரைக்கப்படுகின்றது. ஆண்டுத் தனக்கு ஒத்த ருத்திரர்களாகச் சிவபிரானால் எவர்கள் படைக்கப்பட்டார்கள் அவர்கள் தனது உபாசநாவிசேடங்களால் தனது சாயுச்சியத்தை அடைந்தவர்களாகவும், பரமாநந்த ரூபமாகிய ருத்திரஸ்தாநத்தைப் பெற்றவர்களாகவும் சுவயம் பிரமாண்டமத்தியில் பிரமாமுகத்தினின்றும் தோன்றியோன் தாணு விசாலாக்கன் முதலிய பெயர்களை யுடையோனாகிய நீலலோகிதமூர்த்தியை இடமாகக்கொண்டு கிரீடிக்கும் அச்சிவபிரானால் லீலையின் பொருட்டுத் தனக்கு அநுசரத்தன்மை பொருந்தவே கற்பிக்கப்பட்டார்கள். பிறர்க்கெல்லாம் சிவசாதிரிசமில்லாமையினாலென்க. அவர் தாம், கூர்மபுராணத்தில், சிருட்டி அதனிவிர்த்தியநந்தரம் "அதன்பின் பிர்மாவாகிய அந்தப் பகவான் பிரீதியினால் மலர்ந்த கண்களையுடையனாய்த் தேவனை முக்கண்ணனை மாநசர்களாகிய ருத்திரர்களோடியைந்தவனாகவே பார்த்து ஞாநநோ க்கத்தால் ஐசுவரமாகிய பரதரபாவத்தை அறிந்து சிரசில் அஞ்சலி செய்து சகத்துக்கொருவனைத் துதித்தான்" என்று பிரமா சிவபிரானை அவனாற் படைக்கப்பட்ட சகலமாநசருத்திரச்கிதனாகவைத்துத் துதி செய்தானென்று தொடங்கி அவனாற்செய்யப்பட்ட துதியில் "சோகங்கள் நசித்தவர்களாகிய விவிதபூதர்களாற் சூழப்பட்ட நின்பொருட்டு" என்று அவனாற்ப படைக்கப்பட்டவர்களாய்ச் சிவசாயுச்சி யப்பேற்றினால் சகல சோகங்களும் நீங்கப்பெற்றவர்களாகிய ருத்திரர்களுக்கு "விவிதபூதத்துவம்" சொல்லப்பட்டமையானும், அவர்தாமே அநந்தரம் அதுசரத்துவத்தையடைந்தவர்கள் அதனநந்தரம் "பிரம, அநக, புத்திரத்துவத்தில் எது நின்னால் வேண்டப்பட்டது அது முழுதும் என்னால் செய்யப்பட்டது. விவிதமாகிய சகத்தை நீ படை" என்பது முதலியவற்றை உபதேசித்து அவன் மறைந்தருளிய

காலையில் "மாநசர்களாகிய புத்திரர்களோடியைந்தே கணத்தில் மறைந்தருளினான்" என்று அவனது சாகித்தியம் சொல்லப்பட்டமையானும், மகாபாரதத்தில் சாந்திபருவத்தில் “பிரபு மகான்மாவும் மகாதேவனும். விசாலாக்கனும் சநாதானுமாகிய ஈசாநனை ருத்திரர்களுக்குக் காவலனாக விதித்தான்” என்று அந்த ருத்திரர்களுக்கு நீலலோகிதா நுசர்த்துவம் சிவபிரானால் இயைவிக்கப்பட்டதென்று சொல்லப்பட்டமையானுமென்க. சிவசாயுச்சியப்பேறுடையார்க்கே அவர் தமக்கே அத்தகைய இந்த நீலலோகிதாது சரபாரிடக்கணத்துவமும் நரநாரூபசாதித் தன்மையினால் கோரசாந்தவிவிதாகாரத்துவமும் சௌழுத்திகபருவத்தில் வெளிப் படையாகவே பிரதிபாதிக்கப்பட்டது. “யானை மலை ஒப்புமையுடையர்கள் பெருமு ழக்கமுடையர்களாய்த் தோன்றினார்கள். நாய் பன்றி ஒட்டகைவடிவினர்கள், குதிரை நரி பசுமுகர்கள், கரடி, மார்ச்சாரமுகர்கள், புலியானைமுகர்கள், காகமுகர்கள், குரக்குமுகர்கள், கிளிமுகர்கள், மகாகசாசுவமுகர்கள், அன்னமுகர்கள், வெண்ணிறத்தர்கள், தார்வாகாடமுகர்கள், சாவுமுகர்கள், ஆமை முதலைமுகர்கள், சிஞ்சுமாரமுகர்கள், மகாமகரமுகர்கள், பருந்துமுகர்கள், மேடமுகர்கள், சாகமுகர்கள், சங்குசோதியர்கள், சங்கமுகர்கள், சங்கவர்ணர்கள், சங்கமாலாசமுகர்கள், சங்கத்துவநிசமாநமுழக்கர்கள், சடாதரர்கள், பஞ்சசிகர்கள், முண்டர்கள், ஒட்டல் வயிறர்கள், சிரசில்லாதவர்கள், அரச, கரடிமுகர்கள், விபீடணர்கள், தபிக்கின் றநாவையுடையர்கள், கண்முகம் சுவாலாவர்ணமுடையர்கள், நான்குதமிட்டி ரங்களுடையர்கள், நான்குநாவர்கள், முட்காதர்கள், கிரீடிகள், மௌலிதரர்கள், குஞ்சி தகுடுமியர்கள், உட்டிணீடர்கள், மகுடிகள், அழகுமுகர்கள், அலங்கிருதர்கள், பத்மோத்பலசிரோபூடணதரர்கள், முகுரதாரிகள், மான்மியத்தோடியைந்தவர்கள், நூற்றுவர் ஆயிரவர்கள் வச்சிரசக்கிரகரத்தர்கள், முசலாயுதர்கள், முசுண்டியாசகரத்தர்கள், கதாகரத்தர்கள், பாரத, முதுகுகளில்கட்டியபாணசமுகங் களையுடையர்கள், சித்திரமாகிய விற்போரிலாசையுடையர்கள், துவசர்கள், பதாகையர்கள், கட்கர்கள், கோடாரியர்கள், மகாபாசங்களோடுயர்த்தப்பட்டகையை யுடையர்கள், கலப்பைக்கையர்கள், சூலபாணிகள், கட்ககரத்தர்கள், சர்ப்பங்களாலெடு க்கப்பட்ட கிரீடமுடையர்கள், மகாசர்ப்பாங்கததார்கள், சித்திராபரணதாரிகள், புழுதியைப் பூசினவர்கள், சேற்றைப் பூசினவர்கள், எல்லாரும் சித்திராம்பரமாலை யர்கள், நீலாங்கர்கள், கமலாங்கர்கள், முண்டவத்திரர்கள், பேரிசங்கமிருதங்கங்க ளையும் பணவங்கள் கோமுகங்களையும் முழக்கிக்கொண்டு கநகப்பிரபையுடையர்க ளாகிய பாரிடர்கள் கூட்டமாயுள்ளார்கள், சிலர் இசைபாடுவோர்கள், சிலர் புருட விடபங்கள், மகிழுநர்கள், தாண்டுநர்கள், மிதக்குநர்கள், குலுங்குநர்கள், மகாபலர்கள், வேகத்தாற்கட்டுண்டு ஓடுநர்கள், காற்றினாலடிபட்ட குடுமியர்கள், மத்தர்கள் போல மகாநாதமுடையர்கள், அடிக்கடி ஒலிப்பவர்கள், சுபீமர்கள், கோரரூபர்கள், சூலபட்ட சபாணிகள், சிவப்பாடையர்கள், சித்திரர்கள், சித்திரமாலை அநுலேபநர்கள், ரத்நசித்தி ராங்கத்தரர்கள், உயர்த்தப்பட்ட கரத்தையுடையர்கள், எதிர்நின்று பகைவரைக் கொல்பவர்கள், சூரர்கள், சகிக்க முடியாத விக்கிரமத்தையுடையர்கள், ரத்தம்வசை களைக்குடிப்பவர்கள், மாமிசம் குடல்களைப்புசித்தல் செய்பவர்கள், சூடாகலை யர்கள், கர்ணகாரர்கள், மிகஒடுங்கினவர்கள், மந்தரோதரர்கள், மிகக்குறியர்கள், மிக நெடியர்கள், தொங்குபவர்கள், அதிபைரவர்கள், காமகாரபார்கள், சித்தர்கள், திரை லோக்கியத்திற்கும் ஈசுவரேசுவரர்கள், நித்தியாநந்தர்கள், மிகுமகிழ்ச்சியர்கள்,

வாகீசர்கள், விமற்சரர்கள், அட்டகுணம் ஐசுவரியத்தையடைந்தும் எவர்கள் ஆச்சரியத்தை அடைகின்றிலர்கள், எவரது கருமங்களால் பகவானாகிய பவன். நித்தியம் ஆச்சரியமடைகின்றான், மநோவாக்காயநிரதர்களாகிய அவர்களை ஒளரசர்களாகிய புத்திரர்கள் போலப் பாதுகாக்கின்றான், எவர்கள் குரோதர்களாய்ப் பிரமவிரோதிகளது ரத்தங்களைக் குடிக்கின்றார்கள், சுருதத்தினாலும் பிரமசரியத் தினாலும் தபசினாலும் நியமத்தினாலும் எவர்கள் சூலாங்கனை வழிபட்டு அவனது சாயுச்சியத்தை யடைந்தோர்கள்" என்று இவ்வண்ணம் சௌழுப்திகபருவத்தில் சொல்லப்பட்டது. அவர்கள் தாம் : விவிதாகாரமுடையர்கள் குரூரசாந்தர்கள் ருத்திரர் கள் நீலலோகிதரது கட்டளையினால் சகத்தினது சம்ரக்ஷணத்தின் பொருட்டு ஆண்டாண்டிருப்பர்கள்.. ருத்திராத்தியாயத்தில் "நமஇஷுமத்ப்யோதவாவிப்யச்ச" என்று தொடங்கி "சுவபதிப்யச்சவோ நம" என்பது முடிவாகிய சதுர்த்தியந்த பதங்களினால் பிரதிபாதிக்கப்படுகின்றார்கள். அவர்கடாம் ஆண்டு "சஹச்சிராணி சஹச்சிரச" என்னும் அநுவாகத்தில் தேவவிரதங்களில் பிரதமசாமத்திலும் நாநாஸ்தாநங்களிலுமிருக்கின்ற சகலதேவர்களது நியாமகத்தன்மையராகவும் பிரதிபாதிக்கப்படுகின்றார்கள்; அவர்கள் தாம் ஆயுஷ்யசூக்தத்தில் "திவ்வியர்கள் கணங்கள் வெகுரூபர்கள் புராணர்கள்" என்று. நெடுங்காலமாகச் சிவசாயுச்சியத்தை அடைந்து திவ்வியஸ்தாநத்திலிருப்பவர்கள் புராணர்கள் முன்னுள்ளோர்களே லீலையின் பொருட்டவதரிக்கும் பிப்பிராயத்தால் வெகுரூபர்கவாயினர்கள் என்றுணர்த்தப்பட்டது. இவ்வண்ணமே சிவபிரானால் தனது லீலையின் பொருட்டுத் திரியக்குயோநியாகாரபரியந்தமாகச் செய்யப்பட்ட முந்திய ருத்திரசிருட்டியினது தன்பொருட்டாகிய ஆநுஷங்கிகமானது பூமியில் தருமசம்ஸ்தாபநத்தின் பொருட்டு அவதரிக்கத்திருவுளங்கொண்ட நாராயணனால் தேவர்களை நோக்கிச் சொல்லப்பட்ட தென்று சபாபருவத்தில் பிரதிபாதிக்கப்பட்டது. ஆண்டுத் தேவர்களை நோக்கிப் பகவான் சொல்லிய வசநம் வருமாறு. "மாநுடலோகத்திற்பிறவுங்கள் விசாலாக்கன் சர்வபூதமகேசுவரன் சர்வஞ்ஞன் சங்கமங்களாகிய பூதங்களை ஏகப்பிரகாரமாகப் படைத்தான். திரியக்குயோநியையடைந்தவர்களோடு கோவிந்தன் பிறக்கட்டு மென்று, அவைகளெல்லாம் சுரர்களோடியைந்தன சுரேசுவரர்காள்" என்பது. ஈண்டு மாநுடலோகத்திற்பிறவுங்கள் என்று நியோகித்த அருந்தரம் உவர்க்கத்தக்க மாநுட சநநம் தேவர்களாலடையப்படுமென்பதெங்ஙனம் என்று கொண்ட அவர்தமது. அநுசயத்தைப் பரிகரிக்கும் பொருட்டன்றே பகவான் இவ்வண்ணம் சொன்னான். எங்ஙனம்? சர்வபூதமகேசுவரன் சர்வஞ்ஞன் நீலலோகிதருத்திரன் சுரர்களோடியைந்த சர்வசங்கமங்களையும் ஒரேபிரகாரமாகத்தானே தேவமாநுடதிரியக்குக்களில் விசேடமின்றித் தனக்குத் துல்லியமாகிய பராக்கிரமத்துவாதிகளால் ஏகரூபமாகவே படைத்தான். எதன்பொருட்டு? கோவிந்தன் தருமசம்ஸ்தாபநத்தின் பொருட்டுப் பூமியில் அவதரிப்பவனாகிய விட்டுணு திரியக்கு யோநிகதர்களாகிய சகாயர்களோடு கூடப் பிறக்கட்டுமென்னுமிதன்பொருட்டு, எல்லாரையும் விசேடமின்றிச் சிருட்டிப் பதில் திரியக்குயோ நிசநநத்திலும் உவர்ப்புளதாகாது. ஆதலால் மாநுடஜநநத்தில் உங்களால் உவர்ப்புச் செய்யத்தக்கதன்று என்றுரைக்கப்பட்டது. அதன்பின் தேவர்களால் அப்படியே செய்யப்பட்டதென்றும் அநந்தரசுலோகத்தாலுணர்த்தப் பட்டது. என்னை? "புவநேசுவரர்களாகிய அந்தத் தேவர்களெல்லோரும் கண்ணனால் இப்படியே சொல்லப்பட்டவர்களாய்த் தைத்தியதாகவர்களைக் கொல்லுநர்களாய்ப்

பிறந்தார்கள்" என்றபடி. ஆதலால் விவிதாகாரர்களாகிய சிவபாரிடர்க்குள்ளே எவர்கள் பிசாசாதிரூபமுடையர்கள் அவர்களுக்கு அந்தந்தச் சாதியுசிதமாகிய உணவே ஆண்டாண்டுப் பிரதிபாதிக்கப்பட்டது பிறிதில்லையென்க. கண்டாகர்ணனெ ன்னும் பெயருடைய அத்தியந்தவிட்டுணுபத்தனுக்குமன்றே பிசாசினது மாமிசரத் தவுண்டி கைலாசயாத்திரையிற்றானே பெரிதும் விரித்துரைக்கப்பட்டது. சவமாமிச முதலியவற்றை உட்கொள்வது பிசாசாதிசாஸ்திரத்துணிபென்றுதானே கண்டா கர்ணனால் கண்ணனை நோக்கிச் சொல்லப்பட்டதென்று ஆண்டே பிரதிபாதிக்கப் பட்டது. "பின் பிராமணன் கொல்லப்பட்டோனது சவத்தைச் சீக்கிரம் எடுத்துக் கொண்டு கோரமும் கேசத்தாற்பசந்ததுமாகிய பிசிதத்தை இரண்டாக்கி அதன்பின் கண்டமாக எடுத்து முயற்சியோடு தீர்த்தத்தினாற் புரோக்கித்து அதிமங்களமாகிய பாத்திரத்தில் வைத்து அஞ்சலி செய்து நமஸ்கரித்து வணங்கினவனாய்நின்று தேவேசனாகிய சநார்த்தனைப் பார்த்து இதனைச் சொன்னான். சகந்நாத, இதனை என்று கொள், பிரபூ, நினக்கு யோக்கியமான உண்டி. சகந்நாத, பத்திவணக்கமுடைய வர்களது வழிபாடு நின்போல்வரால் எல்லாப்பிரகாரத்தாலும் என்று கொள்ளத்தக்கது. விட்டுணு, ஈண்டு விசாரணை செய்யத்தக்கதன்று அரீ, பத்திவணக்கமுடையனால் எது கொடுக்கப்பட்டது உடையானால் அது என்று கொள்ளத்தகுந்தது. புதிது, நன்றாக அமைக்கப்பட்டது, பிராமணமாகிய சவம் உத்தமம், உட்கொள்ளத்தகுந்தது, எல்லா வருணங்களுள்ளும் பிராமணசவம் உத்தமம். பிசிதாசநர்களாகிய எங்களுக்குச் சாஸ்திரங்களால் நிச்சயிக்கப்பட்டதன்றே" என்றபடி. அதனால் பிசாசாதிரூபர்களெ ன்ற சிவபாரிடர்கள் சிலர்க்கு இருப்பிடம் உண்டி முதலிய சமயங்களில் அவரவர் சாதியுசிதமாகிய ரத்தமாமிசவுண்டி கொள்ளப்பட்டது உடையானுக்கு இழுக்கை வருவிப்பதில்லையென இவையெல்லாம் அநவத்தியமாதல் காண்க. ஈண்டுக் கூறியவிதனால் "கிரியையை ஒழிந்தோன். அசுசியுடையன் மாநமிலன் வரம்பு கடந்தோன் பொருட்டு இச்சையில்லாதோனாகியும் வாலையை அளித்தேன் சூத்திரன் பொருட்டு ஆதிமொழியைப் போல" என்பது முதலியவற்றை உரைத்துத் தமோகுணத்தின் மிக்கானாகிய தக்கனுக்கு உடனே தண்டபதம் நிகழ்ந்தமை பாகவதாதிகளில் வர்ணிக்கப்பட்டதும் கேட்டிருந்தும் மயாநவாசநிரதன் நித்தியமசு சியன் பிசாசாதிகளோடு வசிப்போன் ருத்திரன் சாத்துவிகர்களால் சேவிக்கற் பாலனல்லன்" என்று அத்தக்கனையொப்பத் தாமசர்களாய் எந்தத்துர்மதிகள் புலம்பு வர்களோ அவர்களெல்லாம் ஓட்டெடுப்பிக்கப்பட்டார்களென்பது கடைப்பிடிக்க. அல்லதூஉம், தேவர்களும் ஆன்மசஞ்சோதநம் செய்யப்பெற்றவர்களாய்ச் சுத்தர் களாயே சிவபிரானது தரிசநத்தை அடைகின்றார்கள் பிறிதில்லையென்பது ஆரிட வசநங்களால் வெகுபிரகாரமாக உணரப்படும் அங்கனமன்றே! அரிவம்மிசத்தில் திரிபுரவதத்தை. இச்சித்தவர்களாய்ப் பிரமாவினாற் பிரேரிக்கப்பட்டவர்களாகிய தேவர்கள் சிவாலயத்தைச் சேருதற் பொருட்டும் சிவதரிசரும் கிடைக்கும் பொருட்டும் தவஞ்செய்தார்களென்றுரைக்கப்பட்டது. எங்ஙனம்? "பாரத, மரங்களினா லும் வாக்குக்களினாலும் அவனது வாக்கியத்தை என்றுகொண்டு எல்லாரும் ருத்திரர்களோடியைந்து விந்தியபாதத்திலும் மேருவிலும், மத்தியிலும் பிருதிவியின் கண்ணும் பூமியையடைந்தார்கள். நிருப, காசியபேயர்களாகிய அவர்களெல்லாரும் யோகவுணர்ச்சியர்களாய் முநிகளாய் வநசாரிகளால் தேகங்களினின்றும் விடுபட்ட னவும் சுவயம் ஞாநிகள் ஆசையற்றவர்களுமாகிய உக்கிரர்களாற் கிரகிக்கற்

# பிரமதருக்கஸ்தவம்

பாலனவும் மிருதுக்களும் சுபங்களுமாகிய தோல்களைத் தரித்துக்கொண்டு அரனை யடையும் பொருட்டுப் பிரமசங்கிதையைச் செபிப்போராயினார்கள். குருக்களுளு யர்ந்தோய், புலித்தோலாடையர்களாகிய தேவர்களெல்லாரும் பின் அந்தரத்தி லெழுந்து மாயையினால் தெரியப்படாத சிவாலயத்திற் சென்றார்கள்" என்றதனாலென்க. வாமாபுராணத்திலும் "அதன்பின் சுரர்களாகிய அந்தத் தேவர்களெல்லாரும் முராரியை அடைந்து அப்போது நமஸ்கரித்துச் சராசரமாகிய சகம் கலங்கியதாகச் சொன்னார்கள். பகவான் அதைக் கேட்டுச் சிவாலயத்திற்குப் போவோம் மகாஞாநியாகிய அவன் சகத்தினது கலக்கத்திற்குக் காரணத்தை அறிவனென்று சொன்னான். இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் வாசுதேவனால் அப்படியே சொல்லப்பட்டவர்களாய் விட்டுணுவை முன்னிட்டுச் சிவாலயத்திற்குச் சென்றார்கள். அங்கே தேவனையேனும் இடபத்தை நந்தியையேனும் தரிசிக்கப் பெற்றிலர். அஞ்ஞாநவிருளால் மறைப்புண்டவர்களாய்ச் சூநியமாகிய மலையையே கண்டார்கள். மகாசாந்தியுடைய விட்டுணு மூடதிருட்டிகளாகிய அந்தத் தேவர் களைப் பார்த்து முன்னே யெழுந்தருளியிருக்கின்ற மசேசனைத் தரிசிக்கவில்லை யாவென்றுரைத்தார். கிரிசாபதியாகிய தேவேசனைக் காண்கின்றிலம். எதனால் எங்களுடைய கண்ணானது மடக்கப்பட்டது ஆண்டுக் காரணத்தை அறிகின்றிலம். தேவிர்காள், நீங்கள் அபராதிகள் பாபிகள் மிரிடாநியினது கருப்பத்தை ஊறு செய்தவர்கள். பொருளாசையுடையர்கள். எதனால் முன்னிருப்பவனைக் கண்டீர் களாயும் காணவில்லை அதனால் உங்கள் விவேகம் சூலியாகியதேவனால் கவரப்பட்டது என்று அறியப்பட்டது. அதனால் காயவிசுத்தியின் பொருட்டும் தேவ திருட்டியின் பொருட்டும் தப்தகிருச்சிரங்களால் பரிசுத்தர்களாய் ஆதரவோடு ஈசுவரனிடத்தில் தாநத்தைச் செய்யுங்கள் (தியாநியுங்கள்) என்று சநந்மூர்த்தி அவர்களுக்குச் சொன்னான்" என்று சொல்லப்பட்டது. அதனநந்தரம் தப்த்கிருச்சிரா சரணத்தை முற்கொண்டதாகிய சிவபிரானுக்குரிய மகாசநமுதலிய பூசையைச் செய்தன்றே தேவர்களால் சிவதரிசநம் அடையப்பட்டதென்று முதலில் விரித்துரை க்கப்பட்டது. ஸ்காந்தத்தில் கேதாரகண்டத்திலும் மேருபிருட்டத்தில் ராவணவதோபா யத்தை ஆராய்ந்தவர்களாகிய தேவர்கள் மகத்தாகிய தபசினால் சிவபிரானைப் பிரீதி செய்து வரம் பெற்றவனானான் ராவணன். அதினும்மிக்க தவவலிமையின்றி உங்களால் அவனை வெல்லுதல்முடியத்தக்கதன்று என்று விட்ணுவினால் போதிக்கப்பட்டவர்கள் அப்படியே தவஞ்செய்யமுடியாதவர்களாய்ச் சிவபிரானை வழிபட்டு ராவணனைவெல்லுவோமென்னும் கருத்தினால் சிவலோகத்தை அடைந்தவர்கள் சிவராஜதாநிவாயிலிலிருக்கின்ற. நந்திகேசுவரரால் தவங்களினால் காயசோதநம் செய்யாது நீங்கள் சிவபிரானைத் தரிசித்தல் முடியத்தக்கதன்று என்று போதிக்கப்பட்டவர்களாய் முன்னே தம்மிடத்தில் செய்த அபராதத்துவத்தால் சபிக்கப்பட்ட ராவணனைத் தொலைக்குங்கருத்துடைய அந்நந்திகேசுவரரால் வைகுண்டத்தை அடைந்து நாராயணன் காட்டப்பட்டானாகத் தானாகவே தவஞ்செய்யமுடியாத அந்நாராயணனால் சீதைபாற் கொண்ட அத்தியந்தமநுசித மாகிய அநுராகமோகத்தினது அநுவிர்த்தியை வருவித்து ராவணனது தவவீரியத்தை நழுவுதல் செய்து தேவர்களது அபிமதமாகியகாரியம் செய்து முடிக்கத்தக்கது என்று அதற்குரிய உபாயத்தை எடுத்துச்சொல்லித் தேவர்கள் ஆற்றப்பட்டார்கள். அதன்பொருட்டு நாராயணன் சீதாரூபமாகிய பிரமவித்தையோடியைந்து தானே

அவதரித்தானென்று விரித்துரைக்கப்பட்டது. ஆண்டுச் சிவதரிசநத்தின் பொருட்டுத் தவஞ்செய்யப்படாமையால் தேவர்களுக்குச் சிவதரிசநம் கிடைக்கவில்லையென்று வெளிப்படையாகவே சொல்லப்பட்டது. இந்தப் பிரகாரம் சுத்தர்களாற்றானே தரிசிக்கப்படத்தக்கவன் சிவபிரானென்பது அந்நுவயவியதிரேகங்களால் புராணங்களில் பிரதி பாதிக்கப்பட்டது. பாகவதத்திலும் மலிநாந்தக்கரணனாகிய தக்கனுக்கு யாகத்தின் பொருட்டுச் சிவபிரானை அழைக்காமைவாயிலாற்றானே சிவதரிசநம்கிடைக்கவில்லை என்பதை உபபாதநம்பண்ணி வீரபத்திரரால் அத்தக்கனது யாகம் அழிக்கப்பட்ட அநந்தரம் அவனது பாதுகாப்பின் பொருட்டுத் தேவர்களோடு கைலாசத்தையடைந்து வெகுபிரகாரமாக வழிபட்ட பிரமாவைக் கடைக்கண்சாத்தியருளிய சிவபிரானது பிரசாதத்தினாற்றானே பிரபாவத்தோடி யைந்த சிவாவலோகநம் கிடைத்தது என்று பிரதிபாதிக்கப்பட்டது. எங்கனம்? “அவன் சிரசுபொருத்தப்பட்ட காலையில் தக்கன் ருத்திரனால் பார்க்கப்பட்டோனாய்த் தூங்கினவன் போல உடனே எழுந்தான். மிரிடனை முன்னே தரிசித்தான். அப்போது சிவத்துவேஷத்தாற்கலங்கினமனசுடையவனாகிய பிரசாபதி சிவாவலோகநத்தால் சரற்காலத்துச்சந்திரனைப்போலும் அமலனாயினான். அநுராகத்தால் சிவத்தோத்திர த்தின் பொருட்டுப் புத்திசெய்தோனாயும் சத்தியி லனாயினான் ஔத்கண்டியத்தால் பாஷ்பகலையோடு சம்பிரேதையாகிய மகளை நினைந்து” என்றதனாலென்க. மகாபாரதத்திலும் வெகுகாலமாகத் தவஞ் செய்து சிவபிரானை வழிபட்ட நாராயணனது சிவதரிசநப்பிரஸ்தாவத்தில் பெருந்தவத்தவராய்ப் பாபநீங்கினவர் களாற்றானே சிவபிரானைத் தரிசித்தல் முடியுமென்று சொல்லப்பட்டது. எங்கனம் - துரோணபருவத்தில் "நல்லவாக்குக்களையுடையோர் எவரெவரால் வாக்கினால் இனிது துதிக்கப்படுவோனைச் சலம் ஆகாயம் பிருதிவி சந்திரசூரியர்கள் அக்கிநி வாயு ஆன்மாவைச் சுரேசனைச் சுரர்களாயினும் பின்னவிருத்தியுடையோர் எவர் பொய்யர் நாஸ்திகர் பாபசீலர் பிரமவிரோதிகள் எவர்கள் அவர்கள் தரிசித்தல் முடியாது. மாநவராயினும் சாதுவிருத்தியுடையோர் பாபங்கள் நசித்தமையினாற் சோகங்கள் தொலைந்தோர்'அவனிடத்திற் பதித்த மநசுடையராகிய பிராமணர்கள் எவனை அமிர்தயோநியாகப் பார்க்கின்றார்கள், தபசினாலும் பக்தியினாலும் துதிக்கற்பாலன் விசுவரூபனாகிய அந்தத் தேவனைத் தரிசித்தா' னென்றதனாலென்க. இனி விரிப்பிற்பெருகும், அமைக. ஈண்டுக் "கறைமிடற்றிறைவ” என்றவிளியினால் பார்வதியை மணந்தோனாய் இந்தப் பிரமாண்டத்திற்கதிபதியாய்ப் பூகைலாசவாசி யாயிருக்கின்ற ஸ்ரீகண்டமூர்த்திபாலனவே ஈண்டுக்கூறிய இயற்கையவாய சரிதங்களென்பதும் இவை சாக்ஷாத்பரமசிவனாகிய முதல்வன் பாலனவன்றென்பது முய்த்துணர்ந்துகொள்க. இதனால் இப்படிப்பட்ட முதல்வனது சரித்திரரகசியம் தேவர்களாலுமளவிடப்படாததொன்றன்றே! அதனியல்பை ஈண்டுச் சொல்லுதற்க திகாரம் வாய்த்ததெங்ஙனமென்றாசங்கிப்பாரை நோக்கி அதனது ரகசியதத்துவத்தை வெளியிடும் பொருட்டாவதிதுவன்று மற்றுப் பிறிதொன்றன் பொருட்டென இந்நூலின் முடிபு விளக்கி அதுவாய்த்த முறைமை உணர்த்துமுகத்தால் சாதகோபந்நியாசம் பாதகோத்தாரணமென்னுமுபயவித தருக்கத்தினாலும் அவாங் மநோகோசர வஸ்துவாகிய பிரமப்பொருளென்று நிச்சயிக்கப்பட்ட முதல்வன் சிவபிரானென்று முடிக்கப்பட்டது. (50)

# பிரமதருக்கஸ்தவம்

**பன்னரியோயென்னுளம்பசுபதியேசாந்மலிமலர்நிகர்ப்பவரா**
**மன்னியதேவாதிலகுபலத்தையடைவிப்போரவரைவிட்டென்று**
**நின்னருண்மணத்திப்பியபிருங்காவலீடமாம்பதாம்புயநிலத்தே**
**தொன்மதியணிந்தோய்தொடருகநிதமுந்தூங்கிசையளித்தொழிலினையே.** 51

(எ-து) இந்தப்பிரகாரம் ஆன்மாக்களாகிய பசுக்களையெல்லாம் தனது அடிமைகளும் உடைமைகளுமாகக் கொண்டு பசுபதியெனப்படும் சிவபிரானொ ருவனே தன்னைச் சரண்புகுந்தார்க்கு அவர் விரும்பியவாறுதான் அதனின் மேற்படத்தான் அவரின் புறுமாறு பலங்களையளித்துத் தனதருணிழலிற்றன்னின் வேறின்றி வைத்துப்பாதுகாக்கும் பெருங்கருணை வெள்ளமாகிய பரப்பிரமப் பொருளென்பது சாதகங்களாகிய பிரமாணவசநங்களினாலும் பரதகநிராகரணங் களினாலும் தருக்கித்து நிச்சயிக்கப்பட்டமையால் இலவம்பூவோடொத்தவராய் அதிலகு பலமாத்திரமளிப்போராய்ச் சிவனுடைமைகளும் அடிமைகளுமாய்க் பசுக்களாகிய எனைத்தேவர்களைக் கைவிட்டுப்பசுபதியும் பரப்பிரமமுமாகிய சிவபிரான்றிருவடித்தாமரைக்கட்சென்று அதன்கட்பெருகும் சிவபோகப்பெரு வெள்ள த்தை நுகருமாறு மநமாகிய பொறிவண்டைச் செலுத்தித் தமது அறிவு முழுதும் அச்சிவபிரான்றிரு வடிநிறைவிலடங்கிநிற்றல் இந்நூலையுள்ளிட்டுத் தெளிந்தார்க்குக் கடப்பாடென்பதாம்.

திப்பியபிருங்கங்களென்றது "இருக்குக்களே வண்டுகள், இருக்கு வேதமே புட்பம், யசுர்களே வண்டுகள், யசுர்வேதமே புட்பம், சாமங்களே வண்டுகள், சாமவேதமே புட்பம், அதர்வமொழிகளே வண்டுகள், இதிகாசபூராணம் புட்பம்" என்று சந்தோகோபநிடதத்திற்சொல்லப்பட்ட பிருங்கங்களைன்க. அவற்றால் அவலீடம் செய்யப்படுதல் அவற்றாற்பிரதிபாதிக்கப்படுமியைபினாற் சேவிக்கப்படுதலென்னும் பொருண்மேற்று. இதனால் பசுக்களாகிய எனைத்தேவர்களைக் கைவிட்டுப் பரப்பிரம மென்று நிச்சயிக்கப்பட்ட பசுபதியாகிய சிவபிரான்றிருவடிக்கட்செய்யும் அவ்விய பிசார திடபக்தியே இந்நூற்பயனாமென்றுணர்த்துமுகத்தால் அவனருணாடி நின்றமை விளக்கப்பட்டது. (51).

**பிரமன்மான்முதலோராற்புகழ்ந்திடுமெய்ப்பிரமதர்க்கத்தவநூலீ**
**தரவன்புக்கெளியைநீயெனவன்புமாத்திரத்தமைக்கப்பட்டதுவே**
**பாசிவபவநிர்க்குணமதாயினுநின்னருளினானின்னிருபதத்தே**
**விரவுபூசைக்காமலரினநெறியையிதுநிதம் விருத்தி செய்குகவே.** 52

(எ-து) உலகத்திற் சாதகராயினோர் முதல்வன்பணியெனச் செய்யும் செயலெல்லாம் தன்பணியென அம்முதல்வன் என்று கொள்வது தம்வயமிழந்து அவனருள்வயத்தராய்நின்று அவன்பாற் கசிந்துகசிந்துருகிப் பிரவகிக்கும் அன்பு வடிவாகிய அவரவர்கருத்துவகைபற்றியே செயல்வகைபற்றியன்றென்பது சுருதி யுத்திய நுபவசித்தமாகலானும் அப்படி அம்முதல்வன் என்று கொள்வது தான் அன்புக்கெளியனாகிய அவனாற்றவிர்க்கவும்முடியாது தானே தவிர்வதுமாகாது அவனின் வேறின்றி அவன்றானேயாய் இயற்கையானே என்றுமவன்பானின்று நிலவுமவனதருளின் செயலெனப்பட்டு அவன்றனக்குப் பெரியதோர் கடப்பாடாய்

முடிதலானும் ஈண்டுமிந்நூல்யாக்கப்பட்டு முடிந்தது இதன்கட் குற்றநீக்கிக் குணங்கொண்டு கோதாட்டி இதனைத் தன்பணியென என்று கொள்ளுமாறு அம்முதல்வனருளை வேண்டி “அர்ச்சறைபாட்டேயாகும்” என நறுமலர் பல கொண்ட ருச்சித்து அவனருள்வழிப்பட்டுநின்ற அன்புபற்றிய செயலே அதனின் வேறாகிய புலமைமிகுதிபற்றிய செயலன்றென்பது தேற்றமாதல் கடைப்பிடித்து அன்பர்க்கெளி வந்தகருணை வள்ளலும் முதல்வனும் பிரமமுமாகிய சிவபிரான்றிருவடிக்கண் என்றும் அருச்சநையாகக்கொண்டிதனையோதுதல் அவனதருட்பெருவாழ்வில் அவாமிக்குடையராயிதன் கண்விருப்பமுடைய சாதகர்க்குத் தக்கதென்பதாம்.

பாவக்கிராகியத்துவம் "பாவக்கிராகியனை அநீடனெனப்படுவோனைப் பாவாபாவகரனைச் சிவனை” என்னும் சுவேதாச்சுவதரமந்திரத்தினாலும் "கிருதகிருத்தியன் திருப்தனாகிய எனக்கு அமரர்களால் செய்யத்தக்கது என்னை? புறம்பேதான் உள்ளே தான் பாவம் என்னாற் கிரகிக்கப்படும்" என்னும் சிவவசநங்களாலும் பிரசித்தமென்க. பாவம் - அபிப்பிராயம் - அன்பு. இதனால் இந்நூல் சிவபிரான்றிருவடிக்கட் புட்பாஞ்சலியேயென்னுமாறு சமர்ப்பிக்கப்பட்ட ஸ்தவரூபமாயியற்றப்பட்டமை விளக்கப்பட்டது. (52)

பிரமதருக்கஸ்தவம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

தீக்ஷிதர்பெருமான்றிருவடிவாழ்க.

மெய்கண்டதேவன்றிருவடிவாழ்க.

# பிரமதருக்கஸ்தவம்

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

**திருநாவுக்கரசுநாயனார்**
**தேவாரம்**

மைப்படிந்தகண்ணாளுந்தானுங்கச்சி
மயாநத்தான்வார்ச்டையான்மாசொன்றில்லா
னொப்புடையனல்லனொருவன்ல்ல
னோரூசன்ல்லனுவமனில்லி
யப்படியானந்நிறத்தனவ்வண்ணத்
தனவனருளேகண்ணாகக்காணினல்லா
லிப்படியனிந்நிறத்தனிவ்வண்ணத்த
னிவனிறைவனென்றெழுதிக்காட்டொணாதே.

திருச்சிற்றம்பலம்.